B. V. ANANDALWAR



B19

B. V. ANANDALWAR.



பொன் விழாக் காணும்

B. V. Anandalwar

கலைமகள்

மாத இதழுக்கு

ஆனந்த விகடனின்

நல்வாழ்த்துக்கள்

# நியூட்ரின்
# சாக்லேட் எக்லேர்



# Our album records 273,000 success stories

273,000 diesel engines functioning successfully in various applications —agricultural, industrial and vehicular—speak their own story of engineering excellence.

Simpsons diesel engines have earned a reputation for economical operation and reliable service. With a nationwide network of efficient parts and after sales service, dependability is built into each prime mover. As the 273,000 success stories amply prove.







MAC/S/811 R

Simpson & Co. Ltd

861/862, Anna Salai, Madras-600 002.

Simpsons
an impetus to
Indian industry.

**A Unit Company of the Amalgamations Group, Madras**

# Diana Shutters Private Limited

**'DIANA HOUSE'**

31, Walltax Road

Madras-600001

*Phone: 39682/3 - 36577*

*Grams: DIANADOORS*

*Telex: 041-7385*



*THE PIONEERS IN THE FIELD OF ROLLING SHUTTERS & ROLLING GRILLS WITH ISI MARK*



பெருமிதத்துடன்
பொன் விழா காணும்

# கலைமகள்

இலக்கிய,
கலாசார மாத இதழுக்கு
அதன் இலக்கியப் பணி
மேன்மேலும் தொடர எமது
பொன்னான வாழ்த்துக்கள்.



## கரூர் வைஸ்யா பாங்க் லிட்.,

பதிவு அலுவலகம்: கரூர், தமிழ்நாடு.

G. வெங்கடேசம்
சேர்மன்

அந்நியச் செலாவணி வர்த்தகம் புரிய
அங்கீகாரம் பெற்ற வங்கி

எமது காயத்ரி சேமிப்புத் திட்டத்தில்
சேமித்து பயன் அடைவீர்

ELEGANT

—V சங்கரலிங்கம்



—நாகசுந்தரம்

# குறிப்பிட்ட நேரப்படி உங்கள் பொருட்கள் கொண்டு சேர்க்கப்பட்டால்...



# ...அது சதர்ன் ரோட்வேஸ் தான்

உங்கள் பார்சலை நேரப்படி கொண்டு சேர்ப்பது எவ்வளவு இன்றியமையாதது என்பது எங்களுக்குத் தெரியும். அதனால் தான் நாங்கள், போக்குவரத்துத் தொழிலில் முதன் முதலாகக் கம்ப்யூட்டர் வசதியை அமைத்து முதன்மையாகத் திகழ்கிறோம். மற்றும் எங்களுடைய 550 விற்பனை மற்றும் பணி நிலையங்களையும் டெலக்ஸ் வசதி மூலம் இணைத்து ஒவ்வொரு பார்சலும் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட இடத்தில் உள்ளதா என அறிந்து கால அட்டவணைப்படி இயக்கத்திற்கு உறுதி அளிக்கிறோம்

## சீரிய வழிமுறைகள்

கடந்த ஆண்டுகளில், எங்கள் வண்டிகள் கடிகாரம் இயங்குவதுபோல் சரியான நேரப்படி இயங்கக்கூடிய அளவில் புதுமையான வழிமுறைகளை வகுத்துள்ளோம்.

ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊரிற்கு அனுப்பப்படும் எங்களது முறையினால் உங்கள் பொருட்கள் ஒரு பொழுதும் காத்திருக்கத் தேவையே இல்லை. வண்டியில் நிரம்ப பார்சல்கள் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, ஒவ்வொரு வண்டியும் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு குறிப்பிட்ட நேரப்படி கிளம்பிச் சென்றுவிடும்

உங்கள் பொருட்களுக்கு 'புக்' செய்ததிலிருந்து 'டெலிவரி' ஆகும்வரை பாதுகாப்பு அளிக்கும் வகையில் நாங்கள் ஒவ்வொரு கிளையிலும் கிடங்கு வசதியினைப் பெற்றுள்ளோம். அத்துடன், நாங்கள் தொடர்ச்சியான பல சோதனை முறைகளையும், குறுக்கு சோதனை முறைகளையும் கையாண்டு எப்பொழுதும் இரும்புக்கரம் கொண்டு காப்பது போல பாதுகாக்கிறோம்

வண்டி கிளம்பும் இடத்தில் ஸ்டேஷன் மானேஜர் பார்சல்களைச் சரிபார்த்து வண்டியைப் பூட்டிவிடுகிறார். வண்டி சேரும் இடத்தில், அங்குள்ள ஸ்டேஷன் மானேஜர் தான் மறுபடியும் கதவினைத் திறந்து பார்சல்களைச் சரிபார்த்துப் பெறுகிறார்

சுருக்கமாகச் சொன்னால், எங்கள் செயல் ஒவ்வொன்றும், உங்கள் பார்சல்களை விரைவாகவும், பத்திரமாகவும், நம்பகமாகவும் கொண்டு சேர்ப்பதற்கு உறுதி அளிக்கின்றது.

இதையெல்லாம் மீறி, எப்போதாவது, எங்காவது குறை நேர்ந்தால் நாங்கள் நஷ்ட ஈட்டினை உடனே கொடுத்துவிடுகிறோம். அது எங்களால்தான் முடியும்- ஏனெனில் இவ்வாறு ஏற்படுவது எப்போதோ ஒரு முறைதான்.

ஆகவே, நீங்கள் தென்னிந்தியாவில் எந்த இடத்திற்காவது உங்கள் பொருட்களை அனுப்ப எண்ணினால் சதர்ன் ரோட்வேஸில் 'புக்' செய்யுங்கள். அது போதும் – உங்கள் பொருள் பாதுகாப்பாக, விரைவாக, குறிப்பிட்ட நேரப்படி அதற்கான இடத்தை நிச்சயமாக அடையச் செய்வது எங்கள் பொறுப்பு.

நினைவிருக்கட்டும், சதர்ன் ரோட்வேஸ் தென்னிந்தியாவின் மிகப் பெரிய பார்சல் சர்வீஸை தன சொந்த லாரிகளைக் கொண்டு நடத்தும் நிறுவனம். அவைகள் ஒரு நாளைக்கு 72,000 கிலோ மீட்டர்களுக்கும் அதிகமாக ஓடுகின்றன. 550 தொடர்பு நிலையங்கள் மற்றும் 2,500-க்கும் மேற்பட்ட விசுவாசமான ஊழியர்களைக் கொண்டுள்ளது —சதர்ன் ரோட்வேஸ். இவர்கள், நீங்கள் எங்களுடன் தொடர்புகொள்ளும் போதெல்லாம் உங்களுக்குப் பணிபுரியக் காத்திருக்கின்றார்கள்.







**சதர்ன் ரோட்வேஸ் லிமிடெட்**
மதுரை

கிளைகள்: சென்னை, பெங்களூர், கோயம்புத்தூர், சேலம், திருச்சி, திருநெல்வேலி, விஜயவாடா, செகந்திராபாத் மற்றும் அனந்தபூர்.

**சதர்ன் ரோட் வேஸ் – சாலையில் இதைவிடச் சிறந்ததோர் மார்க்கமில்லை**

SAA/SRL:2459

—V. S Mani

# முதலீட்டை மிஞ்சிடும் விலை மதிப்புமிக்க டிராக்டர்

## எம்.எ.ஃப் 1035







அனைத்து விவசாயப் பணிகளுக்கும் அத்தியாவசியமான கருவிகள், உபகரணங்கள் கொண்ட எம்.எஃப். 1035 டிராக்டர், இருபது வருடங்களுக்கும் மேலாக உழவர் பெருமக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகியுள்ளது.

எம்.எஃப். 1035 டிராக்டரின் தனிச் சிறப்புகள்—

—பாரத்தை எடுத்துச் செல்வதில் மிகப் புதியதான பெர்குஸன் ஹைட்ராலிக்ஸ் முறையில் இயங்குகிறது.

—ஆட்டோமேடிக் டிராஃப்ட் கண்ட்ரோல், பொசிஷன் கண்ட்ரோல் மற்றும் ரெஸ்பான்ஸ் கண்ட்ரோல் அமைந்திருப்பது.

இன்றைய வேளாண்மைத் தொழிற்துறையில் புதுமையின் உருவகமாகிய எம்.எஃப். 1035 டிலக்ஸ் டிராக்டர், டாஃேபயின் தர முத்திரையோடு திகழ்கிறது, சௌகரியமாகவும், சுலபமாகவும், அரும் திறனோடும் இயங்கப் பல அம்சங்கள் பெற்றது—எம்.எஃப். 1035 டிலக்ஸ். நாடெங்கிலும் 200க்கும் அதிகமான விற்பனை, மற்றும் பராமரிப்புக் கேந்திரங்களின் (சர்வீஸ்) மூலம் டாஃேப உங்களுக்குத் தனிச் சிறப்பாகச் சேவை செய்கிறது. முதலீட்டை மிஞ்சிய மதிப்பு மிக்கது—எம்.எஃப். 1035 டிலக்ஸ்.



MAC/T47A-TAM




TAFE

ட்ராக்டர்ஸ் அண்ட் ஃபார்ம் எக்விப்மென்ட் லிமிடெட் சென்னை.



# இம்மாத ரத்தினம்

மே மாதத்தில் பிறந்தவர்களுக்குரியது வைடூரியம் (AGATE) என்று சொல்வார்கள். இது பல அடுக்கான வண்ணரங்களில் காணப்படும் ரத்தினங்களின் கடினத் தன்மையை மோஸ் அளவில் மதிப்பிடுவார்கள். இதன் கடினத்தன்மை 6.5—7. வைடூரியம், மகிழ்ச்சி மிக்க தொழில் வளத்தைக் குறிக்கும்.

எல்லாத் துறைகளிலும் வளம் பெருக உதவுகிறது இந்தியன் பாங்க்

# என்றும், எங்கும், ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் ரத்தினம் இந்தியன் பாங்க்

வங்கிகளுக்கு அடிப்படை பணம். தனிநபரும் நிறுவனங்களும், நாடுகளும் செழிப்புற்றிருக்க பணம் உதவுகிறது. ஆக்கப் பணிகளுக்கு பண உதவி தருவதோடு, அனைத்து விதமான நிதி அலுவல்களுக்கும் உதவி செய்கிறோம்.

ஒரு வார்த்தை சொல்லுங்கள். உங்கள் சார்பில் வாடகை, கட்டணங்கள் போன்றவற்றை அவ்வப்போது செலுத்தி விடுவோம். உங்கள் பணத்தை வேறு கிளைகளுக்கோ, வேறு கணக்குகளுக்கோ மாற்றவேண்டுமானல் அதையும் செய்கிறோம். அதோடு உங்கள் செக்குகள், பென்ஷன் தொகை போன்றவற்றை நாங்கள் பெற்றுத்தருகிறோம்.

நலிவுற்றோருக்குக் கடனுதவி அளிப்பதற்காக இந்தியன் பாங்கில் தனிப்பிரிவு இருக்கிறது. சொந்தத் தொழில் நடத்த கடன்தரும் திட்டங்கள் உள்ளன— அதுவும் சலுகை வட்டியில். சிறுதொழில்கள், விவசாயம், ஏற்றுமதி ஆகியவற்றில் தனி கவனம் செலுத்துகிறோம்.

உங்கள் சேமிப்பு, கிடுகிடுவென்று வளர, உங்கள் தேவைக்கேற்ற பல திட்டங்கள் இந்தியன் பாங்கில் இருக்கின்றன.



## இந்தியன் பாங்க்

உங்கள் செல்வச் செழுமைக்கு உதவும் வங்கி

இப்போது பவள விழா ஆண்டில் நடைபோடுகிறது.

ADWAVE/IB/1874/10



சித்தி புத்தி விநாயகர்

ஓவியர்: வி. துரைசாமி ஆசாரி



# விநாயகன்

'ஜோதி'

ஓங்காரத் துள்ளொளிக்கு ளுள்ளே சுடராகி
நீங்கா விநாயகனும் நின்மலனைக் கைதொழுவோம்.
ஆங்காரம் நீங்கும் அகத்தார் உளக்கோயில்
பாங்காக நிற்கின்ற பண்ணவனைத் தாள்தொழுவோம்.
கோடொடித்துப் பாரதத்தைக் கோவரையி லேஎழுதி
மூடிகத்தில் ஊர்ந்துவரும் மூர்த்தியினைப் பாடுவமே.
அங்குசமோர் செங்கை அடர்பாசம் மற்றொருகை
இங்கிதமாய் ஏந்துகின்ற ஏரம்ப னைப்பணிவோம்
அஞ்சலென்ற கையும் அருள்பூத்த செங்கரமும்
தஞ்சமென்று காட்டும் தயாபரனைப் போற்றுவமே.
சித்திபுத்தி யால்எழில்கொள் சேயிழையார் பாங்குறையும்
சித்தி விநாயகன்றன் சேவடியைத் தாழ்குவமே.
மூலாதா ரக்கமலம் மூண்டஎழி லாலயத்தின்
மேலாரும் ஆனைமுக வித்தகனை ஏத்துவமே.
காலிற் சிலம்புகொஞ்சக் கையிற் கடகமின்னக்
கோலம் கவினும் குழக்கன்றைப் பாடுவமே.

*[—1959. அக்டோபர், தீபாவளி மலரில் வெளியான முகப்புப் படம்]*

பொன் விழா மலர்



அட்டைப்படம்: கலைமகள்: ஓவியர்: கோபுலு



**வண்ணப் படங்கள்**

சித்தி புத்தி விநாயகர்
ஸ்ரீமத் சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்
ஸ்ரீமத் ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்
கலைமகள் தந்தை அமரர் ஆர். நாராயணஸ்வாமி ஐயர்
கலைமகளை வளர்த்தவர்: அமரர் நா. ராமரத்னம்
கலைமகள் ஆசிரியர்: கி.வா. ஜகந்நாதன்



**வண்ண இணைப்பு**

கனவில் கண்ட காதலன்



**புகைப்பட இணைப்பு**

குமுக்கி யானை - என். ராமகிருஷ்ணு
வெள்ளிவிழாக் காட்சிகள்.
அமரர் நாராயணஸ்வாமி ஐயர்:
வண்ணப்படம்: ஹரலிங்கம்

# நன்றி

கலைமகள் தோன்றி ஐம்பது ஆண்டுகள் நிரம்பிப் பொன் விழாவைக் கொண்டாடுகிறது. பாரதநாட்டுப் பாதுகாப்புஅமைச்சர் மாண்புமிகு திரு ஆர். வேங்கடராமன் அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பிக்கிறார். தமிழக அமைச்சர் மாண்புமிகு திரு ஆர். எம். வீரப்பன் அவர்கள் நிகழ்ச்சிகளில் பங்கேற்று நலம் செய்கிறார். சிலம்புச் செல்வர் மாண்புமிகு திரு ம. பொ. சிவஞானம் அவர்கள் கலைமகளைப் பாராட்டி வாழ்த்துகிறார். திரு அகிலன், திருமதி சௌந்தரா கைலாசம், திரு கி. சந்திரசேகரன், திருமதி ராஜம் கிருஷ்ணன் ஆகியவர்களும் வாழ்த்துரை வழங்குகிறார்கள். ஆதிமுதல் கலைமகளின் தொடர்புடைய திரு பெ. நா. அப்புசாமி ஐயர், மற்றும் திரு எஸ். வி. நரசிம்மன், மாண்புமிகு நீதிபதி வி. பாலசுப்பிரமணியன் ஆகியவர்கள் கலைமகளின் சிறப்பைப் பாராட்டவும் வாழ்த்தவும் வந்திருக்கிறார்கள். இந்தக் கூட்டம் தமிழ் மக்களுக்குக் கலைமகளிடம் உள்ள அபிமானத்தைப் புலப்படுத்துவதாக விளங்குகிறது.

இந்தப் பத்திரிகையின் சிறப்புக்குக் காரணமாகப் பல பெரியோர்கள் இருந்திருக்கிறார்கள். ஒவ்வோர் இதழிலும் முதல் கட்டுரையாக அமரர் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களின் படைப்பைத் தாங்கி வந்த பாக்கியத்தை இது பெற்றிருக்கிறது. மகா வித்துவான் ரா. ராகவையங்கார், ஆராய்ச்சிவித்தகர் மு. இராகவையங்கார், பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை. அமரர் டி. கே. சிதம்பரநாத முதலியார் முதலியோர் தம் எழுத்தால் இந்தப் பத்திரிகைக்கு அணி செய்திருக்கிறார்கள். பல ஓவியர்கள் தம் ஓவியங்களால் இதன் பக்கங்களுக்கு அழகு ஊட்டியிருக்கின்றனர்.

ஸ்ரீமத் காஞ்சி காமகோடி ஆசார்ய ஸ்வாமிகளின் ஸ்ரீமுகம் கலைமகளுக்குத் தெய்விகச் சிறப்பை வழங்குகிறது. பல புதிய கட்டுரைகளோடு கலைமகளில் முன்பு வெளியான சிலவற்றையும் இந்த மலரில் காணலாம்.

இதனைத் தோற்றுவித்த அமரர் நாராயணசாமி ஐயரையும், இதனைப் பேணி வளர்த்த அமரர் ராமரத்தினத்தையும் நினைவுகூர்வது நம் கடமையாகும். இப்போது இதை வளர்த்துவரும் திரு நாராயணசாமியும் இதன் தரம் குறையாமல் பாதுகாக்கும் வகையில் அரண் செய்து வருகிறார்.

இறைவன் திருவருளும், எழுத்தாளர்களின் அன்பும், இதைப் பெற்றுப் படித்து இன்புறும் வாசக அன்பர்களின் ஆதரவும், ஏஜெண்டுகளின் ஊக்கமும், விளம்பரதாரர்களின் ஆதரவும், அலுவலகத்தில் பணிபுரியும் பணியாளர்களின், அச்சகத் தொழிலாளர்களின் உழைப்பும் இதனை மேலும் மேலும் பொருளும் பொலிவும் உடையதாகச் செய்து வரும் என்று நம்புகிறோம். யாவருக்கும் இதய பூர்வமான நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஆசிரியர்

—நாகசுந்தரம்


KESAVAN.

॥ श्रीः ॥

முத்திரை

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य
श्रीमच्छंकर भगवत्पादप्रतिष्ठित
श्रीकाञ्ची कामकोटि पीठाधिप जगद्गुरु
श्रीमच्चन्द्रशेखरेन्द्र सरस्वती श्रीपादादेशानुसारेण
श्रीमज्जयेन्द्रसरस्वतीश्रीपादैः क्रियते नारायणस्मृतिः।

கலைகளுக்கெல்லாம் அதிபதி கலைமகள் தேவி. கலைமகள் என்ற பத்திரிகை ஐம்பது ஆண்டுகளாகத் தமிழ் இலக்கியத்திற்கும் பண்பாட்டிற்கும் இந்து சமயத்திற்கும் நல்ல பணிகளைச் செய்து கொண்டு வருகிறது. தமிழ் இலக்கிய சமய நூல்களைத் தமிழகத்திற்குத் தேடி எடுத்துக் கொடுத்த மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதய்யரின் சீடரான கி. வா. ஜ. என்று எல்லோராலும் அன்பாக அழைக்கப்படுகின்ற ஜகந்நாதன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு தமிழ் உலகத்திற்கு நல்ல சேவை செய்துவருகிறது. R. நாராயணசாமி ஐயர் அவர்களால் தொடங்கப்பட்டு N. ராமரத்னம் அவர்களால் வளர்க்கப்பட்டு சிவி. நாராயணசாமியால் தொடர்ந்து நன்கு நடத்தப்பட்டு 50வது ஆண்டு விழா (Golden Jubilee Year) தங்க விழாவாகக் கொண்டாடுவதைக் கேட்டு மிக்க மகிழ்ச்சி அடைகிறோம். மேன்மேலும் இதே போன்று தமிழ் இலக்கியப் பணிக்கும் சமயப் பணிக்கும் தொடர்ந்து கலைமகள் சேவை செய்ய ஆசீர்வதிக்கிறோம்.

முகாம்: கோயமுத்தூர்.
தேதி : பங்குனி மீ 12௳

நாராயண ஸ்மிருதி

ஐம்பது ஆண்டுகள்: மனித ஆயுளில் பாதி; 'வேத நூற் பிராயம் நூறும் மனிசர் தாம் புகுவ ரேனும்' என்று ஆழ்வார் சொன்னார். நூறு ஆண்டுகள் வாழ்வது அருமை என்பதை, 'புகுவரேனும்' என்ற சொல் காட்டுகிறது. ''புகுவது அருமை: அப்படி அருமையாகப் புகுவரேனும்'' என்று பொருள் கொள்ளவேண்டும்.

இவ்வாறு நிலையற்ற உலகத்தில் ஒரு பத்திரிகை ஐம்பது ஆண்டுகளாகத் தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொண்டு தமிழ் மக்களின் அன்புக்குப் பாத்திரமாகி இருக்கிறதென்றால் அது ஒரு புதுமைதான். ஐம்பதாண்டு நடந்தது பெரிதல்ல. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக மாறிக்கொண்டு வரும் உலகத்தில் கொண்ட கொள்கையை மாற்றாமல், தரத்தில் குறையாமல் இந்தப் பத்திரிகை நடந்துவருகிறது என்பதுதான் வியப்பு. இதற்கு இறைவன் அருளும் எழுத்தாளர்களின் உதவியும் தமிழ் மக்களின் ஆதரவுமே காரணம்.

*1932*-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கலைமகள் உதயமாயிற்று. நல்ல வெள்ளைக் காகிதத்தில் ஒரு தனியான வடிவத்தில் இது பூண்டு தம் படைப்புக்களை உதவியதால் கலைமகளுக்கும் மதிப்புப் பெருகியது; அவர்களுக்குப் பல கட்டுரைகளையும் அநுபவங்களையும் ஏடு தேடிய வரலாறுகளையும் எழுதுவதற்கு வாய்ப்பும் உண்டாயிற்று.

அந்தக் காலத்தில் ஆங்கிலத்தில் திரிவேணி என்ற ஆங்கிலப் பத்திரிகை சென்னை லா ஜர்னல் அச்சுக்கூடத்தில் அச்சாகி வெளியாயிற்று. இலக்கியத்துக்கு முதலிடம் கொடுத்துப் பேணி வந்தது, அந்தப் பத்திரிகை. அதைக் கண்டு, ''இதுமாதிரி தமிழிலும் தரமுள்ள பத்திரிகை ஒன்றை ஆரம்பிக்கவேண்டும்'' என்று லா ஜர்னல் அதிபர் அமரர் ரா. நாராயணசாமி ஐயர் எண்ணினார். திரு பெ. நா. அப்புசாமி ஐயர் முதலியவர்களோடு கலந்து பேசி அதை எவ்வாறு நடத்துவது என்று யோசித்து ஒருவகையாக முடிவு செய்தார்கள். மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் பத்திரிகையில் எழுதினால் அதற்குத் தனி மதிப்பு உண்டாகும் என்று எண்ணினார்கள்.

ஒரு நாள் அமரர் நாராயணசாமி ஐயரும் அமரர் டி. எஸ். இராமசந்திரையரும் ஐயரவர்களிடம் வந்து தம் கருத்தைச் சொன்னார்கள். அதைக் கேட்டு மனமுவந்த தமிழ்ப் பெரியார், ''நல்ல காரியம்; நன்றாக நடத்துங்கள்; நானும் எழுதுகிறேன்'' என்று சொன்னதோடு அருகில் இருந்த என்னைச் சுட்டிக் காட்டி, ''இவர் நன்றாகப் ப்ரூப் பார்ப்பார். கட்டுரை, கதைகளும் எழுதுவார். முடியுமானால் இவரைப் பயன்படுத்திக்கொள்ளலாம்'' என்றார்கள்.

திரு நாராயணசாமி ஐயர், ''மிகவும் நல்லதாகப் போயிற்று. எங்களுக்கு இப்படி ஒருவர் வேண்டியதுதான்'' என்று தம் மகிழ்ச்சியை வெளியிட்டார்.

வாய்மொழியாகச் சொன்ன அதுவே எனக்கு வேலை தரும் உத்தரவாயிற்று. நான் கலைமகள் தொண்டன் ஆனேன். ஐயரவர்களுடன் இருந்து பாடம் கேட்பதும் அவர்களுடைய ஆராய்ச்சிக்குத் துணை செய்வதுமாக இருந்த எனக்குக் கலைமகள் பணியும் சேர்ந்தது. கலைமகளின் துணையாசிரியன் ஆனேன். ஆனால் ஐயரவர்களிடம் பாடம் கேட்பதும் அவர்களுடன் இருந்து ஆராய்ச்சி செய்வதும் குறையவில்லை. கலைமகள் பணியில் செல்லும் சில மணி நேரங்களல்லாத மற்றச் சமயங்களிலெல்லாம் அந்தப் பணிகளை விடாது செய்துவந்தேன்.

# கலைமகள் பொன்விழா

## கி. வா. ஜகந்நாதன்

வெளியானதைக் கண்டு தமிழ் மக்கள் வரவேற்றார்கள். இதன் ஆசிரியராக அமரர் டி. எஸ். இராமசந்திரையர் இருந்தார். இலக்கியம், நுண்கலை, விஞ்ஞானம், சரித்திரம், சிறுகதை, பெண்கள் பக்கம், சிறுவர் பகுதி என்று வெவ்வேறு பகுதிகளைக் கொண்டு பத்திரிகை வெளியாயிற்று. ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வோர் அறிஞர் பொறுப் பேற்றுக்கொண்டு ஆசிரியர் குழுவில் இருந்தனர். இலக்கியத்துக்கு அமரர் வையாபுரிப் பிள்ளையும், சரித்திரத்துக்கு அமரர் நீலகண்ட சாஸ்திரியாரும், பெண்கள் பகுதிக்கு ஸ்ரீமதி விசாலாட்சி அம்மாளும், சிறுவர் பகுதி, விஞ்ஞானப் பகுதி இரண்டுக்கும் திரு பெ. நா. அப்புசாமி ஐயரும் பொறுப்பேற்று வரும் கட்டுரைகளைப் பார்வையிட்டுத் தேர்ந்தெடுத்துத் தந்தார்கள்.

அவர்களுடைய உதவியினால் அந்த அந்தப் பகுதிகள் சிறப்பான முறையில் அமைந்தன. எல்லாவற்றுக்கும் மேலாக தமிழுக்கு வளஞ் செய்த மாமேதை மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களுடைய கட்டுரை ஒவ்வோர் இதழிலும் முதலில் காட்சி அளித்தது. அப்படி அவர்கள் கலைமகளிடம் அன்பு

கலைமகள் தரமான பத்திரிகை என்பதைத் தமிழ் மக்கள் அறிந்து பாராட்டினர். இதைப் பற்றி ஆனந்த விகடனில் 'கலைமகள் விஜயம்' என்ற கட்டுரையை அமரர் கல்கி எழுதினார். ஆயினும் கலைமகள் ஆயிரத்தைந்நூறு பிரதிகளே அச்சாயின. அதன் விநியோகத்தை அதிகப்படுத்தவேண்டும் என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. ஒவ்வொரு பகுதியாகப் பிரித்துக் கட்டுரைகளை வெளியிடுவதைவிட மக்கள் விரும்பும் வகையில் கதைகளை அதிகமாக்கினால் தமிழ் மக்களின் ஆதரவு மிகுதியாகும் என்று எண்ணினேன்.

அக்காலத்தில் சிறந்த சிறுகதை எழுத்தாளர்களாக விளங்கிய அமரர் கு. ப. ராஜகோபாலன், அமரர் ந. பிச்சமூர்த்தி, அமரர் புதுமைப்பித்தன் போன்ற பலர் என் நண்பர்களாக இருந்தார்கள். அவர்களைப் பயன்படுத்திக்கொண்டு நல்ல சிறுகதைகளைக் கலைமகளில் வெளியிட முயன்றேன். இந்த முயற்சி பலித்தது; அக்காலத்தில் ஹிந்தி, வங்காளி மொழிகளிலுள்ள நாவல்களை மொழிபெயர்த்துக் கலைமகளில் வெளியிட்டோம். தமிழிலே சொந்தமாக எழுதிய நாவல்களை வெளியிடுவது நலம் என்று தோன்றியது. அதற்காக நாவல் பரிசு ஒன்று வைத்தோம். அந்தப் போட்டியில் பரிசு பெற்றது, திரு அகிலன் எழுதிய 'பெண்' என்ற நாவல். அதைக் கலைமகளில் வெளியிட்டபோது தமிழ் மக்கள் இந்த முயற்சியை வரவேற்றனர். அவர்கள் ஆதரவு பெருகியது. கலைமகள் பிரதிகள் மேலும் மேலும் மிகுதியாக வளர்வதற்கேற்ற வாய்ப்பு உண்டாயிற்று.

ஐயரவர்களுடைய கட்டுரைகளும் தரமான சிறுகதைகளும் கலைமகளுக்குப் புத்துயிரை ஊட்டி இதன் விநியோகத்தை மாதத்துக்கு மாதம் அதிகமாக்க வழி செய்தன. வெவ்வேறு பிரிவுகளை மேற்பார்வையிடும் பொறுப்பைப் பேரறிஞர்கள் விட்டுக் கொடுத்தார்கள். கட்டுரைகளையும் கதைகளையும் தேர்ந்தெடுத்து வெளியிடும் பொறுப்பை நானே ஏற்றுக் கொண்டேன்.

ஆண்டவன் அருளால் கலைமகள் மாதத்துக்கு மாதம் முன்னேறிவந்தது. எழுத்தாளர்கள் இந்தப் பத்திரிகையில் எழுதுவதைக் கௌரவமாக எண்ணினர். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்களின் அருமையான கவிதைகள் பல இந்தப் பத்திரிகையில் வெளியாயின. அமரர் நீலகண்ட சாஸ்திரியாருடைய வரலாற்றுக் கட்டுரைகள் கிடைத்தன. ஸர். ஸி. வி. ராமனின் கட்டுரைகளை மொழி பெயர்த்து வெளியிட்டோம். டாக்டர் கிருஷ்ணன் அவர்கள் தமிழிலேயே கட்டுரைகள் எழுதி வழங்கினார்.

மற்றப் பத்திரிகைகளின் ஆசிரியர்களாக விளங்கினவர்களும் கலைமகளுக்குக் கதைகளையும் கட்டுரைகளையும் வழங்கினர். அமரர் கல்கியின் சிறுகதைகள் பல கலைமகளில் வெளியாகியுள்ளன. அமரர் தேவனின் கதைகளும் இடம் பெற்றன. திருவாளர்கள்; த. நா. குமாரசாமி, புதுமைப்பித்தன், கு. பா. ரா., ந. பிச்சமூர்த்தி, திருமதி குமுதினி முதலிய பிரபல எழுத்தாளர்களின் படைப்புகள் அடிக்கடி கலைமகளில் வெளிவந்தனர்.



டாக்டர் உ. வே. சாமிநாதையர்

அவ்வப்பொழுது சிறுகதைகளிலும் நாவல்களிலும் போட்டி வைத்துச் சிறந்தவற்றிற்குப் பரிசு வழங்கினோம். முதல் முதலாகக் கவிதைப் போட்டி வைத்தபோது திரு மே. ரா. மீ. சுந்தரம் (சுந்தா) அதற்குரிய பரிசைத் தட்டிக்கொண்டு போனார்.



முதல் ஆசிரியர் டி. எஸ். ராமசந்திரையர்

கலைமகளில் வந்த கட்டுரைகளும் கதைகளும் பாடப் புத்தகங்களில் இடம் பெற்றன. வேறு சிலர் வெளியிட்ட சிறுகதைத் தொகுதிகளில் இந்தப் பத்திரிகையில் வெளியான பல கதைகள் சேர்க்கப்பெற்றன. கலைமகள் யாவருக்கும் பொதுவான பத்திரிகை என்ற எண்ணம் தமிழ் மக்களிடையே நிலவலாயிற்று.

மகாமகோபாத்யாய டாக்டர் ஐயரவர்கள் தம் இறுதிக்காலம் வரையில் இடைவிடாமல் கலைமகளுக்குக் கட்டுரைகள் வழங்கி நலம் செய்தார்கள். தேசிக விநாயகம் பிள்ளையவர்களின் பாடல்கள் கலைமகளின் தரத்தை உயர்த்தின. அவர் பாடிய அற்புதமான கவிதையாகிய 'பாரதியும் பட்டிக்காட்டானும்' என்பது கலைமகளில் வெளியாகியது.

கலைமகள் பரிசைப் பெற்ற பலர் தமிழ் எழுத்துலகில் இன்று பெரும் புகழ் பெற்று விளங்குகிறார்கள். அவர்கள் யாவரும் கலைமகளை நன்றியறிவோடு நினைத்து வாழ்கிறார்கள். திரு அகிலன் அவர்கள் இன்னும் தம்முடைய படைப்புகளைக் கலைமகளுக்கு வழங்கி வருகிறார். கலைமகள் பரிசைப்பெற்ற பெண்மணிகள் பலர். திருமதி ராஜம் கிருஷ்ணன், செல்வி சூடாமணி, திருமதி சரஸ்வதி அம்மாள் முதலிய பல பெண் எழுத்தாளர்களின் தலைசிறந்த எழுத்துக்களைத் தமிழர்களுக்கு அறிமுகப்படுத்திய பெருமை கலைமகளுக்கு உண்டு.

எத்தனை எத்தனையோ புதிய புதிய முறைகளை மேற்கொண்டு எழுத்தாளர்களைச் சிறுகதைகள் எழுதும்படி வேண்டிப் பெற்று வெளியிட்டிருக்கிறோம். இரட்டைக் கதைகள், கிழமைக் கதைகள், இரட்டை மணிமாலை என்று பல தலைப்புகளில் அவை வெளியாகியிருக்கின்றன.

சிலர், 'கலைமகளில் அதை வெளியிடலாமே, இதை வெளியிடலாமே!' என்று சொல்வதுண்டு. எல்லா வகைகளையும் வெளியிட இடம் ஏது? அவர்களுக்கெல்லாம் நான் சொல்லும் ஒரே பதில் இதுதான்: 'எல்லா நல்லவற்றையும் நம்மால் செய்ய முடியாது. ஆனால் நாம் செய்வனவெல்லாம் நல்லவையாக இருக்கும்படி செய்யலாம்.'

மனித தெய்வமாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதியாகிய ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளின் அருள் இந்தப் பத்திரிகைக்கு நிரம்பக் கிடைத்திருக்கிறது. அவர்கள் அருளிய நன்மொழிகளைக் கலைமகள் காரியாலயம் புத்தக வடிவில் வெளியிட்டிருப்பதோடு, அவ்வப்போது அவர்களுடைய அருளுரைகளைத் தாங்கி வரும் பேறு கலைமகளுக்குக் கிடைத்திருக்கிறது. ஸ்ரீமத் சிருங்கேரித் திருமடத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளுடைய ஞானத் திருமொழிகளை இப்போது சில மாதங்களாகக் கலைமகள் அணிகலனாகப் பெற்று உலவி வருகிறது.

தமிழ் நாட்டில் பொதுமக்களிடம் யாரேனும் தம்மை எழுத்தாளர் என்று அறிமுகப்படுத்திக் கொண்டால் அவர்கள் கேட்கும் கேள்வி, ''நீங்கள் கலைமகளில் எழுதியிருக்கிறீர்களா?'' என்பதுதான். அந்த அளவுக்குத் தரம் குறையாமல் இது நடக்கிறது என்ற நம்பிக்கை தமிழ் மக்களிடம் வேரூன்றியிருக்கிறது.

'எத்தனையோ செய்துவிட்டோம்' என்று இறுமாப்பினால் இப்படி எழுதவில்லை. 'தமிழில் புதிய படைப்புக்கள் மலர்வதற்கு இந்த அளவாவது ஆண்டவன் வாய்ப்புக் கொடுத்தானே' என்று எண்ணி அவன் தாளைப் பணிகிறோம்.

புதிய புதிய துறைகளில் கட்டுரைகள் வெளிவரலாம். புதிய முறைகளில் கதைகள் வெளிவரலாம். ஆனால் எல்லாவற்றுக்கும் அடிப்படையான நம் பண்பாட்டைக் குலைக்கும் வகையில் அவை இருக்கக்கூடாது. இந்தக் கொள்கையைக் கூடியவரையில் கடைப்பிடித்து வருகிறோம்.

கலைமகளின் வளர்ச்சிக்கு ஓரிருவர் காரணம் அல்லர். இதனைத் தோற்றுவித்த அமரர் நாராயணசாமி ஐயர் நல்ல எண்ணத்துடன் இட்ட வித்து முளைத்து நன்கு படர்ந்து பொலிகிறது. அவருடைய குமாரரான அமரர் ராமரத்தினம் அவர்கள் இதனைத் தம் குழந்தை போலவே கருதி வளர்த்து வந்தார். எந்த யோசனை சொன்னாலும் தடையின்றி ஏற்றுக்கொண்டு செயல்பட வைத்தார். அவர்கள் போட்ட அடிப்படையின்மேல் கலைமகள் என்னும் திருமாளிகை எழுந்திருக்கிறது.

கலைமகளின் பொன்விழாவைச் சிறப்பாகக் கொண்டாடும் பேறு பெற்றுள்ள சிவி. ஆர். நாராயணசுவாமி இப்போது கலைமகளைக் கண்ணைப் போற்றி வளர்த்து வருகிறார். அமரர் ராமரத்தினத்தின் குமாரர் இவர்.

இதற்குத் தம் எழுத்துக்களை வழங்கி இன்று அமரராகியுள்ளவர்கள் செய்த பேருதவியை நன்றியறிவுடன் நினைக்கிறோம். இன்றும் தம் எழுத்துக்களால், சிறந்த ஓவியங்களால், புகைப்படங்களினால் இதற்குப் பொலிவுண்டாக்கிவரும் அன்பர்களை நன்றியறிவுடன் எண்ணி அவர்களுடைய ஆதரவு தொடர்ந்து நிலவ வேண்டுமென்று வேண்டுகிறோம்.

இந்தப் பத்திரிகையை வாங்கிப் படித்துத் தொழில் முறையில் இதனை வெற்றிபெறச் செய்த தமிழ் மக்கள் அனைவரையும் வணங்கி வாழ்த்தி நன்றி கூர்கிறோம்.

கலைமகளின் தொண்டு மேலும் மேலும் வளர்ந்து தமிழ் மக்களின் அணிகலனாகவும் தமிழ் மக்களின் அன்புக்குக் கொள்கலனாகவும் விளங்கி வரும்படி அருள் புரிய வேண்டுமென்று ஆண்டவனைப் பிரார்த்திக்கிறோம்.

*

# கலைமகளின் தந்தை

கி. சந்திரசேகரன்

'தன்னருமை தனக்கே தெரியாது' என்ற சொல்லுக்கு ஒரு விளக்கம் போன்றவர் காலஞ்சென்ற ஆர். நாராயணசுவாமி ஐயர் அவர்கள். சிலரை உலகம் போற்றும், ஆனால் உற்றார் தூற்றுவர். சிலர் பந்துக்களிடம் பட்சமாக இருப்பார்கள்; ஆனால் ஊராரிடம் பராமுகமாக இருந்து விடுவார்கள். அவ்வகை இயல்புகளைப் பெற்றவர் அல்லர் நாராயணசுவாமி ஐயர். வீட்டுக்கு ஒரு விதம், உலகிற்கு ஒரு விதம் என்ற வித்தியாசமே அவருக்குத் தெரியாது. உதவி புரிவதற்கு உத்தேசமும் பாத்திரமும் பலதரப்பட்டிருக்கும் இவ்வுலகில், இரண்டையும் மறந்து உதவிக்காகவே உதவி செய்வதைப் பழக்கத்திற் கொண்டவர். செல்வாக்கு, பெருமிதம் இவைகளுக்கும் தமது வாழ்க்கைக்கும் தொடர்பு ஒன்று உள்ளதென்பதைக் கனவிலும் உணராத மனப்பாங்கு படைத்தவர்.

குழந்தைபோல இருப்பார். அவரது குழந்தை உள்ளம் முதிய வயதிலும் சற்றேனும் அவரைவிட்டு அகலவில்லை. படிப்பும் தொழிற் பழக்கமும் ஒரு நாளும் அவருடைய பிறவிக் குணங்களை மாற்றிவிடவில்லை. கல்வி என்ற கூற்றும், கட்டுப்பாடும் அவரை அணுகின போதிலுங்கூட, சுபாவமான பேச்சும் நடத்தையும் அவைகளைத் தாண்டியே நின்றன. அவ்விதப் பேச்சுக்கூடப் புதிய மனிதர்கள் இடையே சட்டென வெளியாகாது. நன்கு பழகியவரிடமே அவருக்கு எல்லா ஈடுபாடும்.

விநயம் என்பது ஒரு வேஷம் அல்ல, பூஷணமும் அல்ல; இரண்டும் அல்லாத ஏதோ மூன்றாவதான ஒன்று; உடம்புடன் ஒட்டியது; ரத்தத்தில் ஊறியது என்பதைத் தம்முடன் நெருங்கிப் பழகியவர்களிடம் அவர் உணர்த்தி விடுவார். பணத்தைக் கொடுப்பார். அதிலும் ஒருவிதச் சங்கோசமே அவரை ஆட்கொள்ளும். கேட்பவர்களுக்குக் கொடுப்பதை ஏதோ தவறு செய்வதாகவே மறைக்கப் பாடுபடுவார். அதனால் யாசித்துப் பயன் அடைந்தவர்களும், அவரிடம் நன்றி செலுத்த மறப்பதைச் சகஜமாய்க் காண நேரிடும். நாம் வேண்டுமானாலும் பயனடைந்தவர்களிடம் நன்றி இல்லாக் குணத்தைக் குறை கூறுவோமே ஒழிய, அவர் ஒரு நாளும் நன்றி காட்டத் தவறியதாக ஒருவரிடமும் வெறுப்புக் கொண்டதில்லை.

வேலையில் அவர் காட்டிய ஊக்கங்கூடச் சில வேளைகளில் பிறர் கண்ணுக்குப் பிடிவாதம் செய்வது போல் தோன்றியதுண்டு. ஒன்றையுமே கொட்டி அளக்காத சுபாவமானதால் அவருடைய மனைவிக்குக்கூட அவர் செய்துள்ள நற்காரியங்கள் பல தெரிந்திரா; தெரிய வேண்டியது அவசியம் என்ற கொள்கையும் அவருக்கு இருந்ததில்லை. தம் காரியத்துக்குத் தடை செய்வது போன்ற உபதேசங்களைத் தள்ளிவிட்டு, அநேக சமயங்களில் தாம் மேற்கொண்ட வேகத்தைக் குன்றாமல் வளர்த்தவர். தாம் செய்வதை இரண்டொரு அந்தரங்கமான பேர்களிடங்கூடச் சரியென்று நிரூபிக்கப் பிரயாசை எடுத்துக்கொள்ளாமல், யார் எவ்விதம் நினைத்தாலும், தம் நெறியே தமக்கென்ற மனப்பாங்கைக் கூடிய வரையில் மெய்ப்பித்துக் காட்டியவர்.

விளம்பர யுகம் இது. எதைச் செய்வதாயினும் பலருக்கு அறிவித்தே ஒவ்வொருவனும் நன்மை செய்கிறான். தயையும் ஈகையும் பத்திரிகைகளில் பத்திபத்தியாக விளம்பரமாகும் காலம் இது. ஒரு பத்திரிகையைத் தானே நடத்துபவனுக்கு, விளம்பரம் தண்ணீர் பட்ட பாடல்லவா? அதிலும் ஒன்றல்ல, இரண்டு மூன்று பத்திரிகைகளையும், பல துறைகளில் பிரசுரங்களையும் செய்த ஒருவருக்கு இஷ்டம் இருந்திருந்தால் எதைத்தான் விளம்பரப்படுத்திக் கொள்ள இயலாது? அவரென்ன தாம் ஒரு மகாத்மா ஆக வேண்டுமென்று தனிப் பிரயாசைப் பட்டவரா? அதுவும் இல்லை. அவருடைய குணங்களின் சேர்க்கையில் தமக்கென்ற எண்ணம் அளவுக்குமேல் இல்லாத காரணத்தாலேயே தாமும் வாழ்ந்து, பிறரும் வாழ்ந்து, சுகமடைவதையே பெரிய நற்பயனாக அவர் பாவித்தார்.

வியாபாரத்தில் போட்டிகள் பல நேரிடினும் அவைகளை விலக்கத் தம் புத்திக்கும் சக்திக்கும் ஏற்ற சிலவற்றையே உபாயங்களாக நாடுவார். தம்மை மீறிச் சென்ற அதிர்ஷ்டத்தைக் குறித்து அவர் வருந்தியதில்லை. போனது போகட்டும், இருப்பதை நன்கு பிரயோஜனப்படுத்துவோம் என்ற அமரிக்கையே, நல் வாழ்க்கையை வீண்படுத்தும் வேண்டா விசாரங்களை ஒழிக்க அவரைத் தூண்டியது.

சட்டப் பத்திரிகைகளையும், 'கலைமகள்' போன்ற தமிழ்ப் பத்திரிகையையும் சிறப்பாக நடத்தியதற்கு அறிகுறியாகச் சொந்தத்தில் எழுதும் வன்மை ஒன்றையும் அவர் காட்டவில்லை என்பது உண்மை. ஆயினும் எழுதுகோலையே பிடிக்காத எத்தனை பிரபல ஆசிரியர்களை நாம் அறிவோம்! தாம் எழுதுகோலைக் கையில் ஏந்தவில்லை என்பதற்காக வேறு எந்த ஆசிரியரும் பத்திரிகை உலகில் கிடைக்கும் புகழில் தமக்குப் பங்கு வேண்டாமெனத் தள்ளியதில்லையே! நாராயணசுவாமி ஐயர் ஒரு நாளும் தம்மை ஓர்



ஆங்கிரஸஹு ஆடிமீ முதல்
மார்கழிமீ வரை

தொகுதி உ

பகுதி எ—கஉ

கௌரவப் பத்திரிகாசிரியர்கள்.

பி. என். அப்புஸ்வாமி ஐயர்.
எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை.
மு. இராகவையங்கார்.
கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்.
டி. கே. சிதம்பரநாத முதலியார்.
டி. சிவராமசேதுப் பிள்ளை.
க. அ. நீலகண்ட சாஸ்திரி.
எம். லக்ஷ்மி அம்மாள்.
எஸ். வையாபுரிப்பிள்ளை.
டி. எஸ். இராமச்சந்திர ஐயர் (நிர்வாகப்பத்திரிகாசிரியர்.)

1932

வருஷ சந்தா

உள்நாடு ரூ. 4. வெளிநாடு ரூ. 5.

தொடக்கக் கால அட்டையின் மாதிரி

---

ஆசிரியர் என்று எண்ணியதும் இல்லை; தமக்குப் பெயர் வேண்டுமென்ற அவாவை ஒரு காரியத்திலும் வெளிக்காட்டிக் கொண்டதும் இல்லை. அவ்வித எண்ணம் இருக்கக் கூடும் என்ற சந்தேகம் அவரிடம் நெருங்கியவர்களுக்குங்கூட மனத்தில் பாய்ந்ததில்லை. ஒருகால் அவரே புகழை நினையாதபொழுது நாம் எதற்காக அதைப்பற்றி எண்ணவேண்டுமென்று அவரைச் சுற்றியுள்ளவர்கள் சும்மா இருந்திருப்பார்கள் போலும். எதுவாயினும், உயிருள்ளபோது தம்மைப் பிறர் மறக்காமல் செய்துகொள்ளப் பாடுபடுபவரையேதான் இவ்வுலகமும் அதிகம் கவனிக்கும் அல்லவா? அந்த உபாயத்தை ஏனோ அவர் பின்பற்றவில்லை.

வாழ்க்கையை வெற்றிகரமாகச் செய்து கொண்ட காரணத்தால், அடிக்கடி உபயோகமற்ற மன ஆராய்ச்சிகளில் தம் மனத்தைப் பறிகொடுக்கமாட்டார். அதற்காக, 'வாழ்க்கையை வெற்றியுடன்தான் நடத்தவேண்டும், நடத்திவிட்டோம்' என்ற இம்மாதிரியான எண்ணங்களுக்கும் அவரிடம் இடம் இருந்ததோ என்பது சந்தேகம். வெற்றியையும் தோல்வியையும் உணராத மனப்பாங்கு கேவலம் உணர்ச்சியற்றது என்று ஆகிவிடும். இங்கேதான் அவருக்குள்ள உயர் சகவாசமும் மரபே வந்த குல வழக்கங்களும் அவரை வேருக்கி வைத்திருந்தன என்பது தெரியவரும். அண்ணன் தம்பிகளுடனும் தமக்கைமார்களுடனும் கூடிய செழித்த குடும்பத்தில் பிறந்து வளர்ந்த அநுபவங்கள் ஒன்றும் அவருக்கு அறிவு வளர்ந்த நாட்களில் அவரைக் கைவிடவில்லை.

ஓர் உயர்ந்த மனிதனை மாமனாராக அடைந்த அளவிலே அவருடன் பழகி, அரிய குணங்களைத் தாம் அறியாமலேயே உட்கொண்டு வளர்வதற்கு வேண்டிய சௌகரியமும் அவருக்குக் கிடைத்தது. பண்பாடுடைய இதயம் தேடும் சகலவிதச் சுகங்களும் பூர்ணமாக அவருடையதாயின. சிலரைப் போலத் தம்மிடம் இல்லாதவைகளை நினைந்து உருகுவதும் அவருக்கு வழக்கம் அல்ல. இன்ப வாழ்க்கை நடத்துவதிலும் அவர் பெருந்தன்மையுடன் பலரைப் பாதுகாத்தவர். ரசமான வம்பு, உல்லாசப் பேச்சுக்கள், விநோதங்கள், ஒன்றையும் அவர் அலட்சியம் செய்யவில்லை. 'தம்மைப் படைத்தவன் அறிவான் தமது வாழ்க்கைப் பயனை' என்பது போன்ற ஏதோ ஓர் அபிப்பிராயம் அவருடைய உள்ளத்தே குடிகொண்டிருக்கவேண்டும். இல்லாவிடில், யார் என்ன சொன்னபோதிலும் காதில் வாங்கிக்கொள்ளாமல் தமக்கே இடையூறாகக் கூடிய சிலரிடம் கபடமின்றிப் பழகியிருப்பாரா? அநேக சமயங்களில் அவர்களுக்கு நன்மை பயக்கும் உதவிகளைச் செய்யவும் அவர் பின் வாங்கியதில்லை.

காலத்திற்கேற்ற சில புதிய காரியங்களை மேற்போட்டுக் கொண்டதற்காகப் பெரியவர்கள் சென்ற வழியே செல்லுவதையும் அவர் புறக்கணிக்க மாட்டார். அக்காரணமாகவே சமயம், சாதி, இவ்விதக் கட்டுப்பாடுகளை விலக்க ஒருபோதும் அவர் துணிந்ததில்லை. சமய நெறியைப் பின்பற்றுவதில் தனி அமைதியையும் அவர் உள்ளம் தேடித் தெளிந்திருக்கவேண்டும்.

ஆத்மிகம் என்றதும் அவருக்குக் காமகோடி பீடாதிபதிகளான ஆசாரிய சுவாமிகளிடம் ஏற்பட்டிருந்த பெரும் பக்தி நம் மனக்கண் முன் வருகிறது. சுவாமிகள் பல வருஷங்களுக்கு முன் சென்னைக்கு விஜயம் செய்தபோது ஆற்றிய சொற்பொழிவுகளை, 'நன்மொழிகள்' என்ற தலைப்புடன் புத்தக வடிவில் வெளியிட்டவர் அவரே. வியாபாரம் முக்கியம் என்று எண்ணாமல், மடத்துச் சிஷ்யர் பலருக்கு அவர் அவற்றை இனாமாக வழங்கினார்.

புத்தகம் போடுவதொன்று, தமக்கே பெரியவரிடம் தனி அன்பு இருப்பதொன்று என்பவற்றை அவர் விளக்கிக்காட்டியிருக்கிறார்.

சுவாமிகள் தமது கிராமத்தில் வந்து ஒரு சமயம் தங்கியபோது மாதக் கணக்கில் தம் வேலையை மறந்து, கூடவே இருந்து பிரதி தினமும் அவர்களுக்கு வேண்டிய சகாயங்களைச் செய்துகொண்டு அவர் காலம் கழித்தார். அதைப் பார்த்தவர்களில் சிலர், 'ஏது, இவருக்குக் காரியாலய வேலை அதிகமாக இருந்தால் இங்கே இவ்வளவு காலம்

தாமதிக்க இவரால் இவலுமா?' என்று கூட நினைத்திருப்பார்கள். என்றுமே ஒன்றைச் செய்யும்பொழுது மற்றொன்றை நினைத்து மனத்தை ஆயாசப் படுத்திக்கொண்டவர் அல்ல அவர். நெருக்கடியான சமயத்தில் அவருக்கு எவ்வளவோ துணையாக நின்றதும் அக்குணம் ஒன்றே என்றால் பிழையல்ல.

அதிர்ஷ்டசாலி, சுக புருஷர் என்றெல்லாம் அவரை முழுவதும் அறியாதவரே நினைத்திருப்பார்கள். உண்மையில் சௌகரியங்களைக் கண்டு, வேண்டியதற்கு மேல் அவர் மோகப்பட்டவர் அல்ல. அவருடைய முகத் தோற்றமும் உடல் வலிவும் சாதாரணமாக எல்லாரிடமும் காணக் கூடியவைகள் அல்ல என்று தான் சொல்ல வேண்டும். கண்ணியமான உடைகளைத் தரித்து, பார்ப்பவர்கள், 'இவர் யார்?' என்று வினவும் விதமே காட்சி தருவார். ஆனால் ஓரிடத்திலும் முந்திக் கொண்டு முன் இடத்திற்குப் பாயமாட்டார். கையைப்பற்றி அவரை இழுத்தாலும் பின்னே தான் நிற்பார்; அவ்வளவு சங்கோசி. கௌரவங்கள் பிறருக்கே உரியன என்ற நம்பிக்கை வேறு, வெகு காலமாக அவரிடம் வேரூன்றி இருந்தது; காரணம் பிறர் செய்த பாக்கியம் அல்லவா?

மற்றொரு குறை-இல்லை-குணமென்றே கூறத் தோன்றுகிறது. அவரிடம்-அதாவது, தம்மை அண்டியவர்களை ஒரு நாளும் எவ்விதக் குற்றத்துக்காகவும் தண்டித்து விடார். அநேக சமயங்களில் தம் காரியாலயத்தில் உள்ளவர்களைப்பற்றி எவரேனும் சற்றுக் குறைவாகப் பேசினதாக அறிந்தாலும், சொன்னவர் பேரில் சினங்கொள்வார், பதிலுக்கு வேண்டுமானாலும் குற்றஞ் சாட்டா திருந்துவிடுவார். தம்மிடம் உள்ளவர்களும் மனிதப்பிரகிருதிகள்தாமே; தவறு செய்வதும் சகஜந்தனே; இவைகளை அவர் மனம் ஆராயாது. தம்மிடம் உள்ளவர்கள் பிறர் பாராட்டிற்குப் பாத்திரமானாலோ கேட்க வேண்டியதில்லை; பெருமிதம் முகத்தில் தாண்டவமாடச் சொந்தமாய் வேறு புகழுரையைத் தாமே அடுக்கிக்கொண்டு போவார். எல்லாம் அவரை எஜமானராகப் பெற்றவர்களுடைய அதிர்ஷ்டம் என்பதில் ஐயம் இல்லை.

குணமும் குறையும் இல்லாதவர்கள் உலகில் உண்டோ? ஆனால் நினைக்கும்பொழுது குணங்கள் மேலோங்கிக் குறைகள் மிகக் குறைவாகவும் சிறியவையாகவும் ஆவதே ஒருவரை உயர்ந்தவராகச் கருத வைக்கின்றன. அவர் இருந்த காலத்தில் வெளித் தெரியாத உண்மைகள் சில அவர் இறந்தவுடனேதான் வெளியாயின. பலவித நற்காரியங்கள் இன்று தவக்கப்படுவதே அவர் இல்லாத துயரத்தை உணர்த்தப் போதுமான சாட்சியமாக நிற்கிறது.

படாடோபம் இல்லாத வகையில் அவர் விதையிட்டுப் பயிராக்கிய பயிர் வீண் போகாது. அதற்கு உரமும் வளமும் தருவன, நாடறியாது அவர் செய்த தொண்டுகள்தாம் என்று சொல்லவும் வேண்டுமோ! ❋

['பலகணிக் காட்சிகள்' என்ற நூலிலிருந்து எடுத்தது.]



கலைமகளைக் கண்ணெனெ வளர்த்த அமரர் என். ராமரத்னம்

# ரத்தினத்தின் இருகண்கள்

எஸ். வி. ரமணி

காவேரி விருந்தினர் மாளிகை, திருவெறும்பூர்க் கொதிகலன் தொழிற்சாலையைச் சேர்ந்தது. சுமார் எட்டு வருஷங்களுக்கு முன்பு, 1974-ஆம் ஆண்டு மே மாதம். அப்போதுதான் பொலபொலவென்று பொழுது விடிந்துகொண்டிருக்கிறது. விருந்தினர் மாளிகையின் நளபாக அறையிலிருந்து காஸ் அடுப்பின் சீறும் ஒலியும் காபியின் மென் மணமும் அந்தக் காலைப் போதின் சில்லென்ற காற்றில் கலந்து வீசுகின்றன.

விருந்தினர் மாளிகையில் இன்னும் அரவமே எழவில்லை.

''எத்தனை மணிக்கு வந்தாய்? நான் இரவு பத்தரை மணிக்குக் கேட்டபோதுகூட யாரும் வரவில்லை என்று சொன்னார்களே!''

காலைப் போதின் குளுமைக்கு ஏற்ப மென்மையான ஒலி, தூக்கக் கலக்கத்தையும் இரவெல்லாம் தூங்காத கண் எரிச்சலையும் போக்குகிறது.

அலுவலகத்தில் அன்றுடம் பார்த்துப் பேசிப் பழகியவர்தாம், அதிபர் என்ற முறையில். இருந்தாலும் அந்தக் காலை வேளையில், அவர் என்னை விசாரித்துக்கொண்டு வந்து கேட்டபோது, அந்தக் குரலில் புதுவித மென்மை இழையோடுவதை உணர முடிந்தது.

''இரவு மூன்று மணிக்குமேல்தான் வந்தேன். நல்ல வேளையாக வண்டி ஒன்று திருச்சி ஜங்ஷனுக்கு வந்திருந்தது. அதில் வந்துவிட்டேன்.''

''சரி, கப்பல் என்றைக்கு வருகிறதாம்? ஏதாவது தெரியுமா?''

நான் ஒன்றும் புரியாமல் விழித்தேன்.

''கப்பலில் பேப்பர் வந்துதானே இந்த இதழ் அச்சாகவேண்டும்? இதுபற்றி ஒன்றும் தெரியாதா?''

''தெரியலே, ஸார்!''

''எடிட்டோரியலில் இருந்தாலும் எல்லா விஷயங்களையும் தெரிந்துகொள்ள வேண்டும். பேப்பர் வந்ததும் பார்க்க வேண்டும், ஸ்டீமர் வருகையைப்பற்றி ஏதாவது போட்டிருக்கிறதா என்று'' தமக்குத் தாமே கூறிக்கொண்டார்.

''உனக்கு அறை கிடைக்காவிட்டால் என் அறையில் போய் முகம் கழுவிக் காபி சாப்பிடு'' என்று கூறிவிட்டுப் அப்பால் போய் விட்டார்.

பத்து நிமிஷத்துக்கெல்லாம் எனக்குத் தனியறை ஒன்று அங்கே கிடைத்தது. திருச்சி, பாய்லர் தொழிற்சாலையைப் பார்த்து எழுதுவதற்காகச் சென்றிருந்தேன். ஒன்பது மணி சுமாருக்கு அந்தத் தொழிற்சாலையின் மக்கள் தொடர்பு அதிகாரி என்னைக் காண வந்த போது, ''இரவு வந்தபோது உங்களுக்கு அறை கிடைக்கவில்லையாமே? உங்கள் அதிபர் என்னிடம் கூறி வருத்தப்பட்டார். வந்ததுமே எனக்கு ஃபோன் பண்ணியிருக்கலாமே நீங்கள்'' என்றார் அவர்.

''மூன்று மணிக்குமேல் யாரையும் தொந்தரவு செய்யவேண்டாமே என்றுதான்...''

இரவு அறை காலியே இல்லை என்றவர், கூப்பிட்டுக் கொடுத்ததற்கும், சற்றைக்கெல்லாம் மக்கள் தொடர்பு அதிகாரி வந்து பேசியதற்கும் காரணம் புரிந்தது. என்னிடம் எதுவும் மேலே பேசாமல் சென்ற 'கலைமகள்' அதிபரின் செயலை அறிந்து வியந்தேன். 'சொல்லாமலே செய்வர் பெரியர்' என்ற மொழிக்கிணங்க, தாம் கண்டதைப்பற்றி உடனே ஒன்றும் பேசாமல், செயலில் காட்டியிருக்கிறார்.

'பிரிட்ஜ்' ஆட்டத்தில் தேர்ந்த, இந்தியாவிலேயே முதன்மை ஆட்டக்காரரான, கலைமகள் அதிபர் அமரர் நா. ராமரத்தினம் அவர்கள், திருவெறும்பூரில் நடந்த பிரிட்ஜ் போட்டிக்காகச் சென்றிருந்த சமயம் அது. அந்த ஆட்டத்தில் வென்று அவர் பெற்றிருக்கும் கோப்பைகளும் சான்றிதழ்களும் ஏராளம். அதில் மிகுந்த ஈடுபாடு உள்ளவர்.

அந்த ஈடுபாட்டையும் மீறிக் 'கலைமகள்' பத்திரிகை அவரைக் கவர்ந்திருந்தது. கொதிகலன் தொழிலகத்தைப் பார்த்து எழுதப் போன என்னைப் பார்த்ததும், அவர் கேட்ட முதல் கேள்வியிலிருந்தே, கலைமகளின் வளர்ச்சியில் அவருக்கிருந்த அக்கறை தெளிவாயிற்று. அதுமட்டும் அல்ல, ஒரு மணி நேரம் கழித்துப் பேப்பர் வந்ததும் பார்த்து

விட்டு, ''இன்னும் நான்கு நாட்கள் ஆகும் போலிருக்கிறது'' என்று கூறியபோது, அந்தத் தொனியில் நிழலாடிய வருத்தத்தை உணர முடிந்தது. 'கண்ணைப் போல் காத்து வளர்த்தார்' என்ற சொல்லுக்கு உதாரணமாக, அவரைச் சொல்ல வேண்டும்.

பகல் முழுவதும் தொழிலகத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்து, மாலையில் சந்தித்த போது, ''மாதர் சங்கம், கான்டீன், தொழிலாளர் ஓய்வு விடுதி போன்ற இடங்களையும் போய்ப் பார். அப்போதுதான் நிறையச் செய்திகள் கிடைக்கும். எதிலும் 'ஹ்யூமன் இன்டெரஸ்ட் வேணும்'' என்று அதிபர் கூறிய போது, பிரிட்ஜில் எத்தனை தேர்ச்சி யடைந்திருந்தாரோ, அதற்குமேல், பத்திரிகையில் சுவையாக எழுதுவதற்கு எந்த எந்த விஷயங்கள் உதவியாக இருக்கும் என்பதைப்பற்றிய நுணுக்கத்தையும் அறிந்திருக்கிறார் என்பது புரிந்தது.

'மாதர் சங்கத்தின் முதலாண்டு நிறைவன்று வந்த பத்திரிகையாளர்' என்ற சிறப்பும் பாராட்டும் அன்று கிடைத்தன. தொழிலகத்தைப்பற்றி வெறும் புள்ளி விவரங்களையும் வரலாற்றையும் எழுதுவதைவிட, சுவையான செய்திகள் கிடைத்ததை எண்ணி வியந்தேன்.

கலைமகள் தீபாவளி மலர், பெரிய அளவில் தனி மலராக வெளிவரத் தொடங்கிய ஆண்டில், அந்தச் சமயத்தில்தான் இரண்டாம் முறையாக, கலைமகளில் சேர்ந்தேன். சுமார் பன்னிரண்டு ஆண்டுகள், கலைமகள் தீபாவளி மலர், அமரா ராமரத்தினத்தின் மேற்பார்வையில் ஆண்டுக்காண்டு சிறப்பாக வெளிவந்திருக்கிறது. தீபாவளி மலரின் வண்ணப் பகுதிகளும் புகைப்பட இணைப்புகளும், அழகாக, பொலிவுடன் அமைவதற்காக, அவர் எடுத்துக்கொண்ட பிரயாசை கொஞ்ச நஞ்சமல்ல. அதைப்பற்றியே யோசித்து யோசித்துச் சலிப்படையாமல் அவர் கூறும் யோசனைகளும் வடிவமைப்புக்களும் பிரமிப்பாக இருக்கும். 'செய்வதைத் திருந்தச் செய்ய வேண்டும்' என்ற ஆசையும், வடிவமைப்பிலும் புகைப்பட அமைப்பிலும் கலையம்சம் பிரகாசிக்க வேண்டும் என்ற கண்ணோட்டமும் அவருடன் பிறந்த குணங்கள்.

படங்கள் 'பிளாக்'காகி வந்திருந்தாலும் திருப்திகரமாக அமையாவிட்டால், புதுப் பிளாக் செய்வதில் கொஞ்சமும் தயங்க மாட்டார். அந்த வகையில் ஏற்படும் செலவும் அவருக்கு ஒரு பிரமாதமாகப் படாது. எதையும் வாசகர்களின் கண்ணோட்டத்தில் தான் பார்ப்பார்.

பிற நாட்டுப் பத்திரிகைகள், நூல்கள் பலவற்றை நிறைய வாங்கிப்படிக்கும் பழக்கமுள்ள அதிபர், அவற்றில் சுவர்ச்சியாக ஏதாவது வடிவமைப்பு அமைந்திருந்தால், அதை மனத்தில் இருத்திக்கொள்வார். அவருடைய ரசிக மனத்தில் அந்தக் கருத்துக்கள் ஊட்டம் பெற்று வளர்ந்துகொண்டிருக்கும். தீபாவளி மலர் போன்ற சிறப்பிதழ்களில் அவை மேலும் தனித்தன்மையுடன் வடிவெடுக்கும்.

அப்படி அவருடைய மனத்தில் உருவெடுத்ததுதான் 'மஞ்சரி' பத்திரிகை. பிற மொழிகளிலும் அயல் நாட்டுப் பத்திரிகைகளிலும் வெளிவரும் அருமையான, வாழ்க்கைக்குத் தேவையான பல விஷயங்களைத் தமிழ் மக்களும் படித்தறிய வேண்டும் என்ற பேராவலின் சின்னந்தான் 'மஞ்சரி'. எத்தனை விதமான பத்திரிகைகளை மாதம் மாதம் வாங்கித் தருவார்! 'இன்ன கட்டுரை நன்றாக இருக்கிறது பாருங்கள்' என்று யோசனைகள் சொல்வாரே ஒழிய, 'இவற்றையெல்லாம் போடலாம்' என்றுகூடச் சொல்லமாட்டார். பத்திரிகை ஆசிரியர்களின் தேர்வுக்கு அந்தப் பொறுப்பை விட்டுவிடுவார்.

சுமார் கால்நூற்றாண்டு அவரிடம் பணிபுரியும் பேறுபெற்றிருக்கிறேன், கோபம் வந்து வெடிக்க வேண்டிய சந்தர்ப்பங்களில்கூட, அவர் கடைப்பிடித்தது போன்ற பொறுமையை வேறு யாரிடமும் காண முடியாது. பிடிக்காத எந்த விஷயத்தையும் மனத்தில் போட்டுக்கொண்டு, சஞ்சலப்படும் சுபாவத்தை அவரிடம் பார்க்க முடியாது. சமயத்தில் கோபம் வந்து கடிந்தாலும் உடனே கோபத்தை மறந்து, விளையாடப் போய்விடும் குழந்தைகளைப் போன்ற மனசு அவருடையது.

இயற்கையாக அமைந்திருந்த இந்தச் சுபாவந்தான் 'கண்ணன்' பத்திரிகையாக உருவெடுத்தது. அதில்தான் முதல் முதலில், என்னுடைய பத்திரிகையுலகப் பிரவேசமும் நடந்தது. 'நம்ப பக்கத்துப் பையன்; உதவியாக இருப்பானு பார்' என்று 1950 பிப்ரவரியில் அவர் கூறிய சொற்கள் இன்னும் பசுமையாக நினைவில் இருக்கின்றன. 'தம் அலுவலகத்தில் பணியாற்ற ஒருவனை நியமித்திருக்கிறோம்' என்ற தொனி இல்லை. தம் குடும்பத்தில் ஒருவனாக ஏற்றுக்கொண்டிருக்கிறோம் என்ற பரிவும் கனிவும் அன்பும் ததும்பிய தொனி அது.

சிறுவர்களுக்கு ஏற்ற விஷயங்களாகக் 'கண்ணன்' பத்திரிகையில் மாதம் மாதம் வெளியிட உதவியதுடன், 'கண்ணன் கழகம்,' என்ற அமைப்பை ஏற்படுத்தி, ஆண்டு தோறும் பல நகரங்களில் ஆயிரக்கணக்கான குழந்தைகளைக் கூட்டி, வேடிக்கையும் விநோதமும் விளையாட்டும் பரிசுமாக அத்தனை குழந்தைகளையும் அவர் மகிழ்வித்ததும், அவர் அந்த மகிழ்வில் நிறைவு கண்டதும் மறக்கமுடியாத நிகழ்ச்சிகள். சென்னை, திருச்சி, கும்பகோணம், மதுரை என்று பல நகரங்களில் இத்தகைய 'கண்ணன்' கழக நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன. அண்டை அயல் ஊர்களிலிருந்தெல்லாம் ஆயிரக் கணக்கான குழந்தைகள் வந்து கூடுவார்கள். குழந்தைகளை அழைத்துவரும் பெற்றோர்களின் மலர்ந்த முகங்களைக் கண்டு அமரர் ராமரத்தினம் பூரிப்படைந்தார். விளையாட்டிலும் பிற போட்டிகளிலும் வெற்றி பெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகளுடன் எல்லாக் குழந்தைகளுக்கும் இனிப்புக் காரமும் வழங்கி, மழலைகளின் முகமலர்ச்சியிலே இறைவனைக் காணும் பண்பு பெற்றவர்.

கலைமகள், மஞ்சரி, கண்ணன் ஆகிய மூன்று பத்திரிகைகளிலும் 'கண்ணன்' அவரை மிகவும் கவர்ந்திருந்தான். தமிழகத்துக் குழந்தைகளுக்குச் சிறந்த சிறுவர் பத்திரிகையை வண்ண மயமாக அளிக்க வேண்டும்

என்ற பேராவல் அவருக்கிருந்தது. எத்தனையோ ஆண்டுகள் நஷ்டத்தில் நடந்தும் அதை நிறுத்துவதற்கு அவர் மனம் துணியவில்லை. ஒரு சேவையாக அதைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்றே பாடுபட்டார். அச்சகத் தொழிலாளர்களிடமும் சரி, அலுவலக உதவியாளர்களிடமும் சரி, எந்த நிலையிலும் கொஞ்சமும் அதிர்ந்துகூடப் பேசமாட்டார். கோப தாபங்கள் இல்லாமல் மனிதனுக வாழமுடியாது. அப்படிச் சில சந்தர்ப்பங்கள் அமைந்தாலும், தந்தை தனயனுக்கு அறிவுறுத்திக் கூறும் உறுதிப்பாடே அந்தக் குரலில் தொனிக்கும்.

எந்தச் செயலையும் மனிதாபிமானத்துடன் அணுகி ஆராய்ந்து முடிவு எடுப்பது அவருடைய சிறப்பியல்பு.

தஞ்சைத் தரணியின் மனவளம் பெற்ற அவருக்கு ஆசார்ய ஸ்வாமிகளிடம் அளவற்ற பக்தி. பிறருக்குத் தெரிந்தும் தெரியாமலும் ஸ்ரீமடத்துக்கு எவ்வளவோ அரிய கைங்கரியங்கள் செய்திருக்கிறார். தீபாவளி மலரில் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளின் வண்ணப் படத்தை வெளியிட அவர் எடுத்துக்கொண்ட முயற்சியும், பல புகைப்படக்காரர்களை அணுகிப் படங்களைப் பெற்ற அக்கறையும், ஸ்ரீகாஞ்சி காமகோடி ஜகத்குரு ஆசார்ய ஸ்வாமிகளிடம் அவருக்கு இருந்த முதிர்ந்த பக்திக்கு அடையாளங்களாகும். ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் படம் அச்சாகும்போதும் சரிவர அச்சாகிவருகிறதா என்று அடிக்கடி அச்சகத்துள்ளும் போய்ப் பார்ப்பார். அதை வெறும் வண்ணப்படமாக எண்ணமாட்டார்; ஆசார்ய ஸ்வாமிகளின் ஒவ்வொரு திருவுருவத்தையும் ஒவ்வொரு ஸ்வாமிகளாகப் பாவித்து மெய் சிலிர்ப்பார். தீபாவளி மலர் தயாரானதும் ஸ்ரீ ஸ்வாமிகள் எங்கே முகாமிட்டிருந்தாலும், அங்கே போய் அவருடைய திருவடிகளில் இரண்டு மலர்களை வைத்து அநுக்கிரகமும் ஆசியும் பெறத் தவறமாட்டார்.

கலைமகளையும், மஞ்சரியையும் தம் இரு கண்ணேபோல் வளர்த்துவந்தார். பத்திரிகையின் வளர்ச்சிக்காக, 'இன்ன இன்ன போட்டி வைக்கலாம், புதுமையாக இன்னது செய்யலாம்' என்று ஆசிரியர் திரு கி. வா. ஜ. அவர்கள் கூறும் யோசனைகளையெல்லாம் அப்படியே நிறைவேற்றி வைப்பார். தம் தந்தையார் அமரர் நாராயணஸ்வாமி ஐயரின் நினைவு நாவல் பரிசுப் போட்டியின் முடிவுகளை விழாவாகவே நடத்திக் களித்தார். கலைமகள் நடத்திய புது மாதிரியான போட்டிகள், கட்டுரைத் தொடர்கள், பேட்டிக் கட்டுரைகள் முதலியவற்றின் வெற்றிக்கு அடித்தளமாய் இருந்திருக்கிறார். எதிலும் முன்நின்று பெயர் பெறவேண்டும் என்ற எண்ணத்தின் சாயலைக்கூட அவரிடம் காண முடியாது. நியாயமாகப் பெறவேண்டிய பெருமையின் பூரிப்புக்களைக்கூட அவர் பெற்று மகிழ்ந்ததாகத் தெரியவில்லை. இறையுணர்வும் ஆசார்ய பக்தியும் பூர்ணமாக வியாபித்திருந்த உள்ளத்தில், உலகாயதப் புகழ்களை எண்ணி இறுமாப்படைய இடம் ஏது?

*



# உழைப்பின் பெருமை

கி. வா. ஜகந்நாதன்

அந்தச் சாக்கடையில் அந்தப் பன்றி உருண்டு புரண்டு அதன் சுகத்தை அநுபவித்துக்கொண்டிருந்தது. அருகில் தரையில் ஒரு கழுதை புழுதியில் புரண்டு எழுந்து உடம்பை உதறிக்கொண்டு நின்றது. அதைப் பார்த்த பன்றி, ''கழுதை அண்ணா, ஏது இவ்வளவு ஓய்வாக இருக்கிறாயே! புழுதியிலே புரண்டால் உடம்பெல்லாம் தினவு எடுக்காதா?'' என்று கேட்டது.

கழுதை, ''தினவா? உடம்பில் உள்ள தினவெல்லாம் போய்விடுமே, இந்தப் புழுதியில் புரண்டால். அந்தச் சாக்கடையில் புரண்டு நீ என்ன சுகத்தைக் கண்டாய்? ஒரே சேறும் சகதியுமாக இருக்கிறதே!'' என்றது.

''என்ன அப்படிச் சொல்கிறாய், அண்ணா! இங்கே எவ்வளவு சுகமாக இருக்கிறது, தெரியுமா? மனிதர்கள் என்ன என்னவோ குளிர் சாதனங்களை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்தச் சுகம் வருமா?''

''உடம்பெல்லாம் சேறறைப் பூசிக்கொண்டு கிடப்பது ஒரு சுகமா?'' என்று கேட்டது கழுதை.

''இதை அநுபவித்துப் பார்த்தால்தான் இதன் சுகம் தெரியும். நீ வேண்டுமானால் கொஞ்சம் இங்கே வந்து புரண்டு பாரேன்'' என்று சொல்லிய பன்றி, கழுதை புரள்வதற்காக ஒதுங்கிக்கொண்டது.

கழுதை அந்தச் சாக்கடையில் விழுந்து புரண்டு எழுந்தது. ''சே! இதென்ன ஆபாசம்! இதிலே போய் ஒருவன் விழுந்து கிடப்பானா? ஊரில் உள்ள அசுத்தங்களெல்லாம் வந்து சேருகிற இதிலே கிடப்பது உனக்கு அசிங்கமாகத் தோன்றவில்லையா?'' என்று கேட்டுக்கொண்டே கரைக்கு வந்து மறுபடியும் புழுதியில் புரண்டு எழுந்தது. அதன் உடம்பெல்லாம் திட்டுத் திட்டாக மண் ஒட்டிக்கொண்டது.

''உன் பேச்சைக் கேட்டு இந்தச் சேற்றைப் பூசிக்கொண்டேனே! என்ன பைத்தியக்காரத்தனம்? இந்தச் சேறு போவதற்கு எங்காவது குளத்திலோ குட்டையிலோ போய் விழுந்து எழ வேண்டியதுதான்'' என்றது கழுதை. அதற்கு ஒரே அருவருப்பாயிருந்தது.

பன்றி சிரித்தது. ''இதை அநுபவிக்க உனக்குக் கொடுத்து வைக்கவில்லை. உன்மேல் குற்றம் இல்லை; மனிதர்கள் அப்படி வளர்த்திருக்கிறார்கள். அவர்களுக்கு உழைத்து உழைத்து நீ ஓடாகப் போய்விட்டாய்!''

கழுதை, ''நான் என்ன பிரமாதமாக உழைத்து விட்டேன்? என் எஜமானன் சலவை செய்ய வேண்டிய அழுக்குத் துணிகளை என்மேல் மூட்டை கட்டிவைத்து ஆற்றுக்கு ஓட்டிப் போகிறான். அங்கே அவற்றை இறக்கிச் சலவை செய்கிறான். பிறகு சலவை செய்த துணி மூட்டையை என்மேல் வைத்து வீட்டுக்குக் கொண்டு வருகிறான். இது என்ன பெரிய வேலையா?'' என்றது.

''பேஷ்! பேஷ்! உன் அடிமைத்தனத்தைப் பாராட்டிப் பேசுகிறாயே! மனிதனுக்கு வேலை செய்வது அடிமைத்தனம் அல்லவா? என்னைப் பார். எனக்கும் என் எஜமானன் கஞ்சி கொடுக்கிறான். அதைக் குடித்துக் கொழுகொழு என்று வளர்ந்திருக்கிறேன். ஆனால் அவன் எனக்கு ஏதாவது வேலை வைக்கிறானா? நான் மனம் போனபடி எங்கும் போகிறேன். இந்த மாதிரி இடங்களில் விழுந்து புரண்டு இன்பம் அநுபவிக்கிறேன். உனக்கு இதெல்லாம் புரியாது, மனிதனுக்கு அடிமைப் பட்டுப் பட்டு உன் புத்தியே பேதலித்து விட்டது!''

இதைக் கேட்ட கழுதை யோசனையில் ஆழ்ந்தது. பன்றி சொல்வதிலும் உண்மை இருக்குமோ என்று எண்ணியது. எந்த வேலையும் செய்யாமல் பன்றி வளர்ந்து வருவதைத்

அறிந்து அதற்கும் பொறாமை கூட ஏற்பட்டது.

"தம்பி, கொஞ்சம் நீ மேலே எழுந்து வா. சிறிது தூரம் காலாற நடந்து போய்விட்டு வருவோம்" என்றது கழுதை. சரியென்று பன்றி கழுதையோடு புறப்பட்டது.

போகிற வழியில் ஒரு யானை நின்று கொண்டிருந்தது. அதைக் கண்டு பன்றியும் கழுதையும் சற்றே நின்றன. "யானை அண்ணா! நீ சௌக்கியமா? உனக்கு வேண்டிய தீனி கிடைக்கிறதா?" என்று பன்றி கேட்டது.

"யாரடா இது நம்மை விசாரிக்கிறது?" என்று யானை அதைப் பார்த்தது.

"யானை அண்ணா! நீயும் நானும் ஒருவிதத்தில் சமமாக இருக்கிறோம். எனக்கு உன்னைப் போலத் தும்பிக்கை இல்லையே ஒழிய மற்ற எல்லா விதத்திலும் நான் குட்டி யானையைப் போலவே இருக்கிறேன். மனிதர்களுக்கு நீ உழைப்பது உண்டா?"

யானை அதைக் காதில் வாங்கிக்கொள்ளாததுபோல இருந்தது. பன்றி அதன் பக்கத்தில் போய், "அண்ணா, உன்னைப் பார்த்தால் ஒரு சிறிய குன்றைப் போல இருக்கிறாயே! எனக்கும் தந்தம் இருக்கிறது; உனக்கும் இருக்கிறது. உன் தந்தம் சற்று நீளம் அதிகம். அவ்வளவுதான்" என்றது.

'இது என்ன உளறுகிறது?' என்று எண்ணிய யானை, "நீ என்னப்பா சொல்கிறாய்?" என்று கேட்டது.

"உனக்கு இவ்வளவு பெரிய உடம்பு இருக்கிறதே! இதற்கு எவ்வளவு தீனி வேண்டியிருக்கும்? அந்தத் தீனி உனக்குக் கிடைக்கிறதா?"

"எனக்கு என் எஜமானன் வேண்டிய தீனி கொடுக்கிறான். அரச இலையைக் கட்டுக் கட்டாகக் கொண்டு வந்து தருகிறான். அறுகம்புல்லைத் தருகிறான். அரிசியையும் வெல்லத்தையும்கூடத் தருகிறான். சில சமயங்களில் தேங்காய்கூடக் கிடைக்கிறது."

"அப்படியா? இவற்றை எல்லாம் உனக்குச் சும்மாதானா தருகிறான்?"

"சும்மா இல்லாமல் விலையா கொடுப்பார்கள்?"

"உன்னிடம் மனிதர்கள் வேலை வாங்குவதில்லையா?"

"நன்றாக வேலை வாங்குவார்கள். வெட்டின மரங்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு எடுத்துப் போவேன். இன்னும் இதைப் போலச் சில வேலைகள் செய்வேன்."

பன்றி கழுதையைப் பார்த்துப் பேசியது: "கழுதை அண்ணா! மனிதர்கள் எவ்வளவு சாமர்த்தியக்காரர்கள் பார்! யானையண்ணாவுக்குத் தீனி போட்டுச் சரியானபடி வேலை வாங்குகிறார்கள். இந்த மனிதர்கள் எல்லாரும் தமக்கு வேலை செய்யவேண்டும் என்று நினைக்கிறவர்கள். நீயுந்தான் அவர்களுக்காக வேலை செய்கிறாய். யானை அண்ணா பெரிய பெரிய வேலைகளையெல்லாம் செய்கிறார். ஆனால் என் விஷயமோ அலாதி. எனக்கு மனிதர்கள் உணவு தருகிறார்கள். ஆனால் எந்த வேலையையும் வாங்குவதில்லை. இதை நினைக்கிற



போது நான் பெரிய அதிர்ஷ்டசாலி என்று தான் நினைக்கிறேன்.''

''சரி, சரி! நான் என் இடத்துக்குப் போகிறேன். நான் இங்கெல்லாம் சுற்றித் திரிவதைக் கண்டால் என் எஜமானன் அடித்து நொறுக்கிவிடுவான்'' என்று சொல்லிக் கழுதை போய்விட்டது.

''அதன் துரதிர்ஷ்டத்தைப் பாத்தாயா, யானை அண்ணு?'' என்று பன்றி சொல்லிச் சிரித்தது.

''உன்னுடு பேச நேரமில்லை. வேலை இருக்கிறது'' என்று யானையும் நகர்ந்தது.

'என்ன பைத்தியக்கார உலகம் அடா இது? இவ்வளவு பெரிய யானை மனிதனுக்குப் பயப் படுகிறது. அவன் இட்ட வேலையைச் செய் கிறது. கழுதைதான் மனிதனுக்காக உழைக் கிறதென்ருல் இந்தப் பெரிய அண்ணுவும் அதைத்தானே செய்கிருர்! மனிதர்களே சுயகாரியப் புலிகள். நல்ல வேளை! நமக்கு அந்தத் தொல்லையெல்லாம் இல்லை' என்று நினைத்துக் கொண்டே பன்றி தன் சொர்க்க மாகிய சாக்கடைக்குப் போய்விட்டது.

சில நாட்கள் கழிந்தன. மறுபடியும் யானை யும் கழுதையும் சந்தித்தன. ''யானை அண்ணு, சௌக்கியமாக இருக்கிருயா?'' என்ற கழுதை.

''நன்ருகத்தான் இருக்கிறேன். எனக்கு என்ன குறைச்சல்? இன்றைக்குக்கூட அரிசியும் வெல்லமும் சாப்பிட்டேன். கரும்புகூடக் கொடுத்தான் என் எஜமான்.''

''அப்படியா? நாம் எல்லாம் மனிதர்களுக்கு உழைப்பதாகச் சொல்லிப் பரிகாசம் செய்ததே, அந்தப் பன்றிக்கு இவை எல்லாம் கிடைக் குமா? எங்கே அந்தப் பன்றியைக் காணேமே! இந்தச் சாக்கடையில்தானே விழுந்து கிடக் கும்?'' என்றது கழுதை.

அப்போது அங்கே ஒரு நாய் வந்தது. கழுதை அதைப் பார்த்து, ''நாய் அண்ணு, இங்கே ஒரு பன்றி விழுந்து கிடக்குமே! அதை இப் போது காணவில்லையே; நீ அதை எங்கே யாவது கண்டாயா?'' என்று கேட்டது.

''அதுவா? அதை வெட்டிப் பொங்கலிட்டு மனிதர்கள் உண்டுவிட்டார்கள்'' என்று நாய் சொன்னபோது கழுதைக்குச் சொரேரென்றது;

''என்ன? கொன்றுவிட்டார்களா? அது அவர் களுக்காக எந்த வேலையும் செய்யாமல் சுகமாக இருப்பதாகப் பெருமை அடித்துக்கொண் டதே!'' என்றது.

யானை நிதானமாகப் பதில் சொல்லியது: ''ஆமாம் அப்பா, உழைப்பே இல்லாமல் உண்டு கொழுத்திருப்பவர்களுக்கெல்லாம் இந்தக் கதி தான் நேரும். நாம் நம்மால் ஆன உழைப் பைக் கொடுத்து வயிருர உண்ணுகிறோம். பன்றி உழைக்காமல் உண்டு கொழுத்து வளர்ந்தது. கடைசியில் அதுவே பலியாகிவிட்டது.''

''உண்மைதான் அண்ணு; உழைப்பதில் எந்தவிதமான அகௌரவமும் இல்லை. உழைக் கிறோம், உண்ணுகிறோம் என்ற திருப்திக்குச் சமானம் ஒன்றும் இல்லை'' என்று கழுதை சொல்லி மனநிறைவோடு தன் இடத்துக்கு புறப்பட்டுவிட்டது.

*

## சௌந்தரா கைலாசம்

ஓலமிடும் நதிபாயும் ஜம்மு நாட்டில்
உள்ளகட்ரா அருகினிலே மலைப்பு றத்தில்
நீலநெடு மால்தங்கை வைஷ்ண வீ, நீ
நீரோடும் பாறையின்மேல் நின்றி ருப்பாய்!
கோலவிழி கொண்டஎழில் மாதே, நீதான
கொண்டதுவோ திருக்கரத்தில் சங்கு சக்கரம்;
ஞாலமிதைக் காத்திடவே கருடன் மீது
நாடிவந்தே அருள்புரிவாய் போற்றி போற்றி!

கானகத்துக் குகைநடுவே வீற்றிருப்பாய்!
கசிந்துருகும் பக்தர்களின் அகத்தி ருப்பாய்!
மானிடர்கள் புகமுடியா இடத்தி ருப்பாய்!
மண்ணின்கீழ்ப் பாதாளம் தனிலி ருப்பாய்!
நான்மறைகள் கண்களெனக் கொண்டி ருப்பாய்!
நலங்குலைக்கும் அசுரர்களை வென்றி ருப்பாய்!
வான்கருணை உடையவளே, என்றன் தாயே,
வைஷ்ணவீ, எளியேனை வாழ்விப் பாயே!

இருள்விரட்டும் ஒளிவிழியால் சற்றே நோக்கி
இன்னமுதம் தளிர்த்திடும்உன் விரலால் அன்பு
பெருகிவர எனைத்தடவிப் பேணி நின்று
பேரருளை நீதரவே வேண்டும்; நெஞ்சம்
கருகிவிட எவ்வகையும் செய்திடாமல்
கனிவுடனே இளையவளைப் பார்க்க வேண்டும்!
கருணையதை எல்லையிலா வண்ணம் பெய்து
காப்பவளே, உன்பாத கமலம் வாழ்க!

இன்பத்தைத் தந்தாயேல் உன்னை நெஞ்சில்
எண்ணுமல் மறந்திடுவேன் என்ப தாலே
துன்பத்தைத் தந்தாலும் துணையே, உன்னைத்
தொழும்கடமை தினமுடையேன், இதயம் தன்னைத்
தின்பண்டம் எனத்தின்னும் கவலை எல்லாம்
தீர்ந்துவிடும் ஓம்ஐம்ஹ்ரீம் ஸ்ரீம்ஓம் ஓதி
அன்பைத்தண் அருளோடு வேண்டி நின்றேன்;
அடியேனைக் கழல்காட்டி ஆண்டு கொள்ளே!

அம்மா! உன் சந்நிதியின் புனிதம் இந்த
அகிலமதை வாழ்விக்கும்; உனையு ணர்ந்தால்
எம்மாயை சூழ்ந்தாலும் அழிந்தி டாமல்
இன்புறலாம்; இதயத்துள் மகிழ்ச்சி வெள்ளம்
கும்மாளம் இட்டுவரும்; வாழ்க்கை முற்றும்
குறையேதும் வாராது; பக்தி பொங்கச்
செம்மாந்து நின்றிடலாம்; எனவே உன்றன்
திருவடியில் தலைசாய்த்து வணங்கு வேனே!

கலைமகளாய் நீவிளங்கி யாவ ருக்கும்
கல்வியமு தூட்டிடுவாய்; அன்பு காட்டும்
மலைமகளாய் நீவிளங்கிப் புவியில் என்றும்
மகிழ்ச்சியதை நிறைத்திடுவாய்; செல்வம் நல்கும்
அலைமகளாய் நீவிளங்கி உயிர்கள் தம்மை
அரவணைப்பாய்; ஐம்ஹ்ரீம் ஸ்ரீம்என்று சொல்லித்
தலைவியுனை நான்பணிந்து வணங்கி நின்று
சந்ததமும் காத்தருள வேண்டு வேனே!

சு..



**உங்களுக்காக சேமிக்க**
**எங்களுக்கு உத்திரவிடுங்கள்!**

## எங்களிடம் ஒரு வருட காலத்திற்கு
## ரூ. 1000/- டெபாசிட் செய்வீர்களாயின்

உடனடியாக 50 கிராம் வெள்ளிக் குத்துவிளக்கு ஒன்று
அன்பளிப்பாக வழங்கப்படுகிறது.

அதோடு வருட முடிவில் ரூ.1125/-பெறுமான வைர நகை, தங்க நகை, வெள்ளிப் பாத்திரம் அல்லது ரொக்கமாக A/c Payee செக் மூலம் பெற்றுக்கொள்ளலாம்.

### ஒரு வருட கால டெபாசிட்

| டெபாசிட் தொகை: | அன்பளிப்பு | வருட முடிவில் பெறுமானம் |
|---|---|---|
| ரூ. 1000 | 50 கிராம் வெள்ளிக் குத்துவிளக்கு 1 | ரூ. 1125 |
| ரூ. 2000 | 100 கிராம் வெள்ளிக் குத்துவிளக்கு 1 | ரூ. 2250 |
| ரூ. 3000 | 150 கிராம் வெள்ளிக் குத்துவிளக்கு 1 | ரூ. 3375 |
| ரூ. 5000 | 250 கிராம் வெள்ளிக் குத்துவிளக்கு 1 | ரூ. 5625 |
| ரூ. 10000 | 500 கிராம் வெள்ளிக் குத்துவிளக்கு 1 | ரூ. 11250 |

இத்திட்டத்தில் சேர விரும்பும் உள்ளூர், வெளியூர் அன்பர்கள் டெபாசிட் தொகையை நேரிலோ, A/c payee செக், டிராப்ட் மூலமாகவோ 'லதா ஜுவல்லர்ஸ்' என்ற பெயருக்கு அனுப்பவேண்டும்.

அனைவரும் இத்திட்டத்தில் சேர்ந்து பயன்பெற வேண்டுகிறோம்.

தொலைபேசி 31386.
# லதா ஜுவல்லர்ஸ்
**M.V. பாஸ்கர நாடார்**

**வைர நகை & தங்க நகைகள் வியாபாரம்**

104, தெற்காவணி மூலவீதி, மதுரை-625001 ஃபோன். 31386

—ராஜன்



கோவாக் கடற்கரை

# எழில் கொஞ்சும் கோவா

மேற்குத் தொடர்ச்சி மலைகளில் உற்பத்தியாகி, மேற்கு நோக்கிப் பாய்ந்து, கோவாவைப் பொன் விளையும் பூமியாக்கி, அரபிக் கடலில் கலக்கும் அழகும் சுபிரமும் கொண்ட ஜீவ நதிகள், திரும்பிய பக்கமெல்லாம் தென்னந் தோப்புக்கள், பாக்கு மரச் சோலைகள், இடையிடையே நெல்வயல்கள், மண்டிக் கிடக்கும் மா-பலாத் தோட்டங்கள், பொன்னிறத்திலும் ரத்தச் சிவப்பிலும் பழங்கள் கனிந்து குலுங்கும் பச்சை இலை போர்த்த முந்திரிக் காடுகள், அடர்ந்த அன்னாசிப் புதர்கள், மலைகள், அங்கங்கே அழகான வீடுகள் கொண்ட சின்னஞ்சிறு கிராமங்கள், நாலைந்து சிறு நகரங்கள், ஆறுகள் சங்கமிக்கும் அரபிக் கடல். அற்புதமான பல கடற்கரைகள், விருந்தோம்பும் இயற்கையோடு இணைந்து வாழும் இதமான போக்குக் கொண்ட மக்கள் கூட்டம்;. இதுதான் எழில் கொஞ்சும் கோவா.

நம் நாட்டின் தென்பகுதியிலேயே இயற்கைத் தேவி கொலு வீற்றிருந்து தன் எழில் சாம்ராஜ்யத்தை நடத்தும் இடம் கேரளந்தான் என்று இதுவரை நான் நினைத்திருந்தேன். கேரளத்து எழுத்தாளர்களின் அழைப்பு வரும்போதெல்லாம் அதை ஏற்றுக்கொண்டு போய்க் கேரளத்தின் பிற பகுதிகளையும் சுற்றிப் பார்த்து வருவது வழக்கம்.

கோவாவில் சில ஆண்டுகள் தங்கிய ஒரு கேரளத்து நண்பர் சொன்னார்: ''நாங்கள் கேரளத்தில் மரம் செடி கொடிகளை நட்டு வளர்க்கிறோம். கோவாவில் அப்படியில்லை. அங்கே தாமாகவே மண்டி வளர்கின்றன.'' நண்பரின் பேச்சு உண்மை



சுத்தமான வீதிகள்

# அகிலன்

என்பது அங்கே போன பிறகுதான் தெரிந்தது; பசுமை, பசுமை, எங்கே திரும்பினாலும் பசுமை! குளுமை, குளுமை, எங்கே திரும்பினாலும் குளுமை!

அனைத்திந்தியக் கொங்கணி இலக்கியச் சங்கம் தன் மாநாட்டைக் கோவாவின் தலைநகர் பஞ்ஜிமில் வைத்திருந்தது. (தலைநகரத்தைப் பனஜி என்றும் அவர்கள் அழைக்கிறார்கள்). சாகித்திய அகாதமியும் தனது பொதுக்குழு, செயற்குழு, பரிசளிப்பு விழாக் கூட்டங்களை அங்கே வைத்திருந்தது. நானும், நா. பா. வும், எழில் முதல்வனும் இந்த பிப்ரவரி 24-ஆம் தேதி சென்னையிலிருந்து பம்பாய் வழியே செல்லும் விமானத்தில் சென்றோம். பம்பாயிலிருந்து தெற்கே சுமார் ஒரு மணி நேர விமானப் பயணந்தான். பங்களூர் வழியாகவும் கோவாவுக்குச் செல்லலாம்,

போலிம் விமான நிலையத்தில் இறங்கியவுடனே, கோவா ஓர் உல்லாசப் பயணிகளின் சொர்க்கம் என்பது தெரிந்துவிட்டது. மேல்நாட்டு முறையில் தோற்றமளித்த சில ஆண்களும் பெண்களும் தங்கள் தங்கள் ஓட்டலின் பெயர்களை வெளியிட்ட அட்டைகளை நெஞ்சுக்கு நேரே வைத்துக்கொண்டு நின்றார்கள். சில ஓட்டல்காரர்கள் விமான நிலையத்திலிருந்து விருந்தினர்களை அழைத்துச் செல்வதற்கு தங்கள் கார்களையே அனுப்பியிருந்தார்கள். வெளிநாட்டுப் பயணிகள் அன்று குறைவுதான். அவர்களில் ஹிப்பிகளைப் போல் தோற்றம் அளித்தவர்கள் மூன்று நான்கு பேர்.

வெளியில் டாக்சிகள் பல நின்றிருந்தன. எல்லாமே மீட்டர் இல்லாத டாக்ஸிகள். இருந்தாலும் அவர்கள்

நியாயமான வாடகையையே வசூலித்தார்கள் என்பதைப் பிறகு தெரிந்து கொண்டேன். பஸ்களும் நின்றன. அங்கிருந்து கோவாவின் தலைநகரம் பஞ்ஜிம் சுமார் முப்பதுகிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது.

வடக்கே காஷ்மீர், பஞ்சாப், டில்லி, கிழக்கே அஸ்ஸாம், வங்காளம், ஒரிஸ்ஸா முதலிய பகுதிகளிலிருந்தெல்லாம் எழுத்தாளர்கள் வந்திருந்தார்கள், எங்களுக்காகக் கொங்கணி இலக்கியச் சங்கத்தின் வரவேற்புக் குழுத் தலைவர் உதய பெம்பரோ, 'வேன்'கள் கொண்டு வந்திருந்தார். புறப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம் கோவாவின் குளுமை எங்களைச் சூழ்ந்து கொண்டது. ஜுவாரி நதி சங்கமமாகும் கடற்பகுதி எங்களுக்கு இடது புறத்திலும் தென்னந் தோப்புக்கள் வலது புறத்திலும் கண்கொள்ளாக் காட்சி தந்தன.

இடையிலே தென்பட்ட கிராமத்து வீடுகள் பல நம் நாட்டின் பிற பகுதிக் கிராமத்துக் கூரை வீடுகள் போல் தங்கள் வறுமையைப் பறைசாற்றவில்லை. கூரை வீடுகள் சில தென்பட்டாலும் அவை குறைவாகவே இருந்தன. கிராமவாசிகள்கூடத் தங்கள் வீடுகளை அழகாக வைத்துக் கொள்ளும் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தனர். சின்னஞ்சிறு பூத்தொட்டிகள் கம்பிகளால் இணைத்து வீடுகளுக்குமுன் தொங்கவிடப்பட்டிருந்தன. அங்கங்கே பூச் செடிகளையும் நட்டு வளர்த்திருந்தார்கள்.

தெற்கேயிருந்து ரெயிலில் சென்றாலும், காரில் சென்றாலும், எந்தத் திசையிலிருந்து விமானத்தில் சென்றாலும் கோவாவின் தலைநகரத்துக்கு ஜுவாரி ஆற்றைக் கடந்துதான் செல்லவேண்டும். பரப்பும் ஆழமும் கொண்ட ஆறு அது. ஆற்றுக்கு இன்னும் பாலம் கட்ட முடிக்கப்படவில்லை. மலேசியாவிலுள்ள பினாங்குக்கு எப்படி நீராவிப் படகில் கார்களையும் பிற வாகனங்களையும் ஏற்றிச் செல்லுகிறார்களோ அப்படித்தான் இங்கும் செல்கிறார்கள். ஆனால் இங்குள்ள படகில் இரண்டு அல்லது மூன்று கார்களுக்கு மேல் ஏற்றமுடியாது.

இந்த வகையில் பார்த்தால் இயற்கையாகவே நாட்டின் பிறபகுதிகளிலிருந்தும் கோவா சற்று ஒதுங்கி இருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். இந்தக் கரையிலிருந்து அந்தக் கரைக்கு யாரும் அவசரமாகப் போய் விட முடியாது. நாங்கள் ஆற்றங்கரைக்குச் சென்றபோது ஏராளமான பஸ்களும் கார்களும் டாக்சிகளும் காத்துக் கொண்டு நின்றன. விமானப் பயணிகள் செல்லும் பஸ்ஸுக்கும் அரசு அனுமதி பெற்ற வாகனங்களுக்கும் முன்னுரிமை உண்டு. நாங்கள் முன்னுரிமை பெற்றிருந்ததால் அடுத்து வந்த நீராவிப் படகில் எங்கள் 'வேன்' ஏறிக் கொண்டது.

மறுகரையிலும் பல வாகனங்கள் ஆற்றைக் கடப்பதற்குக் காத்து நிற்பதைக் கண்டேன். ஒரு வகையில் பார்த்தால் இது துரிதமான போக்குவரத்துக்கும் நாட்டின் பிற பகுதிகளோடு அவசரமாகத் தொடர்பு கொள்வதற்கும் இடைஞ்சல்தான். ஆனால் இந்தச் சிறு தடையே மற்றொரு வகையில் கோவாவின் தனித் தன்மையைக் கட்டிக் காத்துக் கொள்வதற்கு உதவியாகவும் இருக்கிறது.

450 ஆண்டுகளாகப் போர்த்துக்கீசியரின் ஆட்சியில் இருந்து, பிறகு 1961-இல் விடுவிக்கப் பெற்ற கோவா, போர்த்துக்கீசிய ஆட்சியினால் ஏற்பட்ட சில நல்ல விளைவுகளை இதுவரை தன் வாழ்க்கை முறையாக ஏற்றுக்கொண்டு வந்திருக்கிறது. பொருளாதாரத் துறையில் பயங்கரமான வறுமை அங்கிருப்பதாய்ச் சொல்ல முடியாது. பிச்சைக்காரர்களை அங்கே காண்பது அரிது. நான் இருந்த நான்கு நாட்களில் இரண்டே இரண்டு பேரைத்தான் தேடிப் பிடித்தேன். வெளிநாட்டுப் பயணிகள் வந்து கூடும் ஓர் இடத்தில் பிச்சைக்காரர்களைக் காண முடியாதது பெரு வியப்பல்லவா? சமூகத் துறையில் சுமார் 57 சதவீதம் இந்துக்களாகவும் 40 சதவீதம் கிறிஸ்தவர்களாவும் இருந்துங் கூட வகுப்பு ஒற்றுமை முதல் தரமாக நிலவுகிறது. வகுப்புக் கலவரங்கள் அங்கு நடப்பதில்லை. நகரங்களும், கிராமங்களும், வீடுகளும் கூடியவரை சுத்தமாகவும் சுகாதாரத்தோடும் வைத்துக் கொள்ளப்படுகின்றன. போர்த்துக்கிசியக் கலாசாரம் மக்களைக் கலைச் சுவை கொண்டவர்களாக, ஆடல் பாடல் விழாக்கள் இவற்றில் ஆர்வம் கொண்டவர்களாக, அழகுணர்ச்சி மிக்கவர்களாக மாற்றியிருக்கிறது.

இப்போது அவர்களைப் பிரித்துள்ள ஆற்றுக்குக் குறுக்கே இன்னும் ஓரிரண்டு ஆண்டுகளில் பாலம் போடப்பட்டுவிடும். பாதி வேலை இதற்குள் முடிந்துவிட்டது. பாலம் போட்டு நாட்டின் பிற பகுதி மக்கள் தங்கள் பிரச்னைகளோடு அங்கே வந்து நுழைவிட்டால் தங்கள் தனித்தன்மை குலைந்துவிடுமோ என்ற கவலை அவர்களுக்கு இல்லாமல் இல்லை. அந்தக் கவலையில் நியாயம் இருப்பதாக எனக்குத் தோன்றியது.

மாலை நான்கு மணிக்கெல்லாம் பஞ்ஜிம் நகரத்துக்கு வந்து சேர்ந்தோம். எங்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த ஓட்டல் அறையில் பெட்டிகளைப் போட்டு விட்டு நகரத்தைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினோம். நகரத்துக்கு வடக்கு எல்லையாக மாந்தவி ஆறு மந்த கதியில் மதமதப்போடு சென்று மேற்கே உள்ள அரபிக் கடலில் கலக்கிறது. இருகரையும் தொட்டுக்கொண்டு ஓடும் அந்த விசாலமான ஆற்றின் கரையிலிருந்துதான் நாள்தோறும் கப்பல் பம்பாய்க்குப் பயணிகளை ஏற்றிக்கொண்டு கடல் வழியே செல்கிறது. அதைப் போல் இரும்புச் சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுக்கும் இரும்புத் தாதுவைச் சுமந்து செல்லும் சிறிய சரக்குக் கப்பல்களையும் அந்த நதியில் காணலாம்.

நகரத்துக்கு வடக்கு எல்லை மாந்தவி ஆறு என்றால் மேற்கு எல்லை அரபிக்கடல்.

ஆற்றங்கரையை ஒட்டி நெடுந்தொலைவுக்குப் பூங்கா அமைத்திருக்கிறார்கள்.

பூங்காவை ஒட்டி இருபக்கங்களிலும் நடைபாதைகள் கொண்ட நீண்ட நெடுஞ்சாலை. இருபுறங்களிலும், மரங்களும், நடைபாதைகளில் ஆங்காங்கே பூச்செடிகளும் நட்டு வளர்த்திருக்கிறார்கள். அந்தச் சாலையில் நடப்பதே இனிய அநுபவமாக இருந்தது.

அந்தச் சாலையிலிருந்து தெற்கே தெருக்கள் பிரிந்து செல்கின்றன. சீரான அமைப்புள்ள ஒழுங்கான தெருக்கள். தெருக்களின் ஓரங்களிலும் நடை பாதைகள். நகரத்தின் மத்தியில் ஒரு மணற்குன்று; மணற்குன்றின் மேல் புதிது புதிதாக வீடுகள் எழும்பிக்கொண்டிருக்கின்றன.

பஞ்ஜிம் நகரத்தைப் பார்த்தபோது எனக்கு ரஷ்யாவில் நான் கண்டு களித்த



'ஸிக்மோ' கொண்டாட்டம்

சில சிறு நகரங்களின் நினைவு வந்தது. ஒழுங்கான சாலைகளும், சாலை ஓரங்களில் மரங்களும், மத்தியில் பூங்காக்களும் கொண்ட நகரங்கள். போர்ச்சுக்கீசியர் தங்களது நாட்டு நகரங்களைப் போலவே இதை உருவாக்கியிருக்கிறார்கள. கூடுமான வரை குப்பை கூளங்கள் இல்லாமல் நகரத்தை மக்கள் சுத்தமாக வைத்துக்கொண்டிருப்பது எனக்கு மகிழ்ச்சி அளித்தது.

ஆனால் கோவா மக்களல்லாத வெளியூர்வாசிகளின் கூட்டம் அங்கே பெருகப் பெருக, சாலையோரங்களும் ஆற்றங்கரையோரமும், ஓரளவு அசுத்தப்படுவதை என்னால் காணாமல் இருக்க முடியவில்லை.

மறு நாள் அதிகாலையில் எழுந்து ஓட்டலில் காபியை நாங்கள் எதிர்பார்த்தபோது தான் கோவாவாசிகளின் சுறுசுறுப்பை எங்களால் தெரிந்து கொள்ள முடிந்தது. மிகவும் முக்கியமாகக் காபி தேவையென்றால், எங்களுக்காக, ஆறரை - ஏழுமணிக்கெல்லாம் காபி தருவதாக வாக்களித்தான் ஓட்டல் பையன்!

எழுந்து ஆறு மணிக்கெல்லாம் சாலையில் நடந்தோம். எங்களைத் தவிர வேறு மனித நடமாட்டமே அந்த வேளையில் அங்கு இல்லை. நெடுந்தூரம் நடந்து ஒரு நடைபாதைக் கடைக்குச் சென்று, கடைக்காரனை அவசரப்படுத்தி ஏழு மணிக்குக் காபி சாப்பிட்டோம். அதிகாலையில் எழுந்திருப்பது அவர்களுக்கு வழக்கமில்லை போலும்!

எங்களைக் கவனிப்பதற்கு மௌஸா என்ற ஓர் இலக்கிய ரசிகரிடம் பொறுப்பைக் கொடுத்திருந்தார்கள். அவர் ஒரு பட்டதாரி; மளிகைக் கடை வைத்து வியாபாரம் செய்கிறவர்.

அவரிடம் கோவா வாசிகளின் நிதானத்தைப் பற்றிக் கேட்டேன்.

''நானே காலையில் ஏழுக்குத்தான் எழுந்திருப்பேன். குளித்து முழுகிச் சிற்றுண்டி முடித்துக் கடை திறக்க ஒன்பது மணியாகும். பகல் ஒரு மணிக்கெல்லாம் கடையை மூடிவிட்டு வீட்டுக்குப் போனால், மாலையில் நாலு மணிக்கு வந்துதான் திறப்பேன். இரவு எட்டு வரை கடை இருக்கும். அவ்வளவுதான்'' என்றார் மௌஸா.

''எங்கள் ஊரில் காலை ஆறு மணிக்குத் திறந்து இரவு ஒன்பதுக்குத்தான் மூடுவார்கள்'' என்றேன்.

வியப்போடு என்னைப் பார்த்தார் நண்பர்.

''மனிதர்கள் காசு சம்பாதிப்பதற்காக வாழவேண்டுமா? அல்லது வாழ்வதற்காகக் காசு சம்பாதிக்கவேண்டுமா? என்னுடைய வாழ்க்கையைக் கெடுத்துக்கொண்டு நான் தேவைக்கதிகமாகச் சம்பாதிக்க விரும்பவில்லை'' என்றார். இவ்வளவுக்கும் அந்த நண்பர் கார் வேறு வைத்திருந்தார்.

பெரும்பாலான கோவாமக்களின் வாழ்க்கைத் தத்துவம் இதுவாகத்தான் இருக்க வேண்டும். பிற்பகல் வேளைகளில், சாப்பிட்டுவிட்டு அவர்கள் ஓய்வெடுக்கும் நேரங்களில், பல கடைகள் அங்கே திறக்கப்படுவதில்லை. பெரும் பணக்காரர்கள் சிலர் அங்கே வாழ்ந்தாலும் அவர்களிடம் கொடைத்தன்மை இருக்கிறது. உள்ளது போதுமென்ற மனமும் உள்ளதைக் கொண்டு நல்ல விதமாக வாழ வேண்டுமென்ற திருப்தியும் பலரிடம் அங்கு இருக்கவே செய்கின்றன. ஏழை எளியவர்கள்கூடச் சாப்பாட்டுக்கோ துணிக்கோ சிரமப்படுகிறவர்கள் அங்கே இல்லையாம்.

கோவாவின் மக்கள் தொகை சுமார் பத்து லட்சம். மூவாயிரம் கள்ளுக் கடைகளும் வெளிநாட்டு மதுபானக் கடைகளும் அங்கு இருக்கின்றன. முந்திரிப் பழச்சாற்றிலிருந்து தயாரிக்கப்படும் 'ஃபென்னி' என்ற ஒருவகை மதுபானம் கோவாவுக்கு உரியதாம். தெருவுக்குத் தெரு, ஊருக்கு ஊர் அங்கு மதுபானக் கடைகள் இருப்பதைக் கண்டோம். குடிக்கும் பழக்கமுடையவர்கள்

அங்கு அதிகமாகத்தான் இருக்கவேண்டும். ஆனால் நடைபாதையிலோ தெருவிலோ யாரும் தள்ளாடிக்கொண்டு போவதை, நான் ஒரு நாள் கூடக் காணவில்லை. குடித்து விட்டுச் சண்டை போட்டுக் கொள்வதோ கலவரம் செய்வதோ, பிற குற்றங்கள் செய்வதோ அங்கே நிச்சயம் கிடையாது. குற்றங்கள் மிகவும் குறைந்த மாநிலம் கோவா. வீட்டில் குடித்துவிட்டு நிம்மதியாக இரவில் தூங்கிவிடுவார்கள் என்று நினைக்கிறேன்.

தெருவில் பாப் செய்த தலைமுடியோடும் கௌனோடும் செல்லும் 'ஹை ஹீல் ஷூஸ்' பெண்களையும், மராத்திப் பெண்களையும் சேலை உடுத்திய பெண்களையும் காணலாம். இரண்டு கலாசாரங்களும் இன்னும் அங்கே தென்படுகின்றன. தமிழ்நாட்டுப் பெண்களுக்கென்றால் ஒரு முழம் அல்லது இரண்டு முழம் பூ தலைக்குப் போதும். அங்கே ஒவ்வொரு பெண்ணுக்கும் குறைந்தது ஐந்து அல்லது ஆறு முழம் பூவாவது தேவைப்படும்! ஏன்னால் கொண்டையிட்டு, கொண்டையைச் சுற்றிலும் வட்டமாகப் பூவைத்துக் கொள்கிறார்கள். மணமுள்ள பூவாகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை. அழகுள்ள பூச்சரமாக இருந்தால் போதும்.

நாங்கள் கோவாவுக்குச் சென்ற முதல் நாள் கிறிஸ்தவர்களின் 'கார்னிவல்' திருவிழா முடிந்திருந்தது. பல்வேறு வேஷங்கள் போட்டுக்கொண்டு, பல்வேறு முகமூடிகளை அணிந்துகொண்டு, இசை வாத்தியங்களை முழக்கியபடியே கூட்டம் கூட்டமாகத் தெருக்களில் நடனமாடி வருவார்களாம். வண்டிகளில் வேஷமணிந்து கொண்டு வருவதும் உண்டு. ஆடலும் பாடலுமாய், கூத்தும் கும்மாளமுமாய் ஊரையே திரட்டி விடுவார்களாம்.

இதுபோலவே இந்துக்களின் ஷிக்மோ போன்ற திருவிழாக்களிலும் மாறு வேடங்களும், பொய்க்கால் குதிரை ஆட்டங்களும், பாடல்களும், பெண்களின் கூட்டு நடனங்களும் உண்டு. ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஆடும் கிராமிய நடனங்கள் சிலவற்றை நாங்கள் அரங்கில் கண்டுகளித்தோம்.

திருவிழாக்களை நாங்கள் நேரில் காண முடியாத குறையைத் தீர்த்து வைத்தார், கோவாவின் முதல் அமைச்சர் திரு ராணே. அவர் மாளிகையில் ஒரு நாள் இரவில் விருந்து வைத்தபோது, வண்ணத்தில் எடுத்த விழாப் படங்களை எங்களுக்குப் போட்டுக் காண்பித்தார். 'கார்னிவ'லையும் கோவா மக்களின் பிற விழாக்களையும் நேரில் கண்டிருந்தால்கூட அவ்வளவு சிறப்பாக எங்களால் ரசித்திருக்க முடியாது.

அவர்களுடைய விருந்தோம்பலுக்கு ஓர் உதாரணம். நானும் வேறு சில மாநிலங்களில் முதலமைச்சர்கள் ஏற்பாடு செய்த விருந்துகளுக்குச் சென்றிருக்கிறேன். முதலமைச்சரின் மாளிகையில் நடந்தாலும் சரி, ஓட்டலில் நடந்தாலும் சரி, அது வெறும் அரசாங்க விருந்தாகத்தான் இருக்கும். இதுவும் அதேபோல் முதலமைச்சரின் மாளிகையில் நடந்த அரசாங்க விருந்து



கொண்டையைச் சுற்றிலும் பூ

தான். ஆனாலும் அமைச்சர் ராணே சுற்றிச் சுற்றி வந்து ஒவ்வொருவரையும் கவனித்தார். அவர் மனைவியாரும் குழந்தைகளும் ஓடி ஓடிப் பறிமாறினார்கள். இவ்வளவுக்கும் திரு ராணே அந்தப் பகுதியில் வாழ்ந்த ஓர் அரச பரம்பரையில் வந்தவர்.

கோவா என்றவுடன் புனித ஃபிரான்ஸிஸ் சேவியார் என்ற கிறிஸ்துவத் துறவியாரின் அடக்கம் செய்யப் பெற்ற பொன்னுடலின் நினைவு பலருக்கும் வராமல் இருக்காது. இது போர்த்துக்கீசியரின் முன்னால் தலைநகரமான பழைய கோவா என்ற நகரத்தில் இருக்கிறது. அங்கே அவர்களது ஆட்சியின் தொடக்கக் காலத்



கார்னிவல் மன்னன்

தில் பல அபூர்வ வேலைப்பாடுகள் நிறைந்த சர்ச்சுகள் கட்டப்பட்டன. அவற்றில் மிகச் சிறந்ததாகப் கருதப்படும் 'பாஸிலிகா' என்ற மாதாகோயிலில் ஒரு பேழையில்தான் புனித பிரான்ஸிஸ் சேவியரின் உடல் இருக்கிறது. அந்தப் பேழையை மட்டும் நாங்கள் அருகில் சென்று பார்த்தோம். ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இறந்துவிட்ட துறவியாரின் உடல் இப்போது பேழைக்குள் இருக்கும் நிலையைப் புகைப்படம் எடுத்து வெளியில் வைத்திருக்கிறார்கள். பதது ஆண்டுகளுக்கு ஒரு முறை பேழை வெளியே எடுக்கப் பெற்றுப் பக்தர்களின் தரிசனத்துக்காகத் திறந்து வைக்கப்படும். இறந்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு மேலாகியும் எந்தச் செயற்கை ஏற்பாடும் செய்யாமல் புனித சேவியரின் முகத்தின் தோல் மண்டை ஓட்டோடு ஒட்டிக் கொண்டிருப்பது விந்தையிலும் விந்தைதான்.

பழைய கோவா நகரத்தின் பல பகுதிகள் இன்று சிதிலமடைந்து கிடக்கின்றன. அந்த நகரத்தில் முன்பு பிளேக் நோய் பரவிய காரணத்தால் அதை அப்படியே விட்டுவிட்டு, புதிதாக மாந்தவி நதிக் கரையில் பஞ்ஜிமைப் புதிய தலைநகராக உருவாக்கியிருக்கிறார்கள் போர்த்துக்கீசியர்கள்.

பஞ்ஜிமிலிருந்து நாற்பது கிலோ மீட்டர் தொலைவில், பசுமை உமிழும் மலைகளுக்கு இடையில் முந்திரிக் காடுகள் சூழ்ந்த இடத்தில் கட்டப்பட்டிருக்கிறது, மங்கேஷ்கர் கோயில். நானூறு ஆண்டுகளுக்கு முன்பு இது தோற்றுவிக்கப்பட்டதாம். மங்கேஷ்கர். என்று அவர்கள் சிவபெருமானை அழைக்கிறார்கள், நம்முடைய தமிழ் நாட்டுச் சிவன் கோயிலைப் போன்றதல்ல இது. ஏழு அடுக்குகள் கொண்ட கோபுரம் போன்ற விளக்குத் தூண் ஒன்று கோயிலுக்கு முன் தனியே நிற்கிறது.

கோவா சென்று வந்தவர்களிடம் அங்கே நிர்வாணமாகத் திரியும் ஹிப்பிகளைப் பற்றிச் சிலர் ஆர்வத்தோடு கேட்கிறார்கள். ஹிப்பிகள் இப்போது அங்கே அதிகமாக இல்லை. என்னுடைய வடநாட்டு எழுத்தாள நண்பர்கள் சிலர் பஞ்ஜிமிக்குச் சுமார் பத்துக் கிலோ மீட்டர் தொலைவிலுள்ள அஞ்சுனு கடற்கரையில் அவர்களைப் பார்ப்பதற்காகச் சென்று வந்தார்கள். காலை நேர இளம் வெயிலில் ஜோடி ஜோடியாக அவர்கள் மணலில் பிறந்த மேனியோடு படுத்துக்கொண்டு சூரியக் குளியல் (Sun Bath) நடத்திக் கொண்டிருந்தார்களாம். வேறு சிலர் உடை ஏதும் உடுத்தாமலே கடலில் குளித்துக் கொண்டிருந்தார்களாம். ஒருவர் தம் துணைவியின் தொடையில் தலைவைத்துப் படுத்துக்கொண்டே நூல் ஒன்றைப் படித்துக்கொண்டிருந்தாராம். தங்களை மற்றவர்கள் வேடிக்கை பார்ப்பதையோ புகைப்படம் எடுப்பதையோ அவர்கள் விரும்புவதில்லை. புகைப்படம் எடுப்பது தடுக்கப்பட்டிருக்கிறது. அருகில் கீற்றுக் குடிசைகள் போட்டுக் கொண்டு அவர்கள் நாடோடிகள் போல் வாழ்கிறார்கள்.

"பிழைப்புக்கு இவர்களுக்கு வழி என்ன?" என்று கோவா நண்பரைக் கேட்டேன்.

"வெளிநாடுகளுக்குப் போய் இரண்டு மாதத்துக்கு உழைத்தால், ஆண்டுக்குத் தேவையான பணம் இவர்களுக்குக் கிடைத்து விடுகிறது. இங்கேயோ வாழ்க்கைச் செலவு மிகவும் குறைச்சல். ஒரு சிலர் போதைப் பொருள் கடத்தல், நவரத்தின மணி கடத்தல் இவற்றில் ஈடுபட்டுத் தேவையான அளவுக்குத் தேடிக் கொள்கிறார்கள். இவர்களுக்குச் சமுதாயத்தின் எந்தக் கட்டுத் திட்டத்திலும் ஒழுக்க நெறியிலும் நம்பிக்கையில்லை. பறவைகளைப் போல், விலங்குகளைப் போல் வாழத் துடிக்கும் இயற்கையின் குழந்தைகள் இவர்கள்" என்றார்.

மேலை நாட்டுப் பொருள் வேட்டைக் கலாசாரத்துக்கு முதலில் பலியானது குடும்பம் என்ற சமுதாய அமைப்புத்தான். ஹிப்பிகளில் பெரும்பாலானவர்கள் சீர்குலைந்த குடும்ப உறவுகளின் வாரிசுகள். அந்தச் சூழ்நிலை இங்கேயும் இப்போது வரத் தொடங்கியிருக்கிறது. இந்திய ஹிப்பிகளைப் போல் தோற்றமளித்த ஓரிருவரையும் நான் பஞ்ஜிம் தெருக்களில் கண்டேன்.

கடைசியாகக் கோவா தமிழ்ச் சங்கத்தைப் பற்றிச் சொல்லாமல் இருக்க முடியாது. நாங்கள் அங்கு வந்திருப்பதைத் தெரிந்து கொண்டு அதன் தலைவர் திரு சண்முகமும் சங்கத்தின் பிற பொறுப்பாளர்களும் மளமளவென்று ஒரு வரவேற்புக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்து விட்டார்கள். அழைப்பு அச்சடிதது அனுப்பக்கூட நாள் இல்லை. கோவாவிலிருந்து வெளிவரும் ஆங்கிலப் பத்திரிகையில் ஒரு விளம்பரம் கொடுத்தார்கள். மறுநாள் காலையில் கூட்டம் தொடங்கியபோது சுமார் நூறு பேர் கூடியிருந்தார்கள். அங்கே திரு கி. வா. ஜ. அவர்கள் வந்தது பற்றிப் பெருமையாகக் குறிப்பிட்டார்கள், கோவா தமிழ்ச் சங்கத்தினர்.

காலையில் கூட்டம் தொடங்குவதற்கு முன் சங்கத்தின் பொருளாளர் திரு சந்திரசேகர் தம் வீட்டில் அருமையானதோர் இட்டிலி விருந்தளித்தார். கூட்டத்தில் நானும் நா. பா.வும், எழில் முதல்வனும் பேசி விட்டு, அன்று பிற்பகல் விமான நிலையத்துக்கு எழுத்தாளர்களுடன் புறப்பட்டோம்.

கோவாவை நாட்டின் பிற பகுதிகளிலிருந்து பிரிக்கும் ஜுவாரி நதிக்கரை வந்தது. நீராவிப் படகுக்காகக் காத்திருந்த அந்த ஒரு நிமிடத்தில், ஆற்றின் குறுக்கே கட்டப்பட்டு வந்த அந்தப் பிரம்மாண்டமான பாலத்தை உற்றுப் பார்த்தேன். 'இந்தப் பாலம் கட்டப்பட்டு விட்டால், பிறகு கோவாவின் இயற்கையழகும், அளவான மக்கள் தொகையும், சுத்தமும், சுகாதாரமும், வாழ்க்கை முறையின் தனித்தன்மையும் எந்த அளவுக்கு எவ்வளவு காலத்துக்குக் காக்கப்படும்?' என்ற கேள்வி என்னுள் எழுந்தது.

*



# சேவை

அசோகமித்திரன்

விரவரப் பொருட்காட்சிச் சாலைகள் எல்லாம் மோசமாக மாறிக்கொண்டிருக்கிறதாகச் சங்கரனுக்குத் தோன்றிற்று. ஏகப்பட்ட சுவரொட்டிகள். ஆகாயத்தில் ராட்சத விளம்பர பலூன். விசேஷ பஸ்கள். உள்ளே நுழையச் சீட்டாக ஒரு ரூபாய் கட்டணம். ஆனால் சுற்றிப் பார்க்க முழுதாக அரை மணி நேரங்கூடத் தேவைப்படுவதில்லை. திரும்பத் திரும்ப வளைக்கடைகளும், பிளாஸ்டிக் சாமான் விற்கும் கடைகளும், மின்சார வாரியமும், காவல் துறையும் பொருட்காட்சிக்கு ஓரளவு மதிப்பளித்தன. அந்தத் துறைகளும் பொருட்காட்சியில் பங்கு பெறுதிருந்தால் சைனு பஜாருக்கும் பொருட்காட்சிக்கும் பெரிய வித்தியாசம் இருந்துவிடாது.

மக்கள் திரளுடன் உள்ளே சுற்றி வந்த சங்கரன், கூட்டத்திலிருந்து தனித்து ஒரு குழந்தை அழுதுகொண்டு நிற்பதைச் சங்கரன் பார்த்தான்.

அந்தக் குழந்தையிடம் சென்று, "ஏன் பாப்பா, அழுதுகொண்டிருக்கே?" என்று கேட்டான். அந்தக் கேள்விக்கும் பதிலாகக் குழந்தை அழுதது.

"உன் அப்பா, அம்மா எங்கே?"

அந்தக் குழந்தை அழுகையை நிறுத்தவில்லை. சங்கரன் அங்கும் இங்கும் பார்த்தான். யாரும் அந்தக் குழந்தைக்கு உரியவர்களாகத் தெரியவில்லை. குழந்தையின் கையைப் பிடித்துக்கொண்டான். குழந்தை இன்னும் பெரிதாக அழ ஆரம்பித்தது.

சங்கரன் அந்தக் குழந்தையை விசாரணைக் கூடத்துக்கு அழைத்துச் சென்றான். ஆனால் அது பெரிதாக அழுதுகொண்டிருந்தது. ஒரு பெரியவர் சங்கரனைப் பார்த்து, "ஏனப்பா, குழந்தையைப் போட்டு அடிக்கிறே?" என்று கேட்டார்.

"இது என் குழந்தை இல்லை.." என்று சங்கரன் சொன்னான்.

"யார்தோ குழந்தைன்னு இப்படியா அழ அழ அடிக்கிறது?"

"யாருய்யா அடிச்சா? இதுவா அழறது."

"அப்ப, குழந்தை கிட்டே உனக்கென்ன வேலை?"

"விவரம் தெரியாமப் பேசாதீங்க! இந்தக் குழந்தை தனியா அழுதுண்டிருந்தது. நான் கொண்டு போய்விடறேன்."

"இந்தக் குழந்தையை முதல்லியே தெரியுமா உனக்கு?"

"யார்ரா இவன்? இது தவறிப் போன குழந்தை. கொண்டு போய்ப் போலீஸ்லியோ எக்ஸிபிஷன் ஆபீஸ்லியோ விட்டுடலாம்னு அழைச்சிண்டு போறேன். நீயும் வேணு என்கூட வா."

"கொஞ்சம் மரியாதையோடயே பேசறது."

சங்கரன் அவரைப் பார்த்து முறைத்தான்.

அந்தப் பெரியவர் குழந்தையின் இன்னொரு கையைப் பிடிக்க எத்தனித்தார். குழந்தை பயங்கரமாக வீரிட்டு அலறிச் சங்கரனின் கால்களைக் கட்டிக் கொண்டது. அவர்களைச் சுற்றி ஒரு சிறு கூட்டம் கூடிவிட்டது. சங்கரன் கூட்டத்தை விலக்கிக் கொண்டு பொருட்காட்சிச் சாலை அலுவலகத்தைத் தேடிச் சென்றான்.

விசாரணைக்கூடம் பொருட்காட்சி நுழைவாயிலுக்கருகே இருந்தது. அங்கு ஒரு ரிகார்டு பிளேயர் தன்னிச்சையாகச் சுழன்றுகொண்டு வானொலி முதலிய நிறுவனங்கள் தடை செய்த பாடல்களையும் உரக்கப் பகிரங்கப் படுத்திக்கொண்டிருந்தது. அதை முடுக்கிவிட்ட ஆயாசம் தீர அங்கே இருக்க வேண்டியவர்கள் எங்கோ சென்றிருந்தார்கள். அந்த நபர்களுக்காகச் சங்கரன் தவிர இன்னும் சிலரும் காத்திருக்க வேண்டியிருந்தது.

விசாரணைக் கூடத்தின் கூட்டம் கணிசமான நேரம் காத்திருந்தாகிவிட்டது என்று தோன்றியபின் வருவது போல இருவர், ஒரு தனி வழியாக அந்தக் கூடத்தினுள் வந்தார்கள். ஓர் ஆண், ஒரு பெண், ஆண் சோர்வோடு ஒரு நாற்காலியில் உட்கார அந்தப் பெண்மணி கேட்டாள்: "இன்னொரு குழந்தையா?"

சங்கரன் முந்திக்கொண்டு, "ஆமாம்" என்றான்.

பெண்மணி அலட்சியமாகப் பேனாவைக் கையில் எடுத்துக்கொண்டு, "என்ன பெயர்?" என்று கேட்டாள்.

அரை விநாடித் தயக்கத்துக்குப் பிறகு சங்கரன், "சங்கரன்" என்றான்.

அந்தப் பெண் ஒரு காகிதத்தில் சங்கரன் பெயரை எழுதியவாறே, "வயது?" என்று கேட்டாள்.

"முப்பத்தொன்று.." என்று சங்கரன் பதில் சொன்னான்.

இயந்திர ரீதியாக அதை எழுதியவள் சட்டென்று தலைநிமிர்த்தி, "உங்க வயசு

இல்லை. குழந்தையின் வயசு என்ன?'' என்று கேட்டாள்.

''எனக்குத் தெரியாது. ஆனா நீங்க பார்த்துச் சொல்லுங்க. நாலு இருக்குமா, அஞ்சு இருக்குமா?''

''இதுவா? இது உங்க குழந்தைன்னு நினைச்சேன்?''

''இதுதான் தொலைஞ்சுபோன குழந்தை. அதாவது நான் கண்டெடுத்த குழந்தை.''

அந்தப் பெண் தன் சகாவைப் பார்த்தாள். அவன் தோள்களை உயர்த்தினான்;

அவள் 'மூன்று' என்று கூறியவாறு குறித்துக் கொண்டாள். பிறகு, ''உன் பேர் என்ன பாப்பா?'' என்று கேட்டாள்.

குழந்தை சங்கரனிடம இன்னும் நெருங்கி ஒட்டிக் கொண்டது.

''நீங்கதான் கொஞ்சம் கேட்டுச் சொல்லுங்க, சார்.''

சங்கரன், ''உன் பேர் என்ன பாப்பா?'' என்று கேட்டான்.

குழந்தை அந்தச் சுற்றுப் புறத்தைச் சந்தேகத்துடன் பார்த்தது.

''உம், சொல்லு, எங்கிட்டே மட்டும் சொல்லு. நல்ல பாப்பா வோ லியோ?''

குழந்தை சங்கரனை இரக்கத்தோடு பார்த்தது.

''உம், சொல்லு. எனக்கு மட்டும் சொல்லு.''

''பாப்பா.''

''உன் பேர் என்ன பாப்பா?''

''பாப்பா.''

''உன் அப்பா பேரு தெரியுமா?

''அப்பா.''

''அம்மா பேரு?''

''அம்மா,''



''அம்மா பேருகூடத் தெரியாதா? உங்கப்பா உங்கம்மாவை என்ன சொல்லிக் கூப்பிடுவார்?''

'அம்மா.''

இப்போது விசாரணைக்கூடத்து ஆளும் கேட்டான்:

''உங்க அப்பா என்ன பண்ணுவார்?''

குழந்தை பதில் பேசாமல் இருந்தது.

''உன் அப்பாவுக்கு என்ன வேலே?''

குழந்தை குழம்பி அழுவதற்குத் தயாராகிக்கொண்டிருந்தது.

விசாரணைப் பெண் சங்கரனிடம், ''நீங்க தான் கேட்டுச் சொல்லுங்கள் என்றாள்.''

ஏகப்பட்ட ஒலிபெருக்கிகளின் எதிரொலியில் முதலில் சங்கரனுக்கு அந்த அறிவிப்புச் சரியாகப் புரியவில்லை. ஆனால் அறிவிப்பு இரண்டாம் முறை செய்யப்படும் போது காதில் கேட்டு அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''துணையில்லாமல் தனியாக அழுதுகொண்டிருந்த சங்கரன் என்ற மூன்று வயதுக் குழந்தை இங்கு விசாரணை அலுவலகத்தில் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. உரியவர்கள் விசாரணை அலுவலகம் வந்து குழந்தையை அழைத்துக்கொள்ளலாம்.''

சங்கரன், ''பாவி! குழந்தை பெண் குழந்தைய்யா!'' என்று கத்தினான்.

அங்கே சுற்றியிருப்பவர்கள் சிரித்தார்கள். அறிவிப்புச் செய்பவன், ''என்ன சொன்னே?'' என்று கேட்டான்.

''குழந்தைக்குப் பேர் தெரியாது. ஆனால் பெண் குழந்தை. அதை இங்கே கொண்டு விட்டிருக்கிற என் பேருதான் சங்கரன்.''

''இதை முன்னமேயே சொல்லறது தானே?''

''நீ இப்படித் தப்புத் தப்பாச் சொல்லப் போறேன்னு தெரியுமா?''

கடைசியாகத் திருத்தம் இப்படி அறிவிக்கப்பட்டது. ''தனியே நின்று அழுது கொண்டிருந்த மூன்று வயதுக் குழந்தையைச் சங்கரன் என்பவர் இங்கு விசாரணை அலுவலகத்தில் கொண்டுவந்து விட்டிருக்கிறார். உரியவர்கள் வந்து அழைத்துப் போகக் கோருகிறோம்.''

''இனிமே நான் போகலாமில்லே?'' என்று சங்கரன் கேட்டான்.

''கொஞ்சம் இருங்க, குழந்தைக்கு உரியவங்க வந்தப்புறம் போகலாம்.''



குழந்தையின் பெற்றோர்கள் இன்னும் ஒரு குழந்தையுடனும், கைநிறையப் பொருள்களுடனும் சுமந்தபடி வந்தார்கள். அப்போது அவர்கள் தீவிரமாகச் சர்ச்சை செய்துகொண்டிருந்த விஷயம் மலிவு விலைத் தலையணையை ஒன்றுக்கு இரண்டாக ஏன் வாங்கவில்லை என்பது. பெற்றோர்களைக் கண்டதும் குழந்தை சங்கரனின் கால்களை இன்னும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. குழந்தையின் தாய் கேட்டாள்: "எங்கேடி நீ பாட்டுக்கு ஊர் சுத்தக் கிளம்பிட்டே?"

குழந்தை நடுங்கியது.

"குழந்தையை மணிக்கணக்கிலே அழவிட்டுட்டு நீங்கதான் எங்கேயோ போயிட்டீங்க!" என்று சங்கரன் சொன்னான்.

அவள் அதை லட்சியம் செய்யவில்லை.

குழந்தையின் தகப்பனாவது சிறிதளவு நன்றியுணர்ச்சி உள்ளவனாக இருந்தான். ஆனால் குழந்தையின் தாயார் குழந்தை தொலைந்து திரும்பக் கிடைப்பது சாதாரணமான நிகழ்ச்சி என்று எண்ணுபவள் போல இருந்தாள். அவள் குழந்தையைத் தன் பக்கம் இழுத்தபோதுகூட அது சங்கரனின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தது.

ஏறக்குறைய ஒரு மணி நேரம் ஒரு குழந்தை அவன் கையைப் பிடித்த வண்ணம் இருந்திருக்கிறது. அதற்கு அவன் ஒரு பொறி கடலை, ஒரு விள்ளல் இனிப்புக்கூட வாங்கித் தரவில்லை. அழும் குழந்தைக்குத் திண்பண்டம் வாங்கித் தருவது இயல்பாக அவனுக்குத் தோன்றவில்லை.

அது அழுது தீர்த்த வண்ணம் இருந்ததால் இயல்பாகத் தோன்றுபவை எல்லாம் தடைப்பட்டுப் போயிருக்கலாம். குழந்தைதான் என்றாலும்கூட அது அழுதால் சகிக்க முடிவதில்லை. ஆனால் மொழியும் சொற்களும் பயன்படாதபோது அழுகைதான் மொழியாக இருக்கிறது. அதுதான் யாருமே சந்தேகமறப் புரிந்துகொள்ளக்கூடிய மொழியாக இருக்கிறது.

அந்தக் குழந்தைக்கும் தன்னைப் போலத் கண்ணீர் வற்றிப் போய் அழ முடியாமல் போக இன்னும் ஐந்தாறு ஆண்டுகளாவது ஆகும். பெண் குழந்தை. ஆதலால் பதினைந்து, இருபது வயதுவரைகூட அழலாம். அதற்கு மேலும்கூட அழலாம். ஆனால் அப்படி அழும் சந்தர்ப்பங்கள். வளர்ந்து வயது முற்றியவர்களுக்கே பொருத்தமான சந்தர்ப்பங்களாக இருக்கும். அந்த அழுகையைப் பிறர் ஆறுதல் கூறித் தணிக்க வேண்டியதில்லை. அது முடியாததுங்கூட. அவள் குழந்தையாக இருக்கும் வரையில்தான் அழுகைக்கு ஆறுதல் கூறுவது சாத்தியமும் அவசியமும் ஆகும்.

அந்தக் குழந்தை குழந்தையாக இருக்கும் வரையிலாவது அதன் தாய் ஆறுதலாக இருந்தால் நல்லது. ஏனோ அப்படி ஒரு நம்பிக்கை தனக்கு வலுவாகத் தோன்றாதது குறித்துச் சங்கரனுக்கு வருத்தமாக இருந்தது.

*


தேர்தல் விநோதங்கள்!
← ஓட்டுச் சாவடி
பெண்கள்
குழந்தையுடன் வந்தால் சலுகை; இரவல் குழந்தைக்கும் யோகம்!
ரெஸாக்
ஓர் அபேட்சகரின் குழந்தை, நாயுடன் வந்தது. போட்டி அபேட்சகரின் குழந்தை, நாயின்மேல் கல்லெறிய, பெரிய ரகளை!
வயது 121: வந்த கோலாகலம்!
நெற்றியில் முத்திரை!
POLICE STATION
தேர்தலில் செய்தி சொன்ன புருக்கள்!
VOTE
BOAT
ஜம்முவில், மதிள்மேல் நிற்பார்; வேலிமேல் நிற்பார். அவர் பிரசாரம்: 'என் படகு கவிழ்ந்தால் எல்லாரும் மூழ்குவார்கள்!'
'கொண்டாய்யா, பணத்தை!'




(ஏப்ரல், 1967-இல் வந்தது)

# கனவில் கண்ட காதலன்

சோணிதபுர மன்னன் பாணன் சிறந்த சிவ பக்தன். அவனுடைய தவத்தில் மகிழ்ந்த சிவபெருமான் பல வரங்களை அருளினர். யாராலும் தன்னை வெல்லமுடியாத வரத்தையும் பெற்றான். ஆயிரம் கரங்கள் கொண்ட மாவீரன் அவன்.

பாணனுக்கு அழகிய மகள் ஒருத்தி இருந்தாள். அவள் பெயர் உஷா. நடனம், சங்கீதம் முதலிய நுண்கலைகளில் தேர்ந்த அப்ஸரஸ் போன்ற எழில் மேனியாள். இளமையுடன் எழிலும் அவளிடம் போட்டியிட்டு விளங்கின.

ஒரு நாள், தன் தோழிகளுடன் மூழ்கி விளையாட நதிக் கரைக்குச் சென்றாள். இயற்கையெழில் மிகுந்த சூழலைக் கண்டதும் அந்தக் குமரிப் பெண்களுக்கு உல்லாசம் மிஞ்சியது. நதிக் கரையில் விளையாடிக் களித்தனர்.

அந்தச் சமயத்தில், ரிஷபாரூடராக, ககன மார்க்கத்தில் சென்ற சிவனும் பார்வதியும் அந்தப் பெண்களின் களியாட்டத்தைக் கண்டனர். உஷா தன் தோழிகளுடன் எம்பெருமானையும் எம்பெருமாட்டியையும் வணங்கினாள். குமரிப்பெண்ணுக்குத் தக்க கணவன் கிடைக்கவேண்டும் என்றுதானே வாழ்த்தவேண்டும்! 'உன் கனவில் தோன்றும் ஆணழகனே உன்னை மணப்பான்' என்று மலைமகள் உஷாவுக்கு ஆசி கூறுகிறாள்.

காலம் ஓடுகிறது. வைகாசி மாதத் துவாதசி இரவு. உப்பரிகையில் உறங்கிய உஷாவின் கனவில் ஆணழகன் ஒருவன் வந்து களிப்பித்துச் செல்கிறான். 'கனவில் வந்தவன் யார்?' என்று அறியாமல் வருந்துகிறாள் உஷா. தோழி சித்திரலேகை, பல மன்னர் உருவங்களை வரைந்து காட்டினாள். கண்ணபிரானுடைய பேரன் அநிருத்தனை வரைந்ததும், உஷாவின் முகம் மலர்கிறது. கனவில் வந்து என் கருத்தைக் கவர்ந்த வீரர் அவரே' என்று கூறுகிறாள் உஷா.

மாய வித்தையில் தேர்ந்த சித்திரலேகை, துவாரகை போய், அரண்மனையில் தூங்கின அநிருத்தனைக் கட்டிலுடன் தூக்கி வந்து உஷாவின் அந்தப்புரத்தில் கொண்டு விடுகிறாள். கண் விழித்த அநிருத்தன் உஷாவின் அந்தப்புரத்தில் இருப்பதை அறிகிறான். 'தான் கனவில் கண்டு மகிழ்ந்த அழகி இவள்தான்' என்பதை அநிருத்தன் உணர்கிறான். ஒருவரை ஒருவர் கனவில் கண்டு மகிழ்ந்ததை எண்ணிச் சுவைக்கின்றனர். 'மலைமகள், கூறிய கணவர் இவரே' என்று எண்ணி மகிழ்ந்து பூரிப்படைகிறாள் உஷா.

அந்தப்புரத்தில் உஷாவும் அநிருத்தனும் ஆடிப் பாடிக் களிக்கின்றனர். நாட்டியத்திலும் வீணை வாசிப்பதிலும் தேர்ந்தவள் உஷா. அநிருத்தன் காதல் களியாட்டங்களில் மூழ்கி, அந்தப்புரத்திலேயே காலம் கழிக்கிறான். ஒற்றன் ஒருவன் கூற, உஷாவின் தந்தைக்கு விஷயம் தெரிகிறது. 'யார் அவன்?' என்று கர்ஜித்துக்கொண்டு கோபத்துடன் வருகிறான் பாணாசுரன்.

அநிருத்தனுடன் பாணன் போர் செய்து நாக பாசத்தால் கட்டிவிடுகிறான். பேரனைக் காணாத கண்ணன், நாரதர் மூலம் அறிந்து பாணனுடன் சண்டைக்கு வருகிறான். பாணனுக்காகச் சிவபெருமான் போரிடுகிறார். பெரும் போர் நடக்கிறது. பிரம்மா, முந்திய வரத்தை நினைவுறுத்த, சிவபிரான் ஒதுங்கி விடுகிறார். கிருஷ்ணன், பாணனின் இரு கரங்களைத் தவிர மற்றவற்றை வீழ்த்திவிடுகிறான்.

பரமசிவன் வேண்டியபடி பாணாசுரனை உயிருடன் விட்டுவிடுகிறான் கண்ணன். பேரனைக் காணும் ஆவலுடன் கண்ணன் அரண்மனைக்குச் செல்கிறான். கண்ணனைக் கண்டதும் நாகபாசம் விடுபடுகிறது. பேரனைக் கட்டித் தழுவிக் கொள்கிறான் கண்ணன். பரமசிவன் முன்னிலையில் அநிருத்தனுக்கும் உஷாவுக்கும் திருமணம் சிறப்பாக நடக்கிறது.

[1975-ஆம் ஆண்டு தீபாவளி மலரில் வெளிவந்த வண்ணப் பகுதி இது; ஓவியர் ஜி. கே. மூர்த்தி]




அவளுடைய நூறாவது பட விழாவைக் கொண்டாட ஊரெல்லாம் ஆளுயரச் சுவரொட்டிகள் ஒட்டப்பட்டிருந்தன. பத்திரிகைகளில் அவளுடைய படங்கள் திரை உலக வரலாறு, துணுக்குகள், பெட்டிச் செய்திகள் எல்லாம் பெரிதாக அமர்க்களப் பட்டன.

நகரின் எல்லாத் திரையரங்குகளிலும் அவள் நடித்த படங்களில் ஏதாவது ஒன்று சிறப்பாக ஓடிக்கொண்டிருந்தது. எங்கும் அவள் மயமாயிருந்தது.

அந்த ஞாயிறன்று டெலிவிஷனில் சிறப்பு நிகழ்ச்சியாக அவள் நடித்த மிகச் சிறந்த படங்களின் தொகுப்புச் சித்திரம் ஒன்றை ஒளிபரப்ப ஏற்பாடு நடந்தது.

தினசரிகளும், வார இதழ்களும், பளிரென்று கவர்ச்சியாய்க் காட்சி அளித்த சினிமா இதழ்களும் டீப்பாயில் குவிந்து கிடந்தன. எல்லாவற்றிலும் அவள் படங்கள், புகழ்மாலைகள், சிறப்புக் கட்டுரைகள். சாதனையின் பெருமிதத்தில் மகிழ்ச்சி பொங்கித் ததும்பியது. அவள் களிப்பின் நிறைவில் இருந்தாள்.

''நடிகையர் ரத்தினம் குமாரி கலாதேவிக்குத் திருமணம் ஆகவில்லை என்றாலும் அவர் கலையையே மணந்து வாழ்க்கைப் பட்டிருப்பது, அவர் நடித்திருக்கும் இந்த நூறு படங்களிலிருந்து நிதரிசனமாகத் தெரிகிறது!'' என்றும் அவள் மணத்தையே மறந்து வாழ்கிறாள் என்றும் விளக்கி எழுதியிருந்தது ஒரு பத்திரிகை, அவளே அதைப் படித்துச் சிரித்துக்கொண்டாள்.

''அம்மா. ஜூஸ் தயார்.'' வேலைக்காரி செல்லம்மாள் அழகிய பூ வேலைப்பாடு அமைந்த கிளாஸ் நிறைய ஆப்பிள் ரசத்துடன் தட்டைக் கொண்டுவந்து வைத்தாள்

கதாநாயகி நடிகை கலாதேவி ரசத்தைப் பருகி முடிக்கவும் வேலைக்காரி செல்லி விடைபெற்றுக் கொண்டு போக வந்து நிற்கவும் சரியாயிருந்தது.

''வரேன்ம்மா! தயிர் 'பிரிஜ்'லே இருக்கு. மத்த வேலையெல்லாம் முடிஞ்சிது.''

''ஏண்டி செல்லம்மா. என்னமோ இப்பத்தான் கல்யாணமான சின்னஞ் சிறிசு மாதிரி புருஷனுக்குப் பயந்து நடுங்கி வீட்டுக்கு ஓடறியே! ஒரு நாள்தான் கொஞ்சம் தாமசமாப் போவேன்; குடியா முழுகிடும்?''

''ஐயோ, என் புருஷன் பொல்லாது அடிச்சுக் கொன்னுடும். வூட்லே என்னைக் காணாட்டித் திரும்பவும் போயிச் சாராயக் கடையிலே பூந்துடும்.''

செல்லம்மாளின் குரலிலும் முகத்திலும் தெரியும் நடுக்கத்தையும் பயத்தையும் பார்த்துக் கலாதேவிக்கு வியப்பாகவும் வேடிக்கையாகவும் இருந்தது. சிரிப்புக்கூட வந்தது.

நிலையான வருமானம் இல்லாத, மனைவியின் சம்பாத்தியத்தில் காசு திருடிச் சாராயக் கடைக்குப் போகக் கூடிய ஒரு புருஷனுக்கு அத்தனை தூரம் அவள் நடுங்கிச் சாவதைப் பார்த்துக் கலாதேவி சிந்திக்கத் தொடங்கினாள்: பரிதாபங்கூடப் பட்டாள்.

'கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்' என்ற பழமொழி பெண்ணடிமைத்தனத்தை வளர்க்க விரும்பியவர்கள் இந்நாட்டில் உண்டாக்கியது என்று அவளுக்குத் தோன்றியது. சராசரி இந்தியப் பெண்களும் இந்தப் பழமொழிக்கு ஏற்பத்தான் நடந்துகொள்கிறார்கள் என்று எண்ணினாள் கலாதேவி.

புருஷன் குடும்பம், குழந்தைகுட்டிகள் எதுவுமே இல்லாமல் புகழும் பணமுமாக



உயர்ந்து வாழும் தன்னையும் செல்லம்மாளையும் மனத்துக்குள் ஒப்பிடத் தொடங்கினாள் அவள்.

செல்லம்மாளை விடத் தான் பல மடங்கு புகழோடும் பணத்தோடும் செல்வாக்கோடும் வாழ முடிந்திருக்கிறது. அதற்குப் புருஷனோ குடும்ப வாழ்க்கையோ தனக்கு இல்லாதது எந்த விதத்திலும் தடையாக இருக்க நேர்ந்தது இல்லை. ஒருவேளை தான் இந்தக் கலைத் துறைக்கு வராமல் திருமணம் செய்து கொண்டு குடும்ப வாழ்க்கை வாழ்ந்து கணவனுக்கு அடங்கிய மனைவியாக இருந்திருந்தால் இப்படிப் புகழ் பெற்றிருக்க முடியாது; நட்சத்திரமாக ஜொலித்திருக்க முடியாது என்பதை எல்லாம் கூட அவள் நினைத்தாள்.

தன்னையும் தன் வேலைக்காரி செல்லம்மாளையும் பெண் என்ற பொது அடிப்படையில் மனத்தராசில் நிறுத்துப் பார்த்த போது கலாதேவிக்குத் தன் பங்குக்கு எடை கூடியிருப்பது தெரிந்தது.

''இன்று வானத்து நட்சத்திரங்களை விட என் ஆற்றல் அதிகம். அந்த நட்சத்திரங்கள் இரவில் மட்டுமே ஜொலிக்க முடியும், நானோ இரவில் மட்டும் அல்லாமல் பகலிலும் ஜொலிக்க முடிந்தவள். அந்த அப்பாவிப் பத்திரிகைக்காரன் திறமையாகக்

கற்பனைச் செய்து எழுதுவதாக எண்ணிக் கொண்டு நான் கலையையே மணந்து கொண்டு வாழ்வதாக எழுதியிருந்தான். அப்படியானால் கலை எனக்குக் கணவனா' இல்லை; கலை என்னை ஆளவில்லை; நான் கலையை ஆளுகிறேன். அப்பாவி வேலைக்காரி, செல்லம்மாளைப் போலவோ அவளை விடச் சமூகத்தின் மேல் தட்டைச் சேர்ந்த வேறு ஒரு குடும்பத் தலைவியைப் போலவோ நான் ஒரு சாதாரணப் பெண்மணி அல்ல. பிற பெண்கள் பின்பற்ற ஆசைப்படும் லட்சிய அழகி நான்; பிற ஆண்களைக் கனவு காணவைக்கும் கவர்ச்சிக்காரி.

'பாவம், செல்லம்மாள்! கேவலம் குடும்பம் என்கிற மாட்டுத் தொழுவத்தில் தாலி என்கிற கயிற்றால் கட்டப்பட்டவள் அவள். எனக்கு இருக்கும் இந்த அளவற்ற சுதந்தரம் அவளுக்குக் கிடையாது.

இப்படி நினைத்து விட்டு நோக்கியபோது வேலைக்காரி செல்லம்மாள் சாராயக் குடிகாரனாகிய கணவனிடம் அடிபடும் ஒரு புழு போலத் தென்பட்டாள். குடித்து விட்டு வீடு திரும்பும் கணவனிடம் கண்மண் தெரியாமல் அடிபட்டு அடிபட்டுச் செல்லம்மாளின் உடம்பெல்லாம் காயமாயிருப்பது போல் அப்போது அவளுக்கு நினைக்கவும் கற்பனை செய்யவும் தோன்றியது.

கலாதேவிக்குச் செல்லம்மாள் மேல் அநுதாபம் பொங்கியது. அவளுக்காக இரக்கப்பட்டாள். பட்டுப் போல மென்மையும் தந்தம்



போல் வெளேரென்ற நிறக் கவர்ச்சியும் உள்ள தன் மேனியழகையும் அம்மை வடுக்களும் காயங்களும் நிறைந்த செல்லம்மாளின் முற்றிய உடம்பையும் மனக் கண்ணில் ஒப்பிட்டுப் பார்த்தாள் அவள். அந்த ஒப்பீட்டில் செல்லம்மாளைப் பற்றிப் பெருமைப்பட ஏதுவுமே இல்லை.

'நல்லவேளை! யார் செய்த புண்ணியமோ, வாழ்க்கைத் தொழுவத்தில் சிக்காமலே புகழ் ஏணியின் உச்சியில் இருக்கிறேன். இன்று ஏதோ தேர்திருவிழா கொண்டாடுவதுபோல் எனது நூறுவது படவிழாவை மக்கள் கொண்டாடுகிறார்கள்.'

பொழுது விடிந்ததும் செல்லம்மாள் வேலைக்கு வந்தபோது அவள் முகம் முதல் நாள் இரவு முழுவதும் அழுது அழுது வீங்கினாற் போல் இருந்தது. கலாதேவி அவளைக் கேட்டாள்:

''என்னடீது? ராத்திரி உம் புருஷனோட ஏதாவது சண்டையா?''

''சாராயமும் சண்டையும் இல்லாத நாளே கெடையாதும்மா.''

''அப்படியாவது அந்தப் புருஷனுக்காக ஏன்டீ உயிரை விடறே? 'டைவர்ஸ்' பண்ணிக்கிறதுதானே?''

''ஐயே! அதெப்பிடீம்மா முடியும்?''

''ஏன் முடியாது?''

''ஆயிரம் இருந்தலும் அது எம் புருசனுச்சே?''

''அப்படியானா உனக்கு வேற வழியே இல்லே: திண்டாட வேண்டியதுதான்.''

''இன்னிக்கி விழாவுக்கு அதுகூட வரணும்னிச்சு. உங்க யஜமானியம்மாகிட்டச் சொல்லி ஒரு பாஸ் வாங்கியாந்து குடுன்னு கேட்டிச்சும்மா.''

''சாயங்காலமானால் சாராயக் கடைக்குப் போறவன் நூறுவது படவிழாவுக்கு எங்கேடி வரப்போறான்? வந்தாலும் குடிச்சுட்டுக் கலாட்டாப் பண்ணும இருப்பானா?''

''அதெல்லாம் ஒண்ணும் பண்ணாதும்மா! உங்க நடிப்புன்னா அதுக்குப் பிரியம்.''

அடிபட்டு உதைபட்டு மாடாகத் தேய்ந்தாலும் செல்லம்மாளுக்குத் தன் குடிகாரப் புருஷன் மேலுள்ள பிரியத்தின் மர்மத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் திணறினாள், திருமணமாகாத நட்சத்திரம் கலாதேவி. மணவாழ்க்கையால் பெண் அடிமைப்படுகிறாள் என்பதே அந்த வினாடிவரை மணவாழ்க்கையைப் பற்றி அவள் கணிப்பாயிருந்தது. அதற்கு மேல் 'புருஷன்' என்ற வார்த்தையின் அர்த்தம் அவளுக்குப் புரியவில்லை.

அன்று மாலை அவளுடைய நூறுவது படவிழா ஆடம்பரமாகத் தொடங்கியது. பயங்கரமான ரசிகர்கள் கூட்டம். கூட்டத்திலும் ஜனநெருக்கடியிலும் சிலர் நசுக்குண்டு மிதிபட்டு இறந்து போய்விடுவார்களோ என்னுமளவு ஒரே மக்கள் வெள்ளம்.

விழா நாயகி நடிகையர் ரத்தினம் கலாதேவிக்குத் துணையாக வேலைக்காரி செல்லம்மாளும் சென்றிருந்தாள். வேறு பல நடிகைகள் நடிகர்கள் திரளாக வந்திருந்ததால் எல்லாரையும் ஒரு சேரக் காணலாம் என்ற ஆவலில் கூட்டம் அலை மோதியது.

விழா மேடைக்குப் பின்னால் கையில் வீட்டிலேயே போட்டுப் பிளாஸ்கில் எடுத்துச் சென்றிருந்த காபி பிளாஸ்குடன் அடக்க ஒடுக்கமாக நின்றிருந்தாள் செல்லம்மாள். கலாதேவிக்கு அவுட்டோர் ஷூட்டிங் நாட்களில் காபி, சிற்றுண்டி, சாப்பாடு எல்லாமே வீட்டிலிருந்து செல்லம்மாள்தான் எடுத்துச் செல்வாள். அதே போல்தான் இன்று விழாவுக்கும் காபி எடுத்துக் கொண்டு வந்திருந்தாள்.

விழா மேடையில் அழகுராணியாக வீற்றிருந்த கலாதேவி கூட்டத்தைக் கம்பீரமாக நிமிர்ந்து பார்த்தாள்.

தனக்கு எதிரே தெரிந்த பறட்டைத் தலையும் களையிழந்த முகமும் கூடிய பல ஆண்களில் யாராவது ஒருவன்தான் செல்லம்மாளின் கணவனாயிருக்க வேண்டுமென்று ஏளனமாகத் தன மனத்துக்குள் நினைத்துக்கொண்டாள் கலாதேவி.

நிலைகொள்ளாமல் மோதும் அந்தப் பெரிய கூட்டத்தில் மின்சாரத் தடங்கலால் ஒரு நிமிஷம் திடீரென்று இருள் சூழ்ந்தது. இருட்டில் கூட்டம் மேலும் தடுமாறவே, கலாதேவி முதலிய பெண் நட்சத்திரங்கள் அமர்ந்திருந்த மேடை சரிந்து விட ஒரே அமளி. கூச்சல். குழப்பம் உண்டாயிற்று. விளக்குத் திரும்ப வந்தும்கூடச் சந்தடி சாக்கில் நடிகைகள் மேல் ரசிகர்கள் மோத ஆரம்பித்துக் கூக்குரல் எழுந்தது. பரபரப்பிலும் குழப்பத்திலும் நடிகை கலாதேவியே கூட்டத்தில் சிக்கிக் கீழே தடுமாறி விழுந்து விட, அவளைத் தூக்க வேலைக்காரி செல்லம்மாள் ஓடிவந்தாள்.

செல்லம்மாளையும் முந்திக் கொண்டு வேறு இரண்டொரு ரசிகர்கள் கலாதேவியைத் தூக்கிவிட ஓடி வரவே, செல்லம்மாளும் அவர்களும் எதிரெதிராக மோதிக் கொள்ளும்படி நேரிட்டு விட்டது.

செல்லம்மாள் மேல் மோதியவர்கள் ஆண் பிள்ளைகளாயிருப்பதைப் பார்த்தபடி தூரத்தில் நின்றிருந்த அவள் கணவன், ''டாய்! யார்ரா பேமானி! கிச்சுப் புடுவேன் கிச்சு'' என்று கத்தியோடு கூட்டத்தில் அவர்கள் மேல் பாய்ந்தான்.

''கண்ட கஸ்மாலம்லாம் கையைப் புடிச்சு இஸ்துக்கினு போக இது சினிமா எக்ஸ்ட்ரான்னு நெனைச்சியா? என் பொஞ்சாதிடா இது! ஜாக்கிரதை!'' என்று அந்த ஆண்களை எச்சரித்து மிரட்டிவிட்டுச் செல்லம்மாளை மட்டும் ஒதுக்கி அழைத்துச் சென்றான் அவள் கணவன்.

தடுமாறிக் கீழே விழுந்து கிடக்க விழா நாயகியாகிய தன்னைத் திரும்பிக் கூடப் பார்க்காமல், தனக்கு உதவ வந்த ஆண்கள் செல்லம்மாளைத் தீண்டி விட்டார்கள் என்பதற்காகவே அவர்களிடம் கத்தியைக் காட்டி மிரட்டும் அந்த முரட்டு ஆண்மை கலாதேவியை ஒரு கணம் பிரமிக்கச் செய்துவிட்டது.

''யார்ராவன்? விழா நாயகியே இங்கே கீழே விழுந்துட்டாங்க? என்னடான்னு யாரோ ஒரு அம்மவடு விழுந்த பொம்பளையைத் தொட்டுப் புட்டோம்னு கத்தியைக் காட்டி மிரட்டறான்?'' என்று பேசிய இரண்டு சினிமா உலகப் பிரமுகர்கள் பக்கம் திரும்பி, ''இந்தய்யா! அதெல்லாம் வேற இடத்துல வச்சுக்க! நம்ப கையில வாண்டாம். சினிமாக்காரியை இன்னு வேணுப் பண்ணிக்க. இது குடும்பப் பொண்ணு, எம் பொஞ்சாதி. எவனுவது தொட்டே கொடலை உருவிடுவேன்'' என்று மீண்டும் கத்தியைக் காட்டிச் சீறினன் செல்லம்மாளின் புருஷன்; பாதி குடிபோதை வேறு.

அந்தக் கணத்தில் மின்வெட்டுப் போல் கலா தேவியின் மனத்தில் ஒரு பொறி தட்டியது.

சதா சாராயத்தையே கட்டிக்கொண்டு அழும் அந்தக் குடிகாரக் கணவனைச் செல்லம்மாள் விடாமல் கட்டிக் காத்துப் பணிவிடை செய்யும் மர்மமும் இரகசியமும் கலாதேவிக்கு இப்பொது புரிவது போல் இருந்தது.

இந்த அளவு முரட்டுப் பிரியத்தைத் தருகிற ஓர் ஆண்பிள்ளையிடம் ஒரு பெண் எத்தனை தடவை அடிபட்டாலும் அவனுல் தன் உடல் முழுவதும் காயமானுலும் அவனை விட்டுப் பிரிய மாட்டாள் என்று தோன்றியது.

யாரோ வந்து சமாதானப்படுத்தி அவனைத் தனியே அழைத்துக் கொண்டு போனுர்கள். செல்லம்மாளும் கூட வந்தால்தான் போவேன் என்றுன் அந்த முரடன்.

செல்லம்மாள் தயக்கத்தோடு எஜமானி கலாதேவியின் முகத்தைப் பார்த்தாள். எஜமானி பிளாஸ்கை வாங்கிக் கொண்டு, 'நீ போ; பரவாயில்லை' என்பது போல் அவளுக்கு உத்தரவு கொடுத்தாள். அவள் கணவனேடு போனுள்.

குடித்து விட்டு வீடு திரும்பும் முரட்டுக் கணவனிடம் அடிபட்டு அடிபட்டுச் செல்லம்மாளின் உடம்பெல்லாம் காயம் பட்டிருப்பதாகத் தான் முன்பு கற்பனை செய்திருந்த காயங்களை விட ஆழமான, ஆனுல் வெளியே தெரியாத ஊமைக் காயம் ஒன்றைத் தானே தாங்கி நிற்பது போல் அந்தக் கணத்தில் விழா நாயகியான நடிகையர் ரத்தினம் கலாதேவிக்குத் தோன்றியது.

''சினிமாக்காரியை இன்னு வேணுப் பண்ணிக்க; இது குடும்பப் பொண்ணு, எம் பொஞ்சாதி!'' என்ற அந்த முரட்டுக் குடிகாரக் கணவனின் கொச்சை வார்த்தைகள், அவன் உருவி நீட்டிய கத்தியை விடக் கூராயிருந்தன அந்தக் கூர்மை தொலைவிலிருந்தே எங்கோ அவளைக் காயப் படுத்தியிருந்தது. ✳

# Brakes India: a tradition in quality in foundation brakes and ferrous die castings.

Brakes India—pioneers in foundation brakes, hydraulic brakes and braking equipment in India have now brought forth their skill and expertise to bear on a new area of operation: permanent mould ferrous die castings.

The same quality and reliability that are the hallmarks of their brakes, are now setting a new standard of excellence in their permanent Mould Ferrous Die Castings, already in great demand for a wide variety of applications in a host of industries.




**Brakes India Limited**
PADI, MADRAS-600 050



Brakes India Girling—
Stops your vehicle,
saves you.

'AA'BI/2483

# பாட்டி ஊருக்குப் போகிறாள்



—ஆர். சூடாமணி—

"அப்பா பாட்டி, ஊருக்குப் போறாங்களா?''

''ஆமாம். உனக்குத்தான் தெரியுமே! எத்தனை வாட்டி சொல்லணும்?''

''ஏன் போறாங்க?''

''அதெல்லாம் உனக்குப் புரியாது; நீ கொழந்தை. போய் வெளையாடு.''

''மாட்டேன். சொன்னாத்தான்.''

''குமார், இப்போ போறியா, இல்லே உதை வேணுமா?''

''பாட்டி ஏன் ஊருக்குப் போறாங்க?''

''ஏன்னா அவங்களுக்கு வயசாச்சு.''

''வயசானா?''

''வயசானா ஊருக்குப் போய் ஓய்வு எடுத்துக்கணும்.''

''இங்கேயே எடுத்துக்கட்டுமே!''

''இங்கேயேல்லாம் முடியாது.''

''ஏன் முடியாது?''

''சும்மா தொணதொணக்காதே. போய் வெளையாடு.''

''ஏன் முடியாது?''

''ஏன் முடியாதுன்னா? நம்ம வீடு சின்னதில்ல? இங்கே என் சிநேகிதங்க வராங்க; உன் அம்மாவோட சிநேகிதிங்க வராங்க: எத்தனை நெருக்கடியாயிருக்குது? பாட்டி ஓய்வு எடுக்க இங்கே ஏது இடம்?''

''நான் பாட்டிக்கு என் ரூம்ல இடம் தரேன்.''

''நீ இங்கேருந்து உதை வாங்காமப் போகப் போறதில்லே, ராஸ்கல்!''

''அப்பா, பாட்டியை ஊருக்குப் போக வேணும்னு சொல்லிடுப்பா?''

''வாய மூடுடா, குழந்தைகளுக்கு எதுக்குடா பெரியவங்க விஷயமெல்லாம்?''

''பாட்டியைப் போகவேணும்னு....''

''இப்போ இங்கேருந்து போறியா இல்லையா? சரி, சரி. நீ போகமாட்டே. நான் தொலையறேன். இங்கே குமார் ரொம்பத் தொணதொணக்கறான் மீனா.''

''எதுக்கு?''

''அம்மாவைப் பத்தித்தான். ஏன் ஊருக்குப் போறாங்க, பாட்டியைப் போகவேணும்னு சொல்லுப்பான்னு ஒரே பிடிவாதம்; குழந்தை பாரு.''

''குழந்தை மட்டும் அப்படிச் சொல்லுதா? இல்லே குழந்தையின் அப்பாவுக்கும் அப்படிச் சொல்ல தோணுதா?''

''என்னை உனக்குத் தெரியும் மீனா. நீ சொல்றதை மீறி எது ஒண்ணும் நான் செய்திருக்கேனா இன்னிய வரைக்கும்?''

''அப்போ பழி மொத்தமும் என்மேல போடறீங்களா?''

''நான் என்னவோ சொன்னா நீ பாட்டுக்கு வேறெதோ...''

''அப்படித்தாங்க தோணும். என்ன இருந்தாலும் நீங்க தாயும் மகனும் ஒண்ணு. இதில் வேத்து மனுஷி நான்தானே? மருமக வேற. அந்த உறவுக்கே இல்லாத பொல்லாத பேச்செல்லாம் வந்து சேருமே! மாமியாரை வீட்டை விட்டு விரட்டிட்டாள்னு நாலு பேர் என்னைத்தான் சொல்வாங்க...''

''மீனா இதோ பாரு.''

''ஏன்? நீங்க மட்டும் சொல்லமாட்டீங்களா என்ன? நம்ம அம்மாவை வெளியே விரட்டின கிராதகி இவள்தான்னு நீங்களும் நெனைப்பீங்க.''

''என்ன இப்படிச் சொல்றே?''

''உண்மையைச் சொன்னா அப்படித்தான் உடம்பெரியும்; சரி, சரி! கொழந்தை அப்படிச் சொல்றான், அதுக்கென்ன இப்போ?''

''என்னமோ பாவமாயிருந்தது ''

''யாரை நெனச்சு?''

''கொழந்தையை நெனச்சு, அப்புறம் அம்மாவை நெனச்சுந்தான்.''

''அதானே பார்த்தேன்? கிட்டி முட்டி வந்தா உங்க கோழைத்தனந்தான் முன்னே நிக்கும்னு எனக்குத் தெரியும். நாம ரெண்டு பேரும் சேர்ந்துதானே இந்த முடிவை எடுத்தோம்.''

''ஆமாம். சேர்ந்துதான் இந்த முடிவுக்கு வந்தோம்.''

''எந்த முடிவுக்கு?''

''அம்மாவை நம்ம ஊர்ப்பக்கம் வயசானவங்க விடுதி எதுக்கானும் அனுப்பிடறதுன்னு.''

''அதுக்கப்புறம் தீர விசாரித்து நல்ல விடுதியையும் தேர்ந்தெடுத்து ஏற்பாடெல்லாம் பண்ணியாயிடிச்சி. இப்போ என்ன திடீர்னு 'பாவம்'?''

''ஒண்ணுமில்லே.''

''இந்தப் பம்பாய் ஃப்ளாட்ல நமக்கு நெருக்கியடிக்குது. மூணு குழந்தைங்களாச்சு; பெரியவ காலேஜ் போறா.

அவ சிநேகிதிக வராங்க போருங்க. அப்புறம் நம்ம சிநேகிதர்கள் வேற. இப்படி ஒரே இட நெருக்கடி. அது போகட்டும்னு, உங்களுக்கு ஆபிஸ்ல நெட்டி முறியுது வேலே. நான் வீட்டு வேலையைத் தவிர, பொதுக் காரியங்கள்னு ஆயிரம் அலுவல் வச்சுக்கிட்டிருக்கேன். உங்கம்மாவை யாரு கவனிக்கறது? என்ன இருந்தாலும் வயசானவங்களுக்கு வேண்டியதைப் பார்த்துச் செய்யணுமில்ல? இல்லே, அவங்களும் சிவனேன்னு உக்காந்து கடக்காத எல்லாத்திலும் குத்தம் குறை கண்டுபிடிக்கருங்க. என்னால மாரடிக்க முடியலே. அதுவுந்தான் போகட்டும்னு, நாசூக்காய்ப் பழகத்தான் தெரியுதா? அன்னிக்கு அந்த ரமண்லால் ஸேட் வீட்டுப் பொம்புளேங்க வந்து என்னோட பேசிட்டிருந்தப்போ....''

''நகைக்கடை ஸேட்டா?''

''பின்னே யாராம்?''

''அந்தப் பொம்புளேங்க எப்படி உனக்குச் சிநேகமானுங்க?''

''போன வருஷம் வெள்ள நிவராணப் பணிக்கு எங்க கிளப் ஆரம்பிச்ச இயக்கத்தில அவங்களும் சேர்ந்தாங்க. அதிலேருந்து சிநேகம். நாங்க பேசிக்கிட்டிருந்தோமா? உங்கம்மா பக்கத்து அறைலேருந்து எட்டி எட்டிப் பார்த்து, 'என்ன பேசறீங்'கன்னு அப்பப்போ கையால ஜாடை வேற காட்டருங்க. எனக்கு மானமே போயிடுச்சு.''

''கஷ்டந்தான். அம்மாவுக்கு அந்த நாகரிகமெல்லாம் தெரியாதுதான். பழங்கால மனுஷி.''

''அதுக்கு நான்தான் பொணேயா?''

''சேசே! 'நாம பழங்கால மனுஷியாச்சே, ஒதுங்கியிருப்போம்'னு தெரியாத ஜடமாயிருக்காங்களேன்னுதான் சொல்றேன்.''

''இதெல்லாம் கூடப் போகட்டும்னலும், நம்ம கொழந்திங்க வளர்ந்துக்கிட்டு வராங்க. கவலேகளும் பொறுப்புகளும் அதிகமாகிட்டிருக்குது. இந்த நிலேயிலே உங்கம்மா இனெரு பொறுப்புத்தானே? வயசானவங்களேக் கவனிச்சுக்கிறதுன்னு லேசாவா இருக்குது? இதையெல்லாம் நீங்களும் ஆமோதிச்சுத்தானே நாம இந்த முடிவுக்கு வந்தோம்?

''அது சரிதான்; இருந்தாலும்...''



''ஒண்ணும் யோசனை பண்ணாதீங்க. இந்த மாதிரியான விடுதிகளிலே நம்பி விடலாம். நல்லாவே பாத்துப்பாங்க.''

''அது சரி, இருந்தாலும்....''

''இன்னும் என்ன 'இருந்தாலும்'? அம்மா முந்தானையை விட்டுட்டு இருக்கப் பாப்பாவுக்குப் பயமாயிருக்குதா? அப்படின்னு உங்கம்மாவையே பக்கத்தில வச்சுக்குங்க. நான் ஒரு வேலை தேடிக்கிட்டுப் பணி புரியும் பெண்கள் விடுதிக்குப் போயிடறேன்.''

''இதோ பார் மீனு!''

''எனக்கு வேலை கெடைக்காதுன்னு நெனைக்கிறீங்களா? நானும் எம் ஏ. படிச்சவ தான். என் மாமா ப்ரொபசிரியராயிருக்கற காலேஜ்ல எந்த நிமிஷம் வேணுலும் எனக்கு லெக்சரர் வேலைக்குச் சிபாரிசு செய்வார். அதை மறந்துடாதீங்க.''

''இப்ப நான் என்ன சொல்லிட்டேன்னு..''

''அப்படியே வேலை கெடைக்காம நான் தெருவில் பிச்சை எடுத்தாலும் 'எங்கம் மாவை வெளியே விரட்டின கிராதகி யாக்கும் என் பொண்டாட்டி'ன்னு நீங்க நாலு பேர்கிட்ட சொல்றதைவிட இது ஒண்ணும் மோசமில்லே.''

''ஐயோ மீனு; நான் அப்படி உன்னை ஏசுவேனா? சரி, இந்த விவாதம் போதும். முடிவெடுத்தபடியே செஞ்சிடலாம்.''

''என்ன செஞ்சிடலாம்?''

''அம்மாவை வயசானவங்க விடுதியிலேயே சேர்த்துடலாம்.''

''யாரு எடுத்த முடிவு அது?''

''நாம ரெண்டு பேரும் சேர்ந்து எடுத்த முடிவு.''

''அப்பா.''

''என்னடா கண்ணு?''



''பாட்டி ஊருக்குப் போகவேணும்னு சொல்லிட்டியாப்பா?''

''நீ சின்னக் கொழந்தையா, இல்லையா? எத்தனை வயசாகுது உனக்கு?''

''பாட்டி ஊருக்குப் போகமாட்டாங்களே?''

''உனக்கு நாலு வயசுதானே ஆகுது. நாலு வயசுக் கொழந்தை இதெல்லாம் பேசக் கூடாது.''

''எனக்குத்தானே பாட்டி? பேசுவேன்.''

''எதுத்தா பேசறே ராஸ்கல்? உதைக்கறேன் பாரு.''

''பாட்டி போகமாட்டாங்களே?''

''இதோ பாருடா கண்ணு. பாட்டிக்கு வயசாயிடிச்சு. அதனாலே ஊருக்குப் போய் ஓய்வு எடுக்கணும்னு சொன்னேனில்ல?''

''எனக்குப் பாட்டி வேணும். இல்லாத போனா நான் அழுவேன்.''

''நீ ஒழுங்காப் படிச்சுக்கிட்டு வரணும். இல்லேன்னா உன்னை நான் சரியாக் கவனிக்கலேன்னு உன் அம்மா என்னைத்தான்டா திட்டுவா.''

''எனக்குப் பாட்டி வேணும்.''

''கே.ஜி. யிலிருந்தே ஒழுங்காப் படிச்சிட்டு வந்தாத்தான் நாளைக்கு நீ பெரிய ஐ.ஏ.எஸ். ஆபீஸராக வரமுடியும்.''

''நான் பாட்டி கழுத்தைக் கட்டிக்கிட்டு என்னை விட்டுப் போகாதே பாட்டின்னு அழுதேன்.''

''உனக்கு ஐ.ஏ.எஸ். ஆபீஸராகணும்னு ஆசை இருக்கா, இல்லையா?''

''பாட்டியும் அழுதாங்க.''

''பாட்டி அழுதாங்களா?''

''ஆமாம்.''

''போடா உளறுதே.''

''நெஜம்மா அழுதாங்க.''

''சும்மாக் கதை விடாதே. பாட்டியா கொழந்தைங்க மாதிரி அழுதாங்க?''

''கொழந்தைங்க மாதிரி ஒண்ணும் அழலே. பெரியவங்க மாதிரி அழுதாங்க.''

''போடா மக்கு! பெரியவங்க எங்கயானும் அழுவாங்களா?''

''பெரியவங்க மட்டும் வருத்தமாயிருந்தா அழமாட்டாங்களா?''

''ரொம்பக் கண்டான் இவன். வருத்தம்னா என்னடா?''

''பாட்டிதான் சொன்னாங்க. நான் அழுதப்போ அவங்களும் என்னைக் கட்டிக்கிட்டு எனக்கும் உன்னை விட்டுட்டுப் போக ரொம்ப வருத்தமாயிருக்குடா கண்ணான்னு சொல்லி அழுதாங்க.''

''பாட்டியா அழுதாங்க?''

''ஊருக்குப் போகணும்னு நீங்க சொன்னதே புடிச்சு பாட்டி அழுதுகிட்டே தான் இருக்காங்க.''

''....''

''அப்பா.''

''ம்? என்ன குமார்?''

''என்னப்பா, நீ கூட அழுவுறியா?''

''இல்லையே!''

''பாட்டி அழுதுகிட்டே! எனக்குப் புத்து வாட்டி முத்தம் கொடுத்தாங்க. ரெஸ்ட் வேணும்னெல்லாம் ஒண்ணும் சொல்லலே.''

''நீ போய்ப் படி குமார்.''

''பாட்டியை ஊருக்குப் போகவேணும்னு சொல்லிடுப்பா.''

''படிக்கலேன்னா, போய்ப் படுத்துத் தூங்கு. மணி ஏழாகுது.''

''பாட்டி ஒண்ணும் ராத்திரியில தூங்கறதில்லே; அழுவுறாங்க.''

''இப்ப நீ இந்த இடத்தை விட்டுப் போறியா இல்லையா?''

''பாட்டி ஊருக்குப் போகவேணும்னு சொல்லிடறயா?''

''வாயை மூடுடா. எழுந்து போய்த் தூங்கறியா இல்லையா?''

''பாட்டி கிட்டக் கதை கேட்டுக்கிட்டுத்தான் தூங்குவேன்.''

''எப்படியோ தொலை!''

''பாட்டியைப் போகவேணும்னு சொல்லிடறயாப்பா?''

''மீனா!''

''என்ன?''

''.....''

''என்னமோ சொல்ல வந்துட்டுப் பேசாம இருக்கீங்களே! என்ன விஷயம்? சீக்கிரமாச் சொல்லுங்க. வெலவாசி உயர்வை எதிர்த்துக் குடும்பத் தலைவிங்கள்ளாம் என்ன போராட்டம் நடத்தலாம்னு எங்க கிளப்ல இன்னிக்குக் கூட்டம் போட்டு ஆலோசனை நடத்தறோம். நான் போகணும்.''

''வந்து.... அம்மா விஷயந்தான்.''

''அதுக்கு என்ன இப்போ? வர சனிக்கிழமை அவங்களை அழைச்சுகிட்டு ஊருக்குக் கௌம்பறீங்க.''



''பாட்டி ஊருக்குப் போகவேணும்னு சொல்லிட்டியாப்பா?''

''நீ சின்னக் கொழந்தையா, இல்லையா? எத்தனை வயசாகுது உனக்கு?''

''பாட்டி ஊருக்குப் போகமாட்டாங்களே?''

''உனக்கு நாலு வயசுதானே ஆகுது. நாலு வயசுக் கொழந்தை இதெல்லாம் பேசக் கூடாது.''

''எனக்குத்தானே பாட்டி? பேசுவேன்.''

''எதுத்தா பேசறே ராஸ்கல்? உதைக்கறேன் பாரு.''

''பாட்டி போகமாட்டாங்களே?''

''இதோ பாருடா கண்ணு. பாட்டிக்கு வயசாயிடிச்சு. அதனலே ஊருக்குப் போய் ஒய்வு எடுக்கணும்னு சொன்னேனில்ல?''

''எனக்குப் பாட்டி வேணும். இல்லாத போனு நான் அழுவேன்.''

''நீ ஒழுங்காப் படிச்சுக்கிட்டு வரணும். இல்லேன்னு உன்னை நான் சரியாக் கவனிக்கலேன்னு உன் அம்மா என்னைத்தான்டா திட்டுவா.''

''எனக்குப் பாட்டி வேணும்.''

''கே.ஜி. யிலிருந்தே ஒழுங்காப் படிச்சிட்டு வந்தாத்தான் நாளைக்கு நீ பெரிய ஐ.ஏ.எஸ். ஆபீஸராக வரமுடியும்.''

''நான் பாட்டி கழுத்தைக் கட்டிக்கிட்டு என்னை விட்டுப் போகாதே பாட்டின்னு அழுதேன்.''

''உனக்கு ஐ.ஏ.எஸ். ஆபீஸராகணும்னு ஆசை இருக்கா, இல்லையா?''

''பாட்டியும் அழுதாங்க.''

''பாட்டி அழுதாங்களா?''

''ஆமாம்.''

''போடா உளறுதே.''

''நெஜம்மா அழுதாங்க.''

''சும்மாக் கதை விடாதே. பாட்டியா கொழந்தைங்க மாதிரி அழுதாங்க?''

''கொழந்தைங்க மாதிரி ஒண்ணும் அழலே. பெரியவங்க மாதிரி அழுதாங்க.''

''போடா மக்கு! பெரியவங்க எங்கயானும் அழுவாங்களா?''

''பெரியவங்க மட்டும் வருத்தமாயிருந்தா அழமாட்டாங்களா?''

''ரொம்பக் கண்டான் இவன். வருத்தம்னு என்னடா?''

''பாட்டிதான் சொன்னுங்க. நான் அழுதப்போ அவங்களும் என்னைக் கட்டிக்கிட்டு எனக்கும் உன்னை விட்டுட்டுப் போக ரொம்ப வருத்தமாயிருக்குடா கண்ணுன்னு சொல்லி அழுதாங்க.''

''பாட்டியா அழுதாங்க?''

''ஊருக்குப் போகணும்னு நீங்க சொன்னதே புடிச்சு பாட்டி அழுதுகிட்டே தான் இருக்காங்க.''

''. . . . .''

''அப்பா.''

''ம்? என்ன குமார்?''

''என்னப்பா, நீ கூட அழுவுறியா?''

''இல்லையே!''

''பாட்டி அழுதுகிட்டே! எனக்குப் புத்து வாட்டி முத்தம் கொடுத்தாங்க. ரெஸ்ட் வேணும்னெல்லாம் ஒண்ணும் சொல்லலே.''

''நீ போய்ப் படி குமார்.''

''பாட்டியை ஊருக்குப் போகவேணும்னு சொல்லிடுப்பா.''

''படிக்கலேன்னு, போய்ப் படுத்துத் தூங்கு. மணி ஏழாகுது.''

''பாட்டி ஒண்ணும் ராத்திரியில தூங்கறதில்லே; அழுவுறுங்க.''

''இப்ப நீ இந்த இடத்தை விட்டுப் போறியா இல்லையா?''

''பாட்டி ஊருக்குப் போகவேணும்னு சொல்லிடறயா?''

''வாயை மூடுடா. எழுந்து போய்த் தூங்கறியா இல்லையா?''

''பாட்டி கிட்டக் கதை கேட்டுக்கிட்டுத்தான் தூங்குவேன்.''

''எப்படியோ தொலை!''

''பாட்டியைப் போகவேணும்னு சொல்லிடறயாப்பா?''

''மீனு!''

''என்ன?''

''. . . . .''

''என்னமோ சொல்ல வந்துட்டுப் பேசாம இருக்கீங்களே! என்ன விஷயம்? சீக்கிரமாச் சொல்லுங்க. வெலவாசி உயர்வை எதிர்த்துக் குடும்பத் தலைவிங்கள்ளாம் என்ன போராட்டம் நடத்தலாம்னு எங்க கிளப்ல இன்னிக்குக் கூட்டம் போட்டு ஆலோசனை நடத்தறோம். நான் போகணும்.''

''வந்து.... அம்மா விஷயந்தான்.''

''அதுக்கு என்ன இப்போ? வர சனிக்கிழமை அவங்களை அழைச்சுகிட்டு ஊருக்குக் கௌம்பறீங்க.''



''வந்து.... அம்மாவை அனுப்பிடத் தான் வேணுமா?''

''பலே, முடிவை மாத்தறீங்களா?''

''அம்மாவை அனுப்பிடறதுன்னு வீட்டை விட்டு விரட்டியடிக்கறுப்பல தோணுது.''

''அதெப்படி? தெருவுக்கா விரட்ட றீங்க? நல்லாப் பாத்துக்கக்கூடிய ஒரு ஸ்தாபனத்துக்கு அனுப்பறீங்க.''

''அநாதை மாதிரி.''

''அநாதைன்னு நாம பொய் சொல்றமா? புள்ளை இருக்கேன், ஆனு இருக்கற இடத்தில வச்சுக்கச் சௌகரியமில்லேன்னு சொல்லி, அங்கே சேர்த்துட்டு மாச மாசம் பணம் அனுப்பப் போறீங்க. அப்புறம் என்ன?''

''அது சரி. ஆனு இப்போ....''

''கிட்டி முட்டி வரப்பத் தைரியமில் லேன்னு ஒரு ஆம்புளை உலகத்தில என்ன தான் சாதிக்கமுடியும்?''

''தைரியமில்லேன்னு இல்லே, பாவமா யிருக்குது.''

''அம்மாக் கோண்டாய் இருக்கிறவங்க கல்யாணம் செய்துக்கக் கூடாது.''

''ஏன் கூடாது? அம்மா, பொண்டாட்டி, ரெண்டு பேர் கிட்டேயும் ஒரு மனுஷன் பிரியமாயிருக்க முடியாதா? ரெண்டு பேருக்கும் தன கடமையைச் செய்யக்கூடாதா?''

''கடமையைச் செய்யாம உங்கம்மாவை அம்போனனு விட்டுவிடவா இங்கே சொல்றுங்க? இன்னெரு இடத்தில் விட்டுப் பணத்தைக் குடுத்துப் பாத்துக்கச் சொன்னு என்ன தப்பு?''

''இருந்தாலும் மகனைப் பிரிஞ்சு, குடும்பத்திலிருந்து விலகி, எங்கேயோ அநாதை போல..''

''சரி, சரி, உங்க மனசு மாறிப் போயிடிச்சு. அப்போ உங்கம்மாவைக் கூடவே வச்சுக்குங்க. நான் போறேன் வெளியே.''

''இன்னெரு வாட்டி இப்படிச் சொன்னு எனக்குக் கோவம் வரும், மீனு.''

''அடேயப்பா! அத்தனை வீருப்பு வந்திடிச்சா? நேத்துக் குமார் உங்கம்மா கிட்டப் பேசினதைக் கேட்டப்பவே இப்படி ஏதாச்சும் ஆகும்னு நெனைச்சேன்.''

''என்ன பேசிட்டிருந்தான்?''

''உங்கம்மாதான் எப்பவும் பேரனைக் கட்டிக்கிட்டு அழுவுறுங்க இல்லே? கொழந்தை உங்களண்ட வந்து சொல்லும், நீங்க அப்படியே உருகிப்போயிடுவீங் கன்னு தெரிஞ்சுதான் இப்படிச் செய்யறுங்க. குமார் நேத்துச் சொல்ருன், அவங்க கிட்ட, 'பாட்டி, உன்னை அனுப்பவேணும்னு அப்பாகிட்டச் சொன்னேன், அப்பாக்கூட அழுதுட்டாரு' அப்படின்னு. அம்மாவை நெனைச்சு இந்தப் பாப்பா அழுதுதுன்னு கேட்டதுமே எனக்குத் தெரியும், நீங்க பின்வாங்குவீங்கன்னு.''

''எத்தனை வயசானலும் நான் அவங்களுக்கு மகனதானே? பெத்தவங்களுக்காகப் புள்ளை இரக்கப்படறது தப்பா? கொஞ்சம் பெரிய வீடு கெடைக்குதான்னு பார்ப்பம். அம்மா நம்ம கூடவே இருந்துட்டுப் போகட்டும்.''

''அந்தக் கதையெல்லாம் நடக்காது. அம்மாதான் வேணும்னு என்னல உங்கக் கூடக் குடும்பம் நடத்த முடியாது.''

''மிரட்டிறியா? முடியாதுன்னு போ.''

''என்ன சொன்னீங்க?''

''போன்னு சொன்னேன்.''

''என்னைப் பார்த்தா அப்படிச் சொன்னீங்க? தாலி கட்டின பொண்டாட்டியைப் பார்த்தா?''

''தாலி கட்டின பொண்டாட்டி என் கூடக் குடும்பம் நடத்த முடியாதுன்னு சொன்னப்புறந்தான் நானும் சொன்னேன்.''

''அதாவது, 'எங்கம்மாவை என் கூடத் தான் வச்சுப்பேன், உனக்கு இஷ்டம் இருந்தா இரு. இல்லாட்டி வெளியே போ'ன்னு சொல்றீங்க, அதானே?''

''ஆமாம்.''

''போகமாட்டேன்னு நெனைக்கறீங்களா?''

''அப்படி நெனைக்கலே.''

''எனக்கு லெச்சரர் வேலை கெடைக்கும்.''

''ஜமாய்.''

''இல்லேன்னு என் பொறந்த வீட்ல கூட என்னை வச்சுப்பாங்க.''

''வச்சுக்கட்டும்.''

''உங்களை நம்பிக்கிட்டு நான இல்லே.''

''சந்தோஷம்.''

''அதாவது, போன்னு சொல்றீங்க.?''

''நீ போறேன்னு சொன்னப்புறம்.''

''போறேங்கறவளை இருன்னு சொல்லக் கூடாதா?''

''தாராளமாச் சொல்றேன், அம்மாவும் இங்கேயே இருக்க ஏத்துக்கிட்டா.''

''இல்லாட்டி நான் போயிடணும க்கும்?''

''அது உன் இஷ்டம்.''

''போயிடறேன.''

''சரி.''

''அட கடவுளே! எனக்கு இப்படி ஒரு காலம் வந்துடுச்சா? கட்டின புருஷன வீட்டைவிட்டு வெரட்டறுரே! அடியம்மா என் புருஷனைப் பெத்த மகராசி, நீ இந்த வீட்ல இருக்கணுங்கறதுக்காக என்னை வெரட்டும்படி பண்ணிட்டியா?''

''ஏ, மீனு, எங்கம்மாவை இதில இழுக் காதே.''

''ஐயையோ! உங்கம்மாவை நான் ஏதும் சொல்லிடலீங்க. எனக்கேன் வம்பு? கடைசில தாயும் மகனும் ஒண்ணு. ஐயோ கடவுளே! நான் என்ன செய்வேன்? மூணு கொழந்தைகளுக்குத் தாயான பொண்டாட்டியைத் திடீர்னு பிடிக்காமப் போயிடிச்சே.''

''இப்போ உன் ஒப்பாரியை நிறுத்தப் போறியா இல்லியா?''

''நான் என்ன தப்புப் பண்ணினேன்? ஒவ்வொருத்தியைப் போல மாமியாரைப் பட்டினி போட்டேனு? இடுப்பொடிய வேலை வாங்கினேனு? குடும்ப நெலவரத்தை யோசிச்சு அவங்களுக்கு வேற ஒரு ஏற்பாடு பண்ணலாம்னு சொன்னு அது குத்தமாப் போயிடிச்சா? நானும் என் கொழந்தைங்களும் எக்கேடு கெட்டால் என்னன்னு புருஷனே நெனைக்கறபோது....''

''நான ஒண்ணும் அப்படி நெனைக்கலே.''

''எனகிட்ட என் புருஷனுக்கு அன்பு இல்லாமப் போயிட்டபோது.....''

''உன்கிட்ட எனக்கு அன்பு இல்லேன்னு யார் சொன்னது?''

"அன்பு இருந்துதான் வெளியே போடான்னு சொல்றீங்களா? ஆனா இந்த வார்த்தையைக் கேட்டப்புறம் நான் ஏன் இனியும் இங்கே இருக்கணும்? அவ்வளவு சொரணை கெட்டுப் போயிட்டேனா? இதோ போயிடறேன். போய்ச் சமுத்திரத்தில் விழுந்து உயிரை விடுவேனே தவிர, இனி இங்கே ஒரு நிமிஷம் தங்கமாட்டேன்."

"இதோ பார் மீனு!"

"இன்னும் என்ன பார்க்கிறது? இதோ வெளியே போயிடறேன். அதுதானே உங்க ஆசை? என் கொழந்தைங்களை வேணும் துரத்தி விட்டுட்டு நீங்களும் உங்க அம்மாவும் இங்கே ஒண்ணா, சந்தோஷமா இருங்க."

"மீனு, இப்படியெல்லாம் பேசாதே."

"கட்டின பொண்டாட்டி நான். உங்க கூட இருபது வருஷம் வாழ்க்கை நடத்தியிருக்கேன், ஒரு நிமிஷத்தில் வெளியே போன்னு சொல்லிட்டீங்களே?"

"நான் அந்த விதத்தில் எங்கே சொன்னேன்?"

"என்கிட்டே துளி அன்பிருந்தா அந்த வார்த்தை வருமா?"

"உன்கிட்ட எனக்குள்ள அன்பு உனக்குத் தெரியாதா மீனு? உன் மனசு கோணாம என்னிக்கானும் நடந்துக்கிட்டிருக்கேனா? அழாதே. இப்ப நான் சொல்றது...."

"ஐயோ கடவுளே! இப்படி ஒரு விதியா எனக்கு?"

"மீனு, அழாதேயேன், நான் சொல்றதைக் கொஞ்சம் காதில வாங்கிக்க."

"என்னை என் புருஷன் வெறுத்துட்டாரே! இதுக்கு முந்தியே நான் செத்து ஒழிஞ்சிருக்கக் கூடாதா? கடவுளே! என்னை ஏன் இன்னும் உயிரோடு வச்சிருக்கே?"

"மீனு, மீனு சொல்றதைக் கேளேன்."

கோவில் சிலை என்றுதான் இவளையும் கூறியிருப்பார்களோ ஒரு காலத்தில்?

இன்று கோவில் சிதைந்து சிலையும் இளைத்துள்ளது; முகத்தின் மீதும் உடல்மீதும் முதுமையெனும் கதையை வாழ்க்கை வரி வடிவாய் எழுதி முடித்துள்ளது.

எனினும் இந்த இளைப்பில், சிதைவில், வரிகளில், பழஞ்சிலையின் தெய்விகம் ஏதோ ஒரு கண்ணீராய் எட்டிப் பார்க்கிறது.

அவள் மௌனமாய்க் கண்ணீர் வடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

வீட்டில் எல்லாரும் உறங்கியாகிவிட்டது. கடைசிப் பேரனையும் அவளே கரங்களில் போட்டுத் தாலாட்டிக் கதை சொல்லி முத்தமிட்டுத் தூங்க வைத்துப் படுக்கையில் கிடத்திவிட்டாள். நள்ளிரவு. வெளியே பெருநகரின் இரவு வாழ்க்கை, கோலாகலமான நடமாட்டங்களில் ஒலித்துக் கொண்டிருந்தது.

சிந்ணை சிந்தனை, அண்ணாமலையானைப் போல் அடிமுடியற்ற சிந்தனை.

கடைசியில் அவள் செய்த குற்றந்தான் என்ன? வேண்டாப் பொருளாகி விட்ட காரணம் என்ன?

தொண தொணக்கிறாள், நாகரிகமாய்ப் பழகத் தெரியவில்லை என்றெல்லாம் மருமகள் பொருமுகிறாளே? வீட்டை விட்டு விரட்டி விடுகிற தண்டனைக்குரிய குற்றங்களா அவை? அவள் தன்னுடன் இல்லாதிருப்பதற்கு மாதம் மாதம் பணத்தைக் கொடுத்தாவது விலக்கி விட நினைக்கும்படியான குற்றங்களா அவை?

அவள் குற்றம்?.....

அவள் இப்போது பரண்மேல் தூக்கிப் போடவேண்டிய ஒரு தேவையற்ற பழசு. வீணுக்கு அவளைப் பிறர் தாங்க வேண்டும், கவனிக்க வேண்டும் என்னும்படியான ஒரு சுமை. ஓர் அநாவசியப் பொறுப்பு. கீழ்த் தலைமுறைகளின் இனிய ஓட்டத்தில் இடறும் ஒரு பாறாங்கல்.

முதுமைதான் அவள் குற்றம். அப்பப்ப எவ்வளவு மகத்தான குற்றம்!

தேவர்கள் தேவர்களாயிருப்பது இறவாமையினால் அல்ல, இளமையினால்; அமுதம் என்றால் இளமை. இளமைதான் தெய்விகம். இறைவனின் ஆறு குணங்களில் ஒன்றாக அல்லவோ இளமையைக் குறிப்பிட்டு அதற்காக ஒரு மதமே ஸ்தாபித்திருக்கிறார்கள்!

அந்தக் குமரக் கடவுளைக் கண்ணால் பார்த்ததில்லை. ஆனால் கண்ணால் காணும் தெய்வங்கள், இந்தப் பூமியின் தெய்வங்கள் இளமை மாறுமுன் இறப்பவர்கள்தாம்.

'அற்பாயுள்' என்று குறையாய்ச் சொல்வது எத்தனை பேதமையான வழக்கு! நீண்ட ஆயுள்தான், அதன் இன்னொரு பெயரான வயோதிகந்தான், உண்மையில் வருந்தற்குரியது, பிறரின் அலுப்புக்கும் சலிப்புக்கும் ஆளாவது.

'அவன் அழுதான்.'

மருமகளுக்குத் தான் உறுத்தலாகி விட்டது அவளுக்குப் பெரிதாய்த் தோன்றவில்லை. ஆனால் மகனுக்குமல்லவா? யாருக்கோ கூலி கொடுத்தாவது அவளை அப்புறப்படுத்த வேண்டுமென்று மகனுமல்லவோ எண்ணிவிட்டான்?

அவனுக்கும் அவள் வெறுத்துவிட்டாளா? விதவைத் தாயை ஒரே மகனுக்கும் வெறுத்துப் போய் விட்டதா? பத்து மாதங்கள் வயிற்றில் அரணாய், கோட்டையாய், வைத்துப் பாதுகாப்பது ஓர் எதிரியைத்தானா?

துயரத்தின் உயிர்நாடியான அந்த எண்ணம், அந்த அநாதைத்தனம்—அன்பு கிடைக்கவில்லை என்னும் பெரிய அநாதைத்தனம்—அதற்குக் கடைசியில் இப்படி ஒரு மாற்றா?

அவன் அழுதான்; அவள் மகன் அவளைச் சிரித்துக்கொண்டு துறக்கவில்லை, அழுது கொண்டு துறக்கிறான்.

வாழ்ந்த வாழ்வெல்லாம் அப்படி ஒன்றும் முழுதுமாய் அர்த்தமற்றுப் போய்விடவில்லை.

கிழவி மூக்கை உறிஞ்சிக் கொண்டாள். துடைக்கத் துடைக்க வற்றாத கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

இனி அவன் அவளை முதியோர் விடுதியில் சேர்த்தால் என்ன, சேர்க்காவிட்டால் என்ன? நெஞ்சுக்குள் ஒரு ரகசிய பலமாய் இறுதி மூச்சுவரை கூடவே வருகிற சிறு ஒளியாய்.... 'அவன் அழுதான்!'

அது போதும்! *




'புகையிலையை விரிச்சாப் போச்சு; பொம்பளை சிரிச்சாப் போச்சு.' - இது நம் ஊர்ப் பழமொழி. 'பெண்கள் சிரித்தால் எத்தனை அழகாக இருக்கிறது! அதுவும் ஓர் அழகான பெண் நம்மைப் பார்த்துச் சிரித்தால், நாம் எத்தனை ஆனந்தப்படுவோம்! அதை விட்டுவிட்டு எவனோ, போச்சு, போச்சு என்று புலம்பி வைத்திருக்கிறானே!' என்றே முதலில் நினைக்கத் தோன்றுகிறது.

ஆனால்,சீன தேசத்து அரசன் ஒருவன் ஒரு பெண்ணைச் சிரிக்க வைக்கப் படாத பாடு பட்டிருப்பதையும், அவள் ஒவ்வொரு முறை சிரிப்பதற்கும் அவன் கொடுத்த விலையையும் அதன் விளைவுகளையும் வரலாற்றில் படித்த பிறகு, அநுபவசாலி ஒருவனால் சொல்லப்பட்ட, காலங்காலமாக நிலைத்து நிற்கிற நம் ஊர்ப்பழமொழியின் அருமை புரிகிறது.

அது கி. மு. ஒன்டதாம் நூற்றாண்டின் முதற்பகுதி. 'லீ' என்கிற கொடுங்கோல் மன்னன், மக்களின் எதிர்ப்பைத் தாங்க முடியாமல் நாட்டை விட்டு ஓடிப் போய் அறுபதாண்டுகள் ஆகியிருந்தன.

ஒரு தேசம், மன்னன் இல்லாமல் இருக்கக் கூடாதென்று நினைத்த மந்திரிமார்களும் ராஜப்பிரதானிகளும் மக்களின் ஆதரவோடு 'சௌ' வமிசத்தைச் சேர்ந்த பழைய ராஜகுடும்பத்திலிருந்து, 'யூ' என்பவனைத் தேர்ந்தெடுத்து மன்னனாக்கியிருந்தனர்.

'யூ' நல்ல திறமைசாலி. அறுபதாண்டுகளாகச் சீர்கெட்டுக் கிடந்த நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தினான். மக்களுக்குப் பல நன்மைகளைச் செய்தான். தீராத வழக்குகளையெல்லாம் ராஜதர்பாரில் நேர்மையுடன் நீதி விசாரணை செய்து தீர்த்து வைத்தான். விசேஷ நாட்களைச் சிறப்பாகக் கொண்டாடியதுடன், மக்களுக்கு நடுவே பல்லக்குப் பரிவாரம் புடைசூழ ராஜபதாகைகளுடன் அடிக்கடி வீதிவலம் வந்தான்.

இரண்டுமூன்று தலைமுறையாக மன்னனையே அறியாதிருந்த சீன மக்கள், 'யூ'வின் கோனாட்சி முறையைப் பெரிதும் மகிழ்ந்து போற்றினர். மன்னனின் ஆடம்பரமான வீதியுலாக்களையும் கொண்டாட்டங்களையும் அவர்கள் பெரிதும் வரவேற்றனர்.

'யூ' மன்னன் ஒரு நாள் ஓர் அழகான நாட்டியக்காரியைச் சந்திக்க நேர்ந்தது. அரண்மனையில் நடனமாட வந்த அவளுடைய அழகில் அவன் மயங்கினான். அவளைத் தனியே சந்தித்து, ''நான் உன் அழகுக்கு அடிமையாகிவிட்டேன். நீ இந்த அரண்மனையிலேயே தங்கிவிடு'' என்று வேண்டினான்.

''மன்னா, என்னை 'இளைஞர்களின் சொப்பன தேவதை' என்பார்கள். அழகில் சிறந்த பல இளைஞர்கள் என்னை வட்டமிட்டுக்கொண்டிருக்கிறார்கள். நான் இன்னும் அவர்களில் எவருக்கும் என் சம்மதத்தை அளிக்கவில்லை. நான் உங்களுக்குச் சம்மதமளித்து விட்டால், அவர்களின் கனவுகள் வாடிப் போகும்; மனசால் முட

மாகிப் போவார்கள். நகரங்களில் பல செல்வர்கள் என்னை அடைவதற்கு எந்த விலையைக் கொடுக்கவும் தயாராக இருக்க வேண்டுமென்பதற்காகவே ஏராளமான பொருள்களைச் சம்பாதிப்பதில் முனைந்துள்ளனர். ஒருவர் அழகிய அரண்மனையே கட்டித் தருகிறேன் என்கிறார். இன்னொருவர், உல்லாச மரக்கலம் அமைத்து, நாம் உலகை வலம் வரலாம் என்கிறார். இத்தனையையும் துறந்து விட்டு, நான் உங்கள் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமானால், உங்கள் அன்பு அத்தனை ஆழமானதாக இருக்குமா என்பதை அறியவேண்டாமா?'' என்றாள்.

அந்த அற்புதச் சுந்தரியை எப்படியும் அடைந்து விடவேண்டுமென்று தவித்த மன்னன், ''என் அன்பு ஆழமானது என்பதை நிரூபிக்க நான் என்ன செய்யவேண்டும்? அப்படியே செய்கிறேன். நான் உன்னை ஒருபோதும் ஏமாற்ற மாட்டேன். சந்தோஷமாக வைத்துக் கொள்வேன்'' என்றான்.

அந்த நாட்டிய நங்கை, ''நீங்கள் என்னைச் சந்தோஷமாக வைத்துக்கொள்வீர்கள். ஆனால் நான் உங்கள் அரண்மனையில் அடைபட்டுக் கிடக்கும் ஆயிரக்கணக்கான மாடப்புறாக்களில் ஒன்றாக அல்லவா இருக்க நேரும்? அதை நான் விரும்பவேண்டுமே!'' என்றாள்.

''உன்னை அப்படிச் சிறகொடிந்த பறவையாக வைத்திருக்க மாட்டேன். நீ என் கனவுப் பறவை. உன்னோடு எப்போதும் நான் இணைசேர்ந்து இன்பவானில் சிறகடித்துப் பறப்பேன். உன் சொல்லை மீறி இங்கே எதுவுமே நடவாது. என்னிலும் உன் ஆணையே இங்கு மேம்பட்டு நிற்கும். எனவே, நீ எதற்கும் அஞ்சத் தேவையில்லை'' என்று உறுதி கூறினான் மன்னன்.

''சரி, நான் உங்களுடன் வாழச் சம்மதிக்கிறேன். ஆனால் என் முகத்தில் எப்போதும் புன்னகை மலர்ந்திருக்குமாறு நீங்கள் பார்த்துக்கொள்ள வேண்டும். என் மகிழ்ச்சி கெட்டுப் போனால் என்னிடம் புன்னகை மலராது. அப்புறம் நான் இந்த அரண்மனையிலும் இருக்க மாட்டேன்'' என்று கூறி, அவள் அந்த அரண்மனையிலேயே தங்கினாள்.

அவள் வந்ததிலிருந்து 'யூ' மன்னன் அவளுடைய தனி மாளிகையே கதியென்று கிடந்தான். அரண்மனையில் அன்றாடம் கவனிக்க வேண்டிய ராஜ்ய பாரங்களை அவன் ஓர் ஓரமாக ஒதுக்கிவிட்டான். அந்தப் பேரழகியின் முகத்தில் புன்னகை வாடிப் போகாமல் பார்த்துக் கொள்ளவே அவனுக்கு நேரம் சரியாக இருந்தது. நாள்தோறும் அவளுக்காக விதவிதமான ஆபரணங்களையும் பட்டையும் வரவழைத்து அளித்துக் கொண்டே இருந்தான்.

ஒரு நாள் ஓர் அழகான பட்டை மன்னன் அவளுக்கு அளித்தான். அவள் அதை அலட்சியமாக வாங்கி, ''இது எனக்குப் பிடிக்கவில்லை'' என்று கூறி, அந்தப் பட்டாடையைக் கிழித்தெறிந்தாள். மன்னன் போனால் போகிறது என்று நினைத்தான். ஆனால், அந்த அழகிக்கு அந்தப் பட்டாடைதான் பிடிக்கவில்லையே தவிர, அதைக் கிழித்தபோது எழுந்த 'க்ளீங்' என்ற ஒலி மிகவும் பிடித்துப் போய்விட்டது. ''இது என்ன ஓர் அற்புதமான இசைக் கருவியை மீட்டியது போல் இருக்கிறதே!'' என்று வியந்தாள். பணிமகளை அழைத்து, மன்னன் தனக்களித்த பட்டாடையை எல்லாம் கொண்டு வரச் செய்து ஒவ்வொன்றாகக் கிழிக்க ஆரம்பித்தாள்.

மன்னன், அவளுடைய இந்த விபரீதச் செய்கையைப் பார்த்து வியப்புற்றான். தன் கண்ணெதிரிலேயே அவள் அழகிய பட்டாடைகளையெல்லாம் கிழித்துப் பாழ் பண்ணுவதை எண்ணி அவன் மனம் நொந்தது.

''கண்ணே, நான் உனக்கு வாங்கிக் கொடுத்த விலை உயர்ந்த பட்டாடைகளையெல்லாம் இப்படிக் கிழித்து எறிகிறாயே! இது என்ன விபரீத ஆசை?'' என்று வினவினான்.

அந்த அழகியின் முகம் சட்டென்று மாறிவிட்டது. புன்னகை போன இடம் தெரியவில்லை. கோபத்துடன் அவள் சொன்னாள்.

''எனக்கென்று அளித்ததை நான் விருப்பப்படி அநுபவிக்கக் கூடாதா? நான் மகிழ்ச்சியாக இருப்பது முக்கியம் என்று தங்களுக்குத் தோன்றவில்லையா? பட்டுத் துணியைக் கிழிக்கிறபோது எழுகிற இன்னொலி சுநாதமாக இருக்கிறது. நான் ரசனையோடு அதை அநுபவிக்கிறேன். தாங்கள் இப்படியெல்லாம் லாப நஷ்டக் கணக்குப் பார்த்தால் எனக்குப் பிடிக்காது. அப்புறம் நம் நிபந்தனையைத் தங்களுக்கு நினைவுபடுத்துவதோடு, செயல் படுத்தவும் வேண்டியிருக்கும்.''

மன்னன் அவளைச் சாந்தப்படுத்த விரும்பினான். ''என் இதய ராணிக்கு ஏன் இத்தனை கோபம்? உனக்கு இது மகிழ்ச்சியை அளிக்கிறது என்றால், தாராளமாக இன்னும் எத்தனை பட்டுத் துணிகளை வேண்டுமானாலும் கிழித்துப் போடு. நான் நிறையப் புதுத்துணிகளை வரவழைக்கிறேன்'' என்று கூறித் தேசத்திலுள்ள அத்தனை நெசவாளிகளும், புதிய பட்டாடைகள் அனைத்தையும் அரசாங்கத்துக்கே விற்க வேண்டும் என்று உத்தரவு இட்டான்.

உற்பத்தியாகிற பட்டுத் துணிகளையெல்லாம் அரசே வாங்க ஆரம்பித்தது. அந்த அழகி பொழுது போகாத நேரங்களிலே பட்டுத்துணிகளைக் கிழித்து, அப்போது எழுகிற 'க்ளீங்' என்னும் ஒலியை ரசித்து மகிழ்ந்து கொண்டிருந்தாள்.

அமைச்சர் ஒருவர் இந்த நடவடிக்கையைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் அரசனை அணுகி, ''நாம் எதற்காக இவ்வளவு பட்டுத்துணிகளை வாங்குகிறோம்? மரக்கலங்களில் ஏற்றி ஏதேனும் வெளிநாடுகளுக்கு அனுப்ப அரசு திட்டமிட்டிருக்கிறதா?'' என்று வினவினார்.

மன்னனால் பதில் சொல்ல முடியவில்லை. 'என் ஆசை நாயகி கிழித்தெறியத்தான்

இவ்வளவு டட்டுத் துணிகளை வாங்குகிறோம்' என்று எப்படிச் சொல்ல முடியும்?

இந்த நிலை நீடித்துக் கொண்டிருந்தால், அரசின் பொக்கிஷசாலை விரைவில் காலியாகி விடும் என்ற நிலையை அமைச்சர் மூலம் உணர்ந்ததும் அரசன் மெதுவாக அவளிடம் ஒரு நாள் பேச்சைத் துவக்கினான்:

''பட்டுத் துணியைக் கிழிப்பது அபசகுனம் என்று மந்திரி கருதுகிறார். அதனால் தேசத்துக்குத் தீமை ஏற்படக்கூடும் என்று கூறி மிகவும் வருந்துகிறார். நீ இந்தப் டழக்கத்தை மாற்றிக் கொள்ளக் கூடாதா?'' என்று குழைந்து குழைந்து வினவினான்.



அவள் முன்னதாகவே அமைச்சரைப் பற்றி அறிந்திருந்தாள். அவர் தன்னைப்பற்றி அவதூறுகளைக் கிளப்பி, அரசவைப் பிரமுகர்களின் மனதைக் கலைத்து வருவதாகவும் கேள்விப்பட்டிருந்தாள். மன்னன், அமைச்சரின் கடுமையான ஆட்சேபத்தை நாசுக்காகத் தெரிவித்தும், 'சரி, இந்த அமைச்சரின் செல்வாக்கிற்கு ஒரு முடிவு கட்டி விடவேண்டும்' என்று நினைத்துக் கொண்டாள்.

''எனக்கு மட்டுமென்ன, துணியைக் கிழித்துக் கொண்டிருக்கப் பைத்தியமா பிடித்து விட்டது? எனக்கு இங்கே வேறு என்ன பொழுதுபோக்கு இருக்கிறது? வேடிக்கை, விளையாட்டுப் போட்டி என்று ஏதாவது ஏற்பாடு செய்து என்னை அழைத்துப் போகிறீர்களா? உங்களுக்கு உங்கள் சந்தோஷந்தான் முக்கியமாக இருக்கிறது. நான் சந்தோஷமாக இருக்க வேண்டுமென்ற நினைப்பே உங்களுக்கு இல்லை'' என்று கூறித் தன் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டாள்.

''நீ சொல்வதும் நியாயந்தான். எனக்குப் புரியாமல் இல்லை. உடனே அரண்மனையில் ஒரு பெரிய விளையாட்டுப் போட்டிக்கு ஏற்பாடு செய்கிறேன்'' என்று கூறிய மன்னன் எப்படியாவது அவளுடைய இந்தக் கெட்ட பழக்கத்தை மாற்றினால் போதுமென்ற நினைப்புடன், மல்யுத்த வீரர்களையும், வாள் வீரர்களையும் வரவழைத்து வீர தீர சாகசங்களை நிகழ்த்த ஏற்பாடு செய்தான். புலி, எருதுச் சண்டைக்கும் ஏற்பாடாகியது.

அந்தப் பேரழகி, மன்னனோடு வந்தமர்ந்து எல்லாவற்றையும் ரசித்துக் கொண்டிருந்தாள். முக்கியமான பிரமுகர்களும், உயர் அதிகாரிகளும், அமைச்சர்களும் வந்து இந்தக் கேளிக்கை நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழ்ந்தனர். வீரர்கள் வந்து களத்தில் மோதித் தங்கள் வலிமையை நிரூபித்தனர். அடுத்து, புலி, எருதுச் சண்டை நிகழ்ந்தது. அழகான எருது ஒன்றை அந்தப் புலி அடித்துக் கிழித்து எறிந்ததும் அடுத்த எருது ஒன்றைக் கொண்டு வந்து புலியோடு மோதவிடப் போகிற சமயத்தில், அவள் எழுந்து அந்தச் சண்டையைத் தடுத்து நிறுத்துமாறு மன்னனிடம் கூறினாள்.

''ஏன்? இந்த விளையாட்டு உனக்குப் பிடிக்கவில்லையா?'' என்று படபடத்தத்தோடு வினவினான் மன்னன்.

''விளையாட்டுப் பிடித்திருக்கிறது. ஆனால் புலியோடு எருதை மோதவிடுவதுதான் பிடிக்கவில்லை. பாவம்! அந்த மாடுகளை எதற்காகப் பலியிட வேண்டும்? புலியுடன் சண்டைபோட வீரர்களே இல்லையா என்ன?'' என்றாள் அந்த அழகி.

மன்னனும் அவள் சொன்னபடியே மல்யுத்தத்திலும், வாள் வீச்சிலும் வெற்றி பெற்ற வீரர்களைப் புலியுடன் மோதவிடுமாறு உத்தரவிட்டான். ஆனால் அந்த அழகி அதையும் வேண்டாமென்று கூறித் தடுத்துவிட்டு, ''வெற்றி பெற்ற வீரர்கள் களைத்திருப்பார்கள். அமைச்சர் சென்று புலியுடன் சண்டை போடட்டும்'' என்றாள்.

''அமைச்சரா?'' என்று மன்னன் திகைத்தான். அவை அதிர்ந்தது.

''ஏன, அமைச்சருக்கு என்ன? அவர் ஆண் மகன் அல்லவா? அவர் புலியைத் தம் புத்தி சாதுர்யத்தாலேயே வென்றாலும் வெல்லுவாரே!'' என்று மந்திரியைப் பார்த்தவாறே கூறினாள்.

மந்திரிக்கு அவள் தம்மைப் பழிவாங்கவே இப்படிக் கூறுகிறாள் என்பது புரிந்துவிட்டது. ஆனாலும் அவையில் தாம் ஓர் ஆண் மகன் அல்லவா என்று அவள் கேட்டுவிட்டதாலும், மன்னர் அவள் அழகில் மயங்கிக் கிடப்பதாலும் தம்மைக் காப்பாற்ற மாட்டார் என்பதை உணர்ந்து, தாமே முன்வந்து, புலியுடன் போரிட ஒப்புக்கொண்டார்.

அமைச்சர் களத்தில் இறங்கிய சில நொடிப் போதுகளிலேயே புலி, அவரை நார் நாராகக் கிழித்துப் போட்டுவிட்டது. அவர் புலியோடு போராடி, துடிதுடித்துச் சாவதைப் பார்த்துக் கலகலவென்று கைகொட்டிச் சிரித்தாள் அந்தப் பேரழகி.

அறிவாற்றல் நிறைந்த மந்திரியை இழந்துவிட்டதில் மன்னனுக்குப் பெரிதும் வருத்தம். ''என்ன இருந்தாலும் நீ மந்திரி புலியுடன் போரிடவேண்டுமென்று ஆசைப்பட்டிருக்கக் கூடாது. அவர் மரணம் தேசத்துக்குப் பெரிய இழப்பு'' என்று கூறி வருந்தினான் மன்னன்.

''நான் என்ன, மந்திரி சாக வேண்டுமென்றா ஆசைப்பட்டேன்? புத்தி சாதுர்யத்தால் அவர் புலியை வென்றிருக்கக் கூடாதா? ஒன்றுக்கும் உபயோகமற்றவருக்குப்போய் இத்தனை வருத்தப்படுகிறீர்களே!'' என்று சினத்துடன் முகத்தைச் சுளித்துக் கொண்டு எழுந்து சென்றுவிட்டாள் அவள்.

அவளை எதிர்த்து எந்த அபிப்பிராயமும் சொல்ல அரண்மனையில் உள்ள அனைவரும் அஞ்சினர். மந்திரிக்கு நேர்ந்த கதியே தங்களுக்கும் நேரும் என்று அனைவருக்கும் புரிந்திருந்தது. மன்னனின் மயக்கம் இன்னும் தீர்ந்தபாடில்லை. அந்த அழகியைச் சந்தோஷப்படுத்துவதிலேயே இன்னும் குறியாக இருந்தான்.

ஒரு நாள் அந்த அழகியை அழைத்துக் கொண்டு, மலைமீது அமைந்திருந்த மலர் வனம் சென்று உல்லாசமாகப் பொழுது போக்கினான், மன்னன். அங்கே ஓர் உயரமான பாறை மீது ஒரு பெரிய மேடை அமைந்திருந்தது. அந்த மேடை எதற்காக என்று வினவினாள் அந்தப் பேரழகி. ''ஆபத்துக் காலத்தில் அந்த மேடை மீது ஏறிச் சென்று பெருந் தீ மூட்டப்படும். நாலு புறமும் சுற்றியுள்ள சிற்றரசர்களுக்கு அது ஓர் அடையாளம். மன்னர் உதவிக்கு அழைக்கிறார் என்பதைப் புரிந்துகொண்டு அவர்கள் பெரும் படை திரட்டிக்கொண்டு வருவார்கள்'' என்று விளக்கினான் மன்னன்.

''எங்கே, இப்போது அதில் பெரும் தீ மூட்டச் செய்யுங்களேன், பார்க்கலாம்'' என்றாள் அவள்.

''அதில் விளையாடக்கூடாது பெண்ணே! ஆபத்துக் காலங்களில் மட்டுமே அப்படிச் செய்ய வேண்டும்'' என்றான் அரசன்.

அழகிக்கு முகம் சுண்டிப் போயிற்று. ''இதெல்லாம் வீண் பேச்சு. உங்களுக்கு விருப்பமில்லை என்று சொல்லுங்கள். கூட்டமாகப் பெரும் படைகளும், குதிரைகளும் ரதங்களும் ஓடிவருவதைப் பார்க்க வேண்டுமென்று எனக்கு ஆசையாயிருக்கிறது. ஆபத்துக் காலத்தில்தான் வர வேண்டுமென்று என்ன இருக்கிறது? அரசர், போரில் சாகத்தான் அவர்களை அழைக்க வேண்டுமா? ஒரு பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்வது. பெருந் தீயைப் பார்த்து விட்டுப் போர் மூண்டுவிட்டது என்று ஓடி வருகிறவர்கள், விருந்து உண்டு மகிழ்ச்சியுடன் திரும்பட்டுமே!'' என்றாள் அவள்.

மன்னனும் எப்படியாவது அவள் முகத்தில் புன்னகை மலரச் செய்தால் போதுமென்று நினைத்து, அந்த மாலைப்போதில் பணியாளர்களை அழைத்துப் பாறை உச்சியில் எண்ணெய்க் கொப்பரைகளை ஏற்றி, பழைய துணிகளை எண்ணெயில் நனைத்துத் தீ மூட்டப் பணித்தான். பெருந்தீ மூண்டது. நாற்புறத்துச் சிற்றரசர்களும் அன்றிரவே பெரும் படைகளைத் திரட்டிக்கொண்டு வந்துவிட்டனர்.

அதிகாலையில் சிற்றரசர்களின் படைகள் கோட்டை முன் அணிவகுத்து நின்றன. மன்னன், பேரழகியை அழைத்துக்கொண்டு உதவிக்கு வந்த சிற்றரசர்களின் முன் தோன்றினான். எதிரிகள் யார், போர் எந்த இடத்தில் நடைபெறப்போகிறது என்பதை அறிய அவர்கள் துடித்து நின்றது அந்த அழகிக்கு வேடிக்கையாக இருந்தது. அவள் அவர்களைப் பார்த்துக் கலகலவென்று நகைத்தாள். சிற்றரசர்கள் தங்களுக்குள் ஒருவரையொருவர் நோக்கிக்கொண்டனர். தங்களைச் சிறுமைப்படுத்துவதுபோல் அந்தப் பெண் சிரிப்பதைக் கண்டு அனைவர் முகத்திலும் சினம் படர்ந்தது.

அவர்கள் மன்னனை நோக்கி, ''பிரபு, இது என்ன? தலைநகரைப் பெரும் அபாயம் சூழ்ந்திருக்கிறது என்பதுபோல், போர்க்கால நெருப்பை மூட்டி எங்களை அழைத்துவிட்டு ஒன்றும் சொல்லாமலிருக்கிறீர்கள். இந்தப் பெண் ஏளனமாகச் சிரிக்கிறாளே!'' என்று வினவினர்.

மன்னன் அவர்களுக்கு என்ன பதில் சொல்வதென்று யோசித்துக் கொண்டிருந்தான். அந்த அழகியின் சிரிப்பை அடக்கவும் அவனுக்கு வழி புலப்படவில்லை. அதற்குள் அவளே சிற்றரசர்களை நோக்கிப் பேசினாள்.

''அபாயம் வந்தால்தான் நீங்களெல்லாம் படை திரட்டி வரவேண்டுமா? இங்கே பெரிய விருந்து நடக்கப் போகிறது. அனைவரும் உண்டு மகிழுங்கள். பிறகு எதிரிகளைத் தேடிச் சென்று போர் தொடுத்து வெற்றிவாகை சூடுங்கள். அபாயமே எப்போதும் ஏற்படாமலிருக்க இதுதான் சிறந்த உபாயம்'' என்று குரலில் ஏளனம் பொங்கச் சொல்லி, கலகலவென நகைத்தாள்.

அந்தச் சிற்றரசர்கள் அவமானத்தால் குன்றிப் போனவர்களாய், பதிலேதும் பேசாமல் திரும்பிச் சென்றனர்.

மன்னன் இந்த நிகழ்ச்சிக்காக உண்மையிலேயே மனம் வருந்தினான். ஆனால், காதலியின் கனிந்த சிரிப்பிலே மனம் மயங்கியவனாய், இந்தச் சம்பவத்தையே மறந்துவிட்டு, மலர்வனங்களில் கொடிப் பந்தலின் கீழே அவள் மடிமீது தலைசாய்த்துச் சயனிப்பதிலும், உபவனத்து நீரோடைகளிலே அன்னப் பட்சிகளோடு அன்னப்பட்சியாக மிதக்கும் அழகிய படகினிலே அவளோடு அமர்ந்து உல்லாச உலா வருவதிலுமாக ஈடுபட்டு நாட்களைக் கடத்திக்கொண்டிருந்தான். தேசத்தின் வளர்ச்சிப் பணிகளெல்லாம் தேங்கிப் போயின. படைப்பலம் பெருக்கப்படவேயில்லை. மக்கள் வாழ்க்கையிலே நீதி நெறிகளெல்லாம் குலைந்துபோய்க் கிடந்தன.

திடீரென்று ஒரு நாள், எல்லைப்புறங்களிலிருந்த முரட்டு ஜாதியார் சிலர் ஒன்று திரண்டு, கொள்ளைக்காரர்களாகத் திரிந்த ஒரு கூட்டத்தின் தலைவனோடு சேர்ந்து கொண்டு, 'யூ' மன்னனின் தலைநகருக்குப் படையெடுத்து வந்து முற்றுகையிட்டுப் போர் தொடுத்தனர்.

'யூ' மன்னன், அந்தப் படையை எதிர்த்துப் போரிட முடியாமல் திணறினான். பாறை உச்சியில் போர்க்காலத் தீ மூட்டிச் சிற்றரசர்களை உதவிக்கு அழைத்தான். ஆனால் ஏற்கனவே அழகியின் சிரிப்பால் அவமானப்பட்டுப் போயிருந்த அவர்கள் உதவிக்கு வராமல் இருந்து விட்டனர்.

எதிரிகள், 'யூ' மன்னனின் அரண்மனையைக் கைப்பற்றிவிட்டனர். இருந்த பொருள்களைக் கொள்ளையடித்தனர். 'யூ' மன்னன் மட்டும் அமைச்சர்களின் துணிகர முயற்சியினால், தப்பிச் சென்று தலைமறைவானான். அழகி எதிரிகளிடம் சிக்கிக்கொண்டாள். அவளைத் தலைவன் முன் பிடித்து இழுத்து வந்தனர். அவள் சிறிதும் தயங்காமல் அந்தத் தலைவனிடம் இச்சகம் பேசி, ''ஓடிப் போன மன்னனை நான் காட்டிக் கொடுக்கிறேன்; என்னை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடு'' என்று மன்றாடினாள்.

அப்படியே காட்டிக் கொடுக்கவும் செய்தாள். மறைந்திருந்த 'யூ' மன்னனைப் பிடித்து, இழுத்து வந்து கொலைக்களத்துக்குக் கொண்டுசென்றார்கள். அப்படி அவனைக் காட்டிக் கொடுத்துவிட்டதாலேயே அந்த அழகி தப்பித்துவிடவும் இயலவில்லை. தலைவன், அவள் கூந்தலை மழித்து, அடிமைகளோடு அடிமையாய் அடைத்துவைக்க உத்தரவிட்டு விட்டான்.

ஓர் அழகியின் சிரிப்பினால், ஒரு சாம்ராஜ்யம் இத்தனை அல்லல்களுக்கு உள்ளாயிற்று ❋

---

இந்தச் சம்பவத்தையும் இவள் வரலாற்றையும் ஒரு சீன நாடோடிப் பாடல் வர்ணிப்பதாக, 'சீனாவின் வரலாறு' நூலில் அறிஞர் வே. சாமிநாத சர்மா குறிப்பிடுகிறார்.

‘ஓவியத்தில் உவமை’ என்ற தொடரில், ‘கலைமகள்’ ஏப்ரல், 1946-இதழில் வெளிவந்த சித்திரங்கள் இவை.





# புருவவில்

“வில்லினை யொத்த புருவம்
வளைத்தனை வேலவா—அங்கோர்
வெற்பு நொறுங்கிப் பொடிப்பொடி
ஆனது வேலவா”

என்று பாரதியார் பாடினார். கைவில்லை வளைப்பதற்குமுன் வேலவன் புருவவில்லை வளைத்த அளவிலே கிரவுஞ்சமலை பொடிப் பொடியாகிவிட்டதாம். இரண்டு புருவங்களும் அவற்றின் இடையே மூக்குக்கு மேல் உள்ள பகுதியும், வில்லின் இரண்டு பகுதிகளும், கைபிடிக்கும் இடமும் போல விளங்குகின்றன. பெண்ணின் புருவங்களுக்கும் வில்லை உவமை கூறுவது இயல்பு. ஒவ்வொரு புருவத்துக்கும் ஒவ்வொரு வில்லை ஒப்பாகச் சொல்வதும் உண்டு.





## விழிகள்

காதலர் உள்ளத்தே காமனம்பு பாய்வதற்குக் காரணமாக இருப்பது காதலியர் கண் அம்பு.



அது அவனுக்கு இன்பம் பயக்கும்போது மென்மையும் அழகும் செறிந்த தாமரைப் பூவைப் போல விளங்குகிறது.



பரந்த கண்ணும் அதனிடையே உள்ள விழியும் புலவர்களுக்கு வகிர்ந்த மாவடுவை நினைப்பூட்டின.



நீல நிறம் பூத்த விழிகளும் இதழும் கருங்குவளையின் அழகைக் கொள்ளைகொண்டு விளங்குபவை போலத் தோற்றின.



இமையின் கீழ் ஒளிரும் கருவிழியைக் கண்டு ''இது வண்டுதானோ?'' என்று ஐயுறும் காதலர்களும் உண்டு.










நீல நிறக் காக்கணம் பூவைக் கண்ணுக்கு உபமானமாகச் சொல்லுவது புலவர்களின் சம்பிரதாயம்.

மதுரையிலுள்ள அம்பிகைக்கு மீனாக்ஷி என்று வடமொழியிலும் அங்கயற்கண் அம்மையென்று தமிழிலும் திருநாமம் வழங்கும். மீனைப் போன்ற கண்ணையுடையவள் என்பது அத்தொடரின் பொருள். நீண்டு பிறழும் இயல்புடைமையால் கண்ணுக்குக் கயல்மீனை உவமை கூறுவர்.

சலனத்தையும் மென்மையையும் உடையது மானின் கண். பெண்களின் இயற்கை மானினது இயற்கையோடு பல வகையில் ஒப்புமை உடையது. அவர்கள் கண் மான் கண்ணைப் போல ஒளிர்வது.

ஓவியம்: எஸ். ராஜம்



# குமுக்கி யானை

மைசூரில் காட்டு யானைகளைப் பழக்குகிறார்கள். யானைகளுக்கு என்னதான் வலிமை இருந்தாலும் அவற்றை எளிதில் பழக்கிவிடலாம்; அப்புறம் அவை மிகவும் பொறுமையோடும் நன்றியோடும் உழைக்கும்.

ஹிந்துஸ்தானியில் 'கெட்டா' என்று வழங்கும் குழியில் சிக்க வைத்து இந்தமாதிரி யானைகளைப் பிடிப்பது வழக்கம். அடிக்கடி யானைகள் நடமாடும் வழியில் 8 அல்லது 10 ஏக்கர்ப் பரப்பில் சுமார் 10 அடி அகலமும் 8 அடி ஆழமுங் கொண்ட V போன்ற வடிவுள்ள குழிகளைத் தோண்டி வைப்பார்கள். முக்கியமான இடங்களில் மேல்பாகத்தில் இவற்றைச் சிறைப் பிடிக்கக் சுதவுகள் அமைத்





திருப்பார்கள். இந்தமாதிரி குழிகளை மூங்கில் காடுகளில்தான் பொதுவாகத் தோண்டுவார்கள். அங்கேதான் யானைகளைப் பிடிக்க வசதியாக இருக்கும்.

பிறகு குறிப்பிட்ட ஒரு நாளில் காட்டு யானைகளைத் துரத்தி அடைப்புக்குள் விரட்டுவதற்காகக் 'குமுக்கி' என்ற பழக்கிய யானைகளுடன் ஆட்கள் அக்கம் பக்கம் காட்டில் நுழைவார்கள். வேலி போட்டிருக்கும் அடைப்பை நோக்கி யானைகள் வரும்படி விரட்டத் தொடங்குவார்கள்.

பழக்கிய யானைகளை அடைப்பின் இரு பகுதியும் சேரும் இடத்தில் வரிசையாக நிறுத்தி வைத்திருப்பார்கள். அடைப்புக்கு அருகில் ஆட்களும் வரிசையாக நின்று

கொள்வார்கள். செத்தையும் சருகும் தகதகவென்று எரியும் சமயம், 'தடாம் புடாம்' என்று கண்டதையும் தட்டி ஆர்ப்பாட்டம் செய்வார்கள். இவைகளை யெல்லாம் கண்டும் கேட்டும் யானைகள் மருண்டுவிடும்; மெல்ல அந்தக் காட்டு யானை மந்தையைத் திறந்திருக்கும் வாசல் கதவுப் பக்கமாகப் போகும் பாதையில் செலுத்துவார்கள்.

ஒவ்வொரு மந்தைக்கும் ஒரு யானை தலைமை வகிக்கும். மற்றவை அந்த யானையைப் பின் தொடர்ந்து செல்லும். எல்லா யானைகளும் வாசல் வழியாக அடைப்புக்குள் நுழைந்ததும், கதவை (மேல்பாகத்திலிருந்து கீழே இறக்கி) இறுக மூடிவிடுவார்கள். அடைப்பைச் சுற்றி இரவெல்லாம் தீ மூட்டிக்கொண்டே யிருப்பார்கள்.





பிறகு ஒரு நாள் அவற்றைக் கயிற்றால் பிணைக்க ஏற்பாடு செய்வார்கள். இதற்கென்று அமைத்ததுதான் உள்அடைப்பு. இந்த உள் அடைப்பில் காட்டு யானைகள் புகவேண்டிக் கப்பும் கிளையுமாக நிறைத்துக் காடுபோல் தோன்றும்படி செய்வார்கள். முன் போலவே யானை மந்தைகளை விரட்ட ஆட்கள் கூடுவார்கள்; ஆனால் இப்போது அத்தனை ஆட்கள் தேவையில்லை. சில பேர் மட்டும் 'குமுக்கி' என்ற பழக்கிய யானைகளோடு 'கெட்டா' என்ற குழிகள் இருக்கும் பகுதியில் நுழைந்து, காட்டு யானைகளை வட்டமான இந்த உள்அடைப்புக்குள் விரட்டுவார்கள்.

காட்டு யானைகளும் அவற்றுக்குப் பின்னால் 'குமுக்கி' யானைகளும் இந்த அடைப்புக்குள் நுழைந்ததும் (மேலிருந்து கதவைக் கீழே விட்டு) வாசல் வழியை மூடிவிடுவார்கள்.

காட்டு யானைகளைக் கட்ட 4 அங்குல கனத்துக்குச் சணலில் உறுதியாகக் கயிறு தயாரித்து வைத்திருப்பார்கள். பாகர்களை மேலே சுமந்தபடி குமுக்கி யானைகள் உள்ளே சுற்றி வந்து மெல்ல இரண்டொரு காட்டு யானைகளை உள்வேலி ஓரம் தள்ளிக்கொண்டு போகும்; பிறகு பக்கத்தில் சில 'குமுக்கி' யானைகள் நின்றுகொண்டு இந்தக் காட்டு





அப்புறம் யானைகளை வெளியே அழைத்து வருவார்கள். பின்னுல் தூண்களோடு சேர்த்துக் கட்டி யிருக்கும் கயிற்றை அவிழ்த்து, கூடவே வரும் 'குமுக்கி' யானை யின் வயிற்றில் கட்டி, அதுவும் கட் டுண்ட காட்டு யானையும் இடி படாமல் தாராளமாக நடப்பதற்கு வசதியாகக் கயிற்றைத் தளர்த்தி விடுவார்கள். இவை எல்லாம் முடிந்ததும் அடைப்பின் வாசல் கதவை பழகிய ஆண் யானை தூக்கி நிறுத்தியதும் பிடிபட்ட யானைகள் சிறிது சிறிதாக நகர்ந்து அடைப்புக் குள்ளிருந்து வெளியேறும். அருகி லுள்ள ஆற்றுக்கு அழைத்துப் போய் நீர் காட்டுவார்கள்.

யானைகளை நெருக்கும். எந்தப் பக்கமும் நகரக்கூடக் காட்டு யானைகளால் முடியாது.

இப்படிப்பட்ட சமயம் பார்த்துக் கயிறு கட்டுவதில் தேர்ந்த ஆள் இந்தக் காட்டு யானைகளின் பின் னங்கால்களைக் கயிற்றுல் கட்டி விடுவான்; யானை திமிறிக் கொண்டு தப்பப் பார்க்கும்போது துதிக்கையைத் தூக்கும். சுருக் குடன் தயாராக இருக்கும் பாகன் சுருக்கைத் துதிக்கையில் விட்டுக் கப்பென்று கயிற்றை இழுப்பான். யானை சற்று முரடாக இருந் தால் கழுத்தில் பின்னும் இரண்டு மூன்று கயிறுகளைப் போட் டுக் கட்டி வழிக்குக் கொண்டு வரு வார்கள். முன்னங் கால்களிலும் கயிறு கட்டி விடுவார்கள்.





பெரிய மரங்கள்மட்டும் இருக்கும் பரந்த இடமாகப் பார்த்து அழைத் துப் போவார்கள். பிடிபட்ட யானைகளின் பின்னங் கால்களை மரத்தோடு மரமாகச் சேர்த்துக் கட்டிவிடுவார்கள். தப்பிக்கச் செய்யும் முயற்சியெல்லாம் வீண் என்று தெரிந்ததும் அவை அடங்கி ஒடுங்கிப் பாகர்கள் இட்ட கட்ட ளைக்கு அடிபணியும்.

[திரு என். ராமகிருஷ்ணு நீண்ட நாளைய கலைமகள் அன்பர். கலைமகள், மஞ்சரி, கண்ணன் ஆகிய மூன்று ட்த்திரிகைகளிலும் படக் கட்டுரைகள் பல எழுதியிருக்கிருர். 1957-இல் படத்துடன் எழுதிய அவருடைய கட்டுரையை இப் போது மகிழ்ச்சியுடன் வெளியிட் டிருக்கிறோம். -ஆர்.]

# சிற்றில் நற்றூண்

## டாக்டர் ஔவை நடராசன்

கண்ணைக் கவரும் வண்ணக் கலவைகளை அளவறிந்து ஓவியன் சேர்த்த பின்னர் கண்ணையும் கருத்தையும் கவர்கின்ற பேராற்றலை அவ்வோவியம் பெற்றுவிடுகிறது. புலவர் பெருமக்கள் முறையறிந்து தொடுத்து வைக்கும் சொற்களும் அப்படியே அன்றன்றும் புதுமையாய்க் கற்போர் சிந்தையைக் கவரும் கலையழகு பெற்ற நிலைவாழ்வு பெறுகின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த சங்ககாலப் பெரும் புலமைச் செல்வியரான காவற்பெண்டு என்பவர் 'சிற்றில் நற்றூண்' என்ற இரு தொடர்களை ஒருங்கிணைத்து வைத்தார். அத்தொடர் இன்றும் நம் சிந்தனைக்குப் பெருவிருந்தாய்த் திகழ்கின்றது.

வீடோ சிறய வீடு. அந்த வீட்டுக்கு ஒரு நல்ல தூண் எதற்கு? வீட்டைச் சிறியதாகக் கட்டித் தூணை அழகாக வைத்திருந்ததாகக் கூறலாம்: ஆனால் ஒன்றை மறந்துவிடலாகாது. வீடு அளவானது; தேவைக்குப் போதியது; சிறிய வீடு. இப்படிப்பட்ட பற்றாக்குறை வீட்டுக்குத் தூண் மட்டும் நல்லதாக இருந்தது என்பது பொருந்துமா? இல்லை, இல்லை. அக்குடும்பம் மிகச் சிறிய குடும்பம். அங்கே பெரிய வீடு தேவையில்லை. எனவே வீடு சிறியதாக அமைந்தது: ஆனால் வேலைப்பாடு மிக்கது என்று கொள்ளலாகாதோ எனில், வேலைப்பாடு அமைந்த ஒரு வீட்டை அழகிய இல்லம் உயர்ந்த இல்லம், சிறந்த இல்லம், வளமனை என்பன போல அடைமொழி வழங்குவதே அன்றிச் சிறுமை தோன்றுமாறு சிற்றில் என்று அழைக்கத் தேவையில்லையே!

நல்ல தூணை உடைய பெரிய வீட்டை அடக்கமாகச் சிற்றில் என்று கூறினாள் என்பதைவிடச் சின்னஞ் சிறிய வீட்டில் இருக்கும் நிலைத் தூணை நல்ல தூண் என்று மனநிறைவோடு கூறினாள் என்பதே பொருந்தும்; சிறப்புமாகும். சிறுமை என்ற அடைமொழி வீட்டுக்கும், நன்மை என்ற அடைமொழி தூணுக்கும் அமைந்திருப்பதனால் இது விளங்கும். அந்தச் சிறு வீட்டில் வாழ்கின்ற மாதரசியின் அன்றாட வாழ்க்கையை நோக்கினால் இவ்வுண்மை நன்கு புலனாகும்.

ஒரு நாள் அந்தச் சிறு வீட்டுக்கு அடுத்த வீட்டுப் பெண் வந்தாள். அவளுக்கும் ஏதும் அலுவல் இருப்பதாகத் தெரியவில்லை. பொழுது போக்க வந்தவளைப் போலவே காணப்பட்டாள். அவளுக்குச் சற்றே அமர்ந்து ஓய்வு கொள்வது நல்லதெனத் தோன்றியது. ஆனால் அந்தச் சிறு வீட்டிலே அமர்வதற்கான திண்ணை இல்லை. திண்ணையே இல்லை என்ற பிறகு இருக்கை ஏதும் அங்கே எதிர்பார்ப்பதற்கில்லை. வந்த பெண்ணுக்கோ களைப்பு. ஒருவேளை உணவு கொண்ட களைப்பாகவும் இருக்கலாம். எனவே அந்தச் சிறிய தூணைப் பற்றுக்கோடாக, ஊன்றுகோல் போலப் பற்றிக்கொண்டு நின்றாள். இந்நிலையினையே 'சிற்றில் நற்றூண் பற்றி' என்ற திட்பமும் நுட்பமும் சான்ற அழகிய தொடர் காட்டுகிறது.

இவ்வாறு சிற்றில் நற்றூண் பற்றி நின்ற அந்தப் பெண் அச் சிறுவீட்டுக்குரியவளைப் பார்த்து, ''அம்மா உன் மகன் எங்கே?'' என்று வினவுகிறாள்.

பெற்ற தாயான அவளுக்கே அந்த வீர மகன் எங்கிருப்பான் என்று தெரியாது. ஆனால் ஒன்றுமட்டும் உறுதி. அவன் உறுதியாகப் போர்க்களத்தில்தான் இருக்கவேண்டும். ஏன்? அவனோ அந்த வீரத்தாயின் அருமந்த மகனல்லவா? போர்க்களத்தில் தன் மகனது மார்பிலே வேல் பாய்ந்தது என்பதை அறிந்து ஈன்ற பொழுதினும் பெரிதும் மகிழ்ந்த தாயர்கள் அல்லவா அன்று வாழ்ந்தவர்கள்? ஆகவேதான் அந்தத் தாய் துணிந்து கூறினாள், ''என் மகன் தோன்றுவன் மாதோ, போர்க்களத்தானே'' என்று.

போர்முரசம் காற்று வீசுவதால் ஒலி எழுப்பினாலும் தோள் கொட்டுகின்ற பதற்றமான நிலையில் நாட்டைக் காக்கப் போருக்குப் புறப்பட்ட வீரமகன் வீட்டுக்கு வந்தானோ இல்லையோ, தெரியவில்லை. என்றோ ஒரு நாள் அவனோடு அளவளாவிய அந்தத் தாய், ''மகனே, உனக்கு வீடு. குடும்பம் என்ற கவலை இல்லையா? நாடு நாடு என்று திரிகின்றாயே! உன்னுடைய வீட்டைப் பார்க்க வேண்டாமா? உன்னைப் பெற்று வளர்த்தேனே; எனக்கு ஒரு பட்டுப் புடைவை உண்டா? வயிறார நல்ல உணவாவது உண்டா?'' என்று இப்படி எல்லாம் இயல்பாகக் கேட்டதாகப் புலவருக்குத் தெரியவில்லை.

அவள் பட்டும் பணியும் விரும்பவில்லை; பாலும் சோறும் வேண்வில்லை பழைய சோறு பற்றிக் கூட அவள் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. 'அவள் அவற்றைப் பற்றியெல்லாம் எண்ணவே இல்லை. 'இப்படி ஒரு வீரமகனைப் பெற்றேனே! என்ற பெருமிதமே அவளது பேச்சில் மிளிர்கின்றது. இப்பேச்சிடையே அவளுடைய எளிய வாழ்வும் புலப்படுகின்றது. அந்த வீரமகனைப் பெற்ற வயிறு, வெறும் வயிறெனவே தெரிகிறது. வீடும் சிறிய வீடுதான். ஆனால்

அவளோ அதுபற்றிக் குறையாக எண்ணவில்லை. நாட்டுக்கு உழைக்கும் வீரமகனைப் பெற்ற பெருமிதமே மேலோங்கி நிற்கிறது. ''ஈன்ற வயிறோ இதுவே'' என்று தன் பெருமிதத்தைப் புலப்படுத்துகிறாள்.

அவளுக்கு வேறு மாடமாளிகை வேண்டாம். பட்டும் பணியும் வேண்டாம். இப்படிப்பட்ட வீரமகனுக்குத் தாய் என்ற பெருமையே போதும்.

என்றோ ஒரு நாள் குகையில் ஒரு புலி பதுங்கி இருந்தது. அதற்குப் பிறகு அது அங்கே தங்குவதற்கு வரவில்லை. என்றாலும் ஒவ்வொருவரும் அந்தக் குகையைக் காணும் போதெல்லாம் புலி இருப்பதுபோன்ற மதிப்பையே தருகின்றார்கள். அதுபோல அந்த வீரத்தாயும் வீரமகனைப் பெற்ற ஒரே காரணத்தால் பெருமிதம் பெறுகிறாள்; மனநிறைவு கொள்கிறாள். இப்பெருண்மையினைப் 'புலி சேர்ந்து போகிய கல்அளைபோல ஈன்ற வயிறோ இதுவே' என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

குடியைத் தாங்கும் தூணாக விளங்க வேண்டியவன் அவன். அக்கடமையில் மட்டுமே அவன் கருத்தாக இருந்திருந்தால் கற்றூண் அமைந்த மாடங்களை எழுப்பியிருக்க முடியும். சின்னஞ்சிறு குடிலில் வாழ்கின்ற நிலை நேர்ந்திருக்காது. ஆனால் அவன் மறந்துவிட்டான். அவனது குடும்பக் கடமையின் அளவுக்கு ஓர் எடுத்துக்காட்டுத்தான் அந்தச் சின்னஞ்சிறிய தூண். அவன் கடமையை மறந்து சோம்பித் திரிபவனாக இல்லை. அப்படியிருந்தால் அவனுடைய தாய் அவனைப்பற்றிக் குறை கூறி இருப்பாள். அவள் மகனைப்பற்றிப் பெருமிதத்துடனேதான் கூறுகிறாள்.

நாட்டுக்காகப் போர்க்களத்தில் நிற்கின்ற ஓர் பொதுநலத் தொண்டன் அவன். அப் பொதுநலப் பண்பும் அவன் பிறந்து வளர்ந்தபின் பெற்றதன்று. அது அவன் தாயின் மனத்திண்மை. அந்தச் செம்மையே, சிறிய வீட்டில் இருக்கின்றோம் என்ற எண்ணம் இன்றி அதையே



பெரிதெனக் கருதுகின்ற பெருந்தன்மையாக மிளிர்கிறது. அதன் விளைவே அந்தச் சிறிய வீட்டில் திகழ்கின்ற தூணை நற்றூண் என்று போற்றும் பெருந்தன்மை. வீட்டு நன்மையை இரண்டாவதாக வைத்து, நாட்டு நலத்தினையே முதன்மையாகக் கருதுகின்ற இந்த மனப்பான்மையே வையக வாழ்வினை உயர்த்த வல்லது. அப்போக்கே சங்க காலத்தினைத் தமிழகத்தின் பொற்காலமாக விளங்கச் செய்தது.

ஆயிரக் கணக்கில் ஆண்டுகள் உருண்டோடிய பிறகு, வாழ்க்கை முறையில் பல்வேறு மாறுபாடுகள் தோன்றியுள்ளன. ஆனால் தெளிந்த சான்றோர் ஆய்ந்து கண்ட அடிப்படை உண்மைகள் மாறுவனவல்ல. உணவு வகைகளிலே உண்ணும் முறைகளிலே மாற்றம் காணப்படுகிறமே தவிர, உண்பதிலே மாற்றம் இல்லை. உடை வகைகளிலே மாற்றம் காணப்படலாமே அன்றி, உடையே வேண்டாம் என்று மாற்ற முடியாதல்லவா? அவ்வாறே, 'தோன்றுவன் மாதோ போர்க்களந்தானே' என்ற வரியினைக் கொண்டு இன்று அனைவரும் களத்தில் போரிட வேண்டிய இன்றியமையாமையும் இல்லை. அறிவியல் வளர்ச்சியால் உலகம் ஒரு குலமாகிவிட்ட இந்த நாளில் ஆக்கம் ஒன்றே பெருகவேண்டும். அறிஞர் மு. வ. கூறியதுபோல, 'நட்பால் எதிர்ப்பின்மை, அன்பால் தற்காப்பின்மை, அறிவால் அழிவின்மை' என்ற அரண் தேடிக்கொண்டு வாழவேண்டிய நிலையில் நாம் இருக்கின்றோம்.

எனவே அவ்வீரத் திருமகன் போர்க்களத்திலேயே காணப்பட்டான் என்பதை உணர்ந்த அடிப்படைக் காரணத்தை உளங்கொண்டு இன்றைய சூழலுக்கேற்பத் தொண்டாற்றுவதே நமது கடமை. வீட்டு நன்மையை, தன்னலத்தை, இரண்டாவதாக வைத்து, நாட்டு நன்மையை, பொதுநலத்தைப் பொதுவாழ்வை, பொதுமக்களுக்கான நல்லறத்தை, முதன்மையாகக் கொண்டு வாழ்கின்ற பண்பட்ட வாழ்க்கையை இப் புறநானூற்றுச் சொல்லோவியத்தில் கலந்து நிற்கும் பேருண்மை. பொதுநல வாழ்வினருக்குத் தன்னலமே ஆகாது என்பதில்லை. தன்னலத்தோடு மட்டுமே நின்று பொதுநலத்தை அறவே புறக்கணிக்கலாகாது என்று கருத வேண்டும். தன்னல நோக்கத்துக்காகவே பொதுநலப் போர்வைகொள்ளும போக்குக்கு மாற்றாகச் 'சிற்றில் நற்றூண்' என்றமைந்துள்ள சொற்றொடர் நம்மைச் சிந்தையில் சிலிர்ப்பூட்டுகின்றது.

பாட்டு முழுவதும் வருமாறு:

சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுளனோ என வினவுதி ஆயின்
புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே,
தோன்றுவன் மாதோ போர்க்களத்
தானே,




# மகாத்மா காந்திக்கு ஜே!

துமிலன்

"சே சே! பி.ஏ." இந்த வார்த்தைகள் பகவதி, பி.ஏ. யின் வாயினின்றுவெளி வந்தன. தான் பெற்றிருந்த சர்வகலாசாலைப் பட்டத்தையே அவன் இகழ்ந்து கூறியதற்குக் காரணம், அன்றைத் தினசரிப் பத்திரிகைகளில், வெளிவந்த விளம்பரங்கள் எதிலும் பி.ஏ., என்ற பட்டமே குறிப்பிடப் படாததுதான். பி.ஈ., பி.காம். முதலிய பட்டதாரிகள்தாம் வேலைகளுக்கு மனுச் செய்து கொள்ளும்படி கோரப் பட்டிருந்தனர்.

அவன் கோபமாகக் கீழே விசிறிப் போட்டிருந்த பத்திரிகையின் மேற்பக்கமிருந்த ஒரு விளம்பரம் அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது.

"நீங்களே ரேடியோ தயாரிக்கலாம்' என்ற எங்கள் புத்தகத்தைப் படித்து ரேடியோத் தொழில் நிபுணராகுங்கள்." இதுதான் அந்த விளம்பரம். பகவதி அந்த விளம்பரத்தைப் படித்த மாத்திரத்தில் தான் ரேடியோ தயாரிப்பதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்று தீர்மானித்துவிட்டான்.

ரேடியோ சம்பந்தப்பட்ட விளம்பரம் அவனை அந்தக் கருவியைப்பற்றித் தெரிந்து கொள்ளத் தூண்டிற்று. அன்றே அவன் புத்தகக் கடைகளுக்குப் போய் 'ரேடியோ தயாரிப்பு'ச் சம்பந்தப்பட்ட மிக நல்ல புத்தகங்கள் சிலவற்றை வாங்கினான். அவை போதாவென்று வாசகசாலைகளுக்குச் சென்று சில புத்தகங்களை எடுத்து வந்தான்.

அவன் அவற்றையெல்லாம் இரண்டே நாட்களில் படித்து முடித்துவிட்டான். விஞ்ஞானக் கல்விக்கு ஏங்கிப்போயிருந்த அவன் மனம் ரேடியோத் தயாரிப்புப்பற்றிய தகவல்களை அள்ளிப் பருகிற்று. பகவதி இப்போது, ரேடியோத் தயாரிப்புப்பற்றி ஒரு பிரசங்கம் செய்யக்கூடிய புத்தக அறிவு பெற்றிருந்தான்.

வீட்டில் ஒரு டிரான்ஸிஸ்டர் ரேடியோ தான் உபயோகத்தில் இருந்து வந்தது. அவன் சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன் வாங்கிய 'டெலிஃபங்கன்' என்ற வகை. உயர்தர ஜெர்மன் ரேடியோ ஒன்று பழுதடைந்து கிடந்தது. அதை அவன் தந்தை ஓர் உயர்தர நினைவுச் சின்னத்தைப்போல் பத்திரமாய் வைத்திருந்தார்.

பகவதி அதை எடுத்துவந்து தன் மேஜை மீது வைத்துக்கொண்டான். அதை அக்கு வேறு ஆணிவேருகப் பிரித்தான். பிறகு, தான் படித்துப் பெற்ற அறிவை வைத்துக் கொண்டு அதைத் திரும்ப அமைத்துப் பார்த்தான். சரியானபடி அமைத்தும் விட்டான்.

அது ஆறு வால்வுகளும், மூன்று பாண்ட்களும் உள்ள ரேடியோ. அதிலுள்ள ரேடியோ வால்வுகள் சரியாக வேலை செய்யவில்லை. ஃபாண்டுகளும் ஒழுங்காக இயங்கவில்லை.

மௌண்ட் ரோட் பகுதியில் ரிட்சி வீதியிலுள்ள ரேடியோக் கருவிகள் சம்பந்தப்பட்ட சாமான்கள் விற்கும் முப்பது நாற்பது கடைகளிலும் புகுந்து புகுந்துபுறப்பட்டான். கடைசியில் ஆறு வால்வு மூன்று ஃபாண்ட் ரேடியோ அமைப்பதற்கு அவசியமான ஒரு 'ஸெட்' ரேடியோப் பகுதிகளை வாங்கினான்.

தன்னிடமுள்ள டெலிஃபங்கன் ரேடியோவைப் பழுதுபார்ப்பது, அது சரியாக வேலை செய்யாவிட்டால் புதிதாகவே ஒன்று தயாரிப்பது என்பது அவன் திட்டம்.

ரேடியோ செய்வதற்குத் தேவையான ஆயுதங்களின் 'ஸெட்' ஒன்றும் வாங்கிக் கொண்டான். மும்முரமாய் ஈடுபட்டான.

அவன் பழைய டெலிஃபங்கன் ரேடியோவைப் பிரித்து அதன் பல பாகங்களைச் சுத்தம் செய்தான். பிறகு அதைத் திரும்பவும் அமைக்கலானான். பழுதடைந்த பாகங்களுக்குப் பதிலாகப் புதிய பாகங்களைப் பொருத்தினான். ஒருவிதமாகப் பழுது பார்க்கும் வேலை முடிந்துவிட்டது.

அவனிடமிருந்த டிரான்ஸிஸ்டர், மின் சார பாட்டரி கொண்டு இயங்கும் கருவி. அதில் சென்னை நிலையம் கேட்கும்படி முள் விசையைப் பொருத்தியபடி மனத்துக்குள் கடவுளையும் பிரார்த்தித்துக்கொண்டான்.

''எனக்கு ஜீவன் இருக்கிறது'' என்று ரேடியோ தெரிவித்துக் கொள்வதுபோல அதனின்றும் கடபுட, கடபுட என்று சப்தம் வெளிவந்தது.

பகவதி, இந்தக் கடபுடா சப்தத்தைக் கேட்டுப் புளகாங்கிதம் அடைந்தான். முள்ளைத் திருப்பி ரேடியோவை வெவ்வேறு வானொலி நிலையங்களில் வைத்துப் பார்த்தான்.

ஒரு நிலையத்திலிருந்து ரெயில் எஞ்சின் ஊதுவதுபோன்ற சப்தம், மற்றொன்றிலிருந்து சீமை மாடு கத்துவது போன்ற குரல், பிறிதொன்றிலிருந்து காக்கையும் குயிலும் மாறி மாறிப் பாடுவது போன்ற சப்தமும் கேட்டன.

இந்த விநோத சப்தங்களைக் கேட்டுப் பகவதி மனம் குழம்பினான். அவன் இதுவரை மத்திய அலை வரிசை ஒலிபரப்புக்களையே கேட்டு வந்தான். ரேடியோ முள்ளைச் சிற்றலை ஒலிபரப்புள்ள நிலையங்களில் வைத்துப் பார்த்தான். மற்றும் விதம் விதமான சப்தங்கள் தொடர்ச்சியாயில்லாமல் விட்டுவிட்டுக் கேட்டன.

அவன் பெருமூச்சு விட்டான். ஆயினும் ரேடியோ வேலை செய்கிறதே என்ற திருப்தி மட்டும் உள்ளூற இருந்தது. மறுநாள் காலையில் வெளிச்சத்தில் ரேடியோப் பெட்டியைக் கழற்றிப் பரிசோதித்துப் பார்க்கலாமென்று எண்ணினான்.

பிறகு தான் வாங்கி வந்திருந்த ரொட்டியைத் தின்று பாலைக் குடித்தான். அப்போது இரவு மணி பதினொன்று. இந்திய வானொலி நிலையங்கள் எல்லாம் தூங்க ஆரம்பிக்கும் நேரம். பசுபதி அதை மறந்துபோய் மறுபடியும் ரேடியோ முள்ளை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாகத் திருப்பிவைத்து நிகழ்ச்சிகள் கேட்கின்றனவா என்று பரீட்சை பார்க்கலானான்.

அப்போது காற்றடித்து மழை பெய்யத் தொடங்கியது. இடி இலேசாக ஆரம்பித்துச் சில நிமிடங்களில் வலுத்துவிட்டது. ஒரு பெரிய இடி பகவதி வசித்த வீடிருந்த பகுதிக்கு அருகில் விழுந்தது. அந்த இடிச் சப்தத்தைக் கேட்டுப் பகவதி உடல் நடுங்கினான். ஆனால் அவனுக்கு ஓர் அதிசயம் காத்திருந்தது. மக்கர் செய்துகொண்டிருந்த அந்த ரேடியோப் பெட்டியிலிருந்து,

"...... I acknowledge no other God, but the one God of Truth and Right answers."

என்ற ஆங்கில வாக்கியம் கேட்டது. பகவதி ஆச்சரியம் தாங்கமுடியாமல் கண்களை அகல விரித்துக்கொண்டு அந்த வாக்கியத்தைக் கேட்டு முடித்தபோது இரண்டாவது வாக்கியம் தொடர்ந்து ஆரம்பித்தது:

- "Whether the Rama, of my imagination existed or not on the earth, the ancient ideal of Ramraj is undoubtly is one of true democracy in which the meanest citizen could be sure of Justice without an elaborate and costly procedure."

இந்த இரண்டாவது வாக்கியத்தைக் கேட்டு அவன் பிரமை பிடித்தவன்போல் ஆனான். காதுகளை அவனால் நம்பமுடியவில்லை. நாம் கனவு காண்கிறோமா என்றுகூட எண்ணினான். ஆனால் ரேடியோவிலிருந்து தொடர்ந்து கேட்ட வாக்கியங்கள் தெளிவாகக் காதில் விழுந்தன.

இந்தப் பேச்சுச் சில நிமிட நேரம் நீடித்தது. பேச்சின் எல்லா வாக்கியங்களும், முதல் இரண்டு வாக்கியங்களைப் போல் பரமார்த்திக மணமும், அரசியல் மணமும் கமழ்ந்துகொண்டு அர்த்தபுஷ்டியுள்ளவையாய் அமைந்திருந்தன. பேசியவர் கம்பீரமான, இதமான, ஆனால் அழுத்தந்திருத்தமான குரலில் பாவபூர்வமாகவும் பேசினார்.

பேச்சு முடிந்த பிறகு ரேடியோவிலிருந்து சில நிமிடங்கள் வரை இலேசான ஹம்மிங் சப்தமே கேட்டது. வேறு புதிய நிகழ்ச்சி ஏதாவது கேட்குமோ என்று பகவதி ஆவலுடன் எதிர்பார்த்திருந்தான். பழைய பேச்சே திரும்பவும் கேட்டது. பிறகு மூன்றாவதாக ஒரு முறை, அப்புறம் நான்காவதாக ஒருமுறையும் அந்தப் பேச்சே வெளிவந்தது. பகவதி அதுவேதான் திரும்பத் திரும்ப ஒலிபரப்பப்படும் என்று முடிவு கட்டினான்.

அப்போது முள் இருந்த இடத்தை நன்கு கவனித்துக்கொண்டான். அது பற்றிய விவரத்தை ஒரு காகிதத்தில் குறித்தும் வைத்துக்கொண்டான்.

பிறகு முள்ளைச் சிறிது அப்பால் தள்ளிப் பார்த்தான். அந்தப் புது இடத்தில் ஒலிபரப்பு வெளியாகவில்லை. திரும்ப முள்ளைப் பழைய இடத்தில் தள்ளி வைத்தான். பிரசங்கம வெளிவந்தது. மிகவும் இலேசாகக் கேட்கும்படி வைத்துவிட்டுப் படுத்துக்கொண்டான்.

பழுது பார்த்த ரேடியோப் பெட்டி இயங்கிய முறை, அவனைப் பெரிதும் குழம்ப வைத்தது. ரேடியோ ஒலிபரப்பு வது சம்பந்தமான அடிப்படை விஞ்ஞானம் அம்சங்களைப் பற்றி எண்ணிப் பார்த்தான்.

ஒரு ரேடியோ நிலையத்தில் ஒரு மைக்ரோபோன் முன் பேசுபவர் உட்கார்ந்து தமது வாயைத் திறந்து பேசுகிறார். பேச்சு, சப்த அலைகளாக வெளிவருகிறது. சப்த அலைகள் நெடுந்தூரம் செல்லும் சக்தி வாய்ந்தவை அல்ல; எனவே அவை மின் காந்த அலைகளாக மாற்றப்பட்டு வானொலி நிலையத்தின் டிரான்ஸ்மிட்டரால் விண்வெளியில் உந்தப்படுகின்றன.

சப்த அலைகளைத் தம்முள் கொண்டுள்ள மின்காந்த அலைகள் விண்வெளியில் செல்லும்போது நடுவிலுள்ள ரேடியோக் கருவிகளின் ஏரியல் பகுதியால் தடுக்கப்பட்டுப் பெட்டிக்குள் இழுக்கப்படுகின்றன. அந்த மின் காந்த அலைகள் பெட்டிக்குள் பக்குவப்படுத்தப்பட்டு, மறுபடியும் சப்த அலைகளாகத் தனியே பிரிக்கப்பட்டு விடுகின்றன.

அந்தச் சப்த அலைகள் அதிகச் சப்தமுள்ளவையாகச் செய்யப்படும்போது அவை

ரேடியோவில் பேசப்பட்ட பேச்சை அப்படியே பிரதிபலிக்கின்றன.

இப்படி எல்லாம் எண்ணி எண்ணிப் பார்த்த பகவதி, தனது பழைய ரேடியோ விஞ்ஞான விதிகள் எதற்கும் உட்படாமல் திடீரென்று ஒரு பிரசங்கத்தை எப்படி ஒலிபரப்பக்கூடும் என்று எண்ணித் திகைத்தான்.

அந்தப் பேச்சின் சப்த அலைகள் வானில் எங்கேயாவது பரவி இருந்து கொண்டிருந்திருக்குமோ? இடி விழுந்ததனால் அவை பாதிக்கப்பட்டிருக்குமோ? ஏனென்றால் இடி விழுந்த பிறகுதானே அந்தப் பேச்சு ஒலிபரப்பாயிற்று?-இவ்வாறெல்லாம் அவன் யோசனை பண்ணிப் பார்த்தான்.

நடு நடுவில் எழுந்திருந்து ரேடியோவைப் பெரிதாக வைத்தான். முன்போலவே பேச்சு நன்றாகக் கேட்டதில் திருப்தியுற்றான். அவன் இந்தச் சிந்தனைகளிலும், சோதனைகளிலும் ஈடுபட்டு வந்ததில் அவனுக்கு நேரம் போனதே தெரியவில்லை. பொழுது விடிந்திருக்கக் கண்டான்.

மணி எட்டு இருக்கும். தினசரியைப் புரட்டிப் பார்த்ததில் இரவு இடி விழுந்த செய்தி போட்டிருந்தது. அவன் ரேடியோ மறுபடியும் அதே ஆங்கில பேச்சையே ஒலிபரப்பியது. அதைக் கேட்டுக்கொண்டிருந்தபோது கணைப்புச் சப்தம் கேட்டு அறை வாசல் பக்கம் திரும்பிப் பார்த்தான்.



ஒருவர் தம் முகத்தில் தாங்கொணு ஆச்சரியத்துடன் நின்றிருந்தார்.

"இது மகாத்மா காந்தியின் பேச்சல்லவா?" என்றார்.

"என்னது? காந்திஜியின் பேச்சா?" என்று பகவதியும் கேட்டான்.

"ஆமாம். அவர் பிரசங்கங்களை நான் நிறையக் கேட்டிருக்கிறேன். அவர் குரல் எனக்கு அடையாளம் தெரியும். தவிர, இதுபோன்று தார்மிக, அரசியல், சமூக விஷயங்களை ஒன்றுபடுத்தி இதுவரை வேறெந்த மகானும் இவ்வளவு அழகாக எடுத்துக் கூறியதில்லை" என்று கூறினார். பிறகு, "இது எப்படி ஒலிபரப்பாகிறது?" என்று கேட்டார்.

பகவதி அவரை உட்காரச் சொல்லிவிட்டு, 'முதலில் நீங்கள் யார்? சொல்லுங்கள்" என்று விசாரித்தான்.

"நான் உன் தந்தையின் பழைய நண்பன். தாசப்பா என்று பெயர்" என்றார்.

"அப்பா டெல்லிக்குப் போயிருக்கிறார்; வர நாளாகும்."

"சரி; இந்த ஒலிபரப்பைப் பற்றிச் சொல்" என்று தாசப்பா ஆவலுடன் கேட்டார்.

பகவதி, தான் பழைய ரேடியோவைப் பழுது பார்க்க ஆரம்பித்தது முதல் நடந்ததையெல்லாம் விவரமாகக் கூறினான்.

''எனக்குத் தெரிந்து மகாத்மாஜி ஒரே ஒரு ரிகார்டுதான் கொடுத்திருக்கிறார். கொலம்பியாக் கம்பெனி பிளேட் எடுத்தார்கள். அந்தப் பேச்சு முழுதும் அவரது தெய்வ நம்பிக்கை, மத நம்பிக்கை சம்பந்தமானது. இப்போது ஒலிபரப்பப்படும் விஷயம் முற்றும் புதிதாயிருக்கிறது. இது எந்த நிலயத்திலிருந்து ஒலிபரப்பாகிறது?'' என்றார் தாசப்பா.

''எனக்கும் அதுதான் புரியவில்லை?'' என்றான் பகவதி.

''இந்த ஒலிபரப்பு இப்படியே தொடர்ந்து நிகழும் என்று சொல்வதற்கில்லை.''

''ஆமாம்.''

''ஆகையினால் பிரசங்கத்தைக் கேட்டு முதலில் எழுதி வைத்துக்கொண்டுவிடலாம்.''

பகவதி மறுபடியும் பிரசங்கம் ஒலிபரப்பாகச் செய்தான். தாசப்பா தமது பெரிய டயரியில் எழுதிக்கொண்டார்.

''உன்னுடைய தந்தையின் நண்பன் என்ற முறையில் உனக்கு ஒரு யோசனை சொல்கிறேன். இந்தப் பேச்சு நீடிப்பதல்ல. இதை வைத்துக்கொண்டு சட்டுப்புட்டென்று பணம் பண்ணப் பார். இன்று இந்த ஊரில் சர்வ கட்சி மகாநாடு ஒன்று நடைபெறுகிறது. இதற்காக அநேகமாக எல்லாக் கட்சித் தலைவர்களும் வந்திருக்கின்றனர். நான் மகாநாட்டுத் தலைவரிடம் இதைப்பற்றிச் சூசகமாகச் சொல்லிப் பார்க்கிறேன். எதற்கும் நான் மறுபடியும் வரும்வரையில் யாருக்கும் இதைப்பற்றித் தெரிவிக்காதே'' என்றார்.

பகவதி இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக்கொண்டான். அவன் அந்தப் பிரசங்கத்தை டேப் ரிகார்ட் செய்து வைத்துக்கொள்ள வேண்டும் என்று எண்ணினான். அன்று பிற்பகல் டேப் ரிக்கார்ட் செய்யும் கருவியை வாங்கிவரலாமென்று தீர்மானித்தான். ஆனால் அன்று ஞாயிற்றுக்கிழமை, கடை திறந்திராதென்று அப்புறந்தான் ஞாபகம் வந்தது.

அன்று மாலை ஆறு மணிக்குத் தாசப்பா வந்தார்.

''உனக்கு லாபகரமாக இருக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டேன். இந்த டெலிஃபங்கன் ரேடியோவை இரண்டு நாட்களுக்கு எங்கள் உபயோகத்துக்கு விட்டுவிட வேண்டும். அது இங்கேயேதான் இருக்கும். அதற்காக உனக்குக் கொடுக்கப்போகும் பணத்தில் பாதி இந்தா!'' என்று அவர் கூறித் தமது தோற்பையைத் திறந்து அதிலிருந்து 50,000 ரூபாய்க்கான கரன்ஸி நோட்டுக் கட்டுக்களை எடுத்து மேசைமீது வைத்தார்.

பகவதி அந்தப் பணத்தைப் பார்த்து வாயைப் பிளந்தான். நோட்டுக் கட்டுக்களை எடுத்துச் சென்று இரும்பு அலமாரிக்குள் வைத்துப் பூட்டினான்.

''பாக்கிப் பணம் பத்து மணிக்கு மேலே வரும்'' என்று தாசப்பா தெரிவித்துவிட்டு, வெளியில் சென்றார்.

அறைச் சுவரிலிருந்த கடியாரம் மணி பத்து அடித்தது. வாசற் பக்கம் தாசப்பாவும் இன்னொருவரும் வந்தனர். அவர் நிஜாரும்

—பொன்விழா மலர், 1982

ஷெர்வானியும் அணிந்திருந்தார். தலையில் பனிக்குல்லா போன்ற ஒரு கம்பிளிக் குல்லா தரித்திருந்தார்.

தாசப்பா, அவரது பெயரைச் சொல்லாமல் தலைவர் என்று மட்டும் கூறி அவரைப் பகவதிக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். பிறகு ஒலிபரப்பை வைக்கச் சொன்னார்.

தலைவர் அதைக் கேட்டபோது அவர் கண்கள் விரிந்ததைப் பகவதி கவனித்தான். ஒலிபரப்பு முடிந்ததும், அவர் கீழே விழுந்து டெலிஃபங்கனுக்கு நமஸ்கரித்தார். பிறகு அவர் தமது அகிம்சாத் தோற் பையைத் தாசப்பாவினிடம் கொடுத்தார். தாசப்பா அதை எடுத்துக்கொண்டு. பகவதியையும் அழைத்துக்கொண்டு இன்னொர் அறைக்குச் சென்றார். அந்த அறைக் கதவைத் தாழிட்டுக்கொண்டு பையிலிருந்து கரன்ஸி நோட்டுக் கட்டுக்களை வெளியில் எடுத்து வைத்தார். பகவதி நோட்டுக்களைப் பத்திரமாக இரும்பு அலமாரிக்குள் எடுத்து வைத்தான். தாசப்பா தாம் பார்த்த மகாத்மாவைப் பற்றிக் கூறிவந்தார்.

தலைவர் எனப்பட்டவர் தாமும் ரேடியோவும் இருந்த அறையைச் சாத்தித் தாளிட்டுக் கொண்டார். ரேடியோவினிடம் சென்று அதற்குக் கைகூப்பி வணங்கிவிட்டு அதைப் பார்த்துச் சொன்னார்:

"மகாத்மாஜி! மாந்தருள் ஒரு தெய்வமே! தங்களது திருக்குரலையும், திருவாக்கையும் கேட்டுப் பூரிப்படைகிறேன். ஆனால், மகாத்மாஜி! தங்களது போதனைகள் இன்றைய இந்தியாவுக்குப் பொருத்தமானவை அல்ல. அவை நடைமுறையில் பின்பற்றக்கூடியவை அல்ல. தாங்கள் இதுபோன்ற போதனைகளை எழுதியும் இருக்கிறீர்கள். ஆனால், நல்ல வேளையாக உங்கள் எழுத்துக்களை யாரும் இப்போது படிப்பதில்லை. ஆனால், நீங்கள் பேசுவதை யாருக்கும் கேட்கத் தோன்றும், ஒரு விந்தையாக. இந்தப் பிரசங்கத்தைப் பணம் பண்ணுவதே லட்சியமாகக் கொண்டவர்கள் யாராவது கேட்டால், அதை டேப் ரிக்கார்ட் செய்து அதிலிருந்து காஸெட்கள் தயாரித்து விற்க ஆரம்பித்துவிடுவார்கள். தங்களது இந்தப் பிரசங்கத்தைக் கேட்பதன் பயனாகப் பொதுமக்கள் கிளர்ச்சி செய்யக் கூடும். தேசத்தில் அத்தகைய ஆபத்து ஏற்படுவதை நாங்கள் விரும்பவில்லை. ஆகையால் தங்கள் பிரசங்கம் வெளியிடப்படக்கூடாதென்று. தங்களுக்குள் ஓயாமல் சண்டை போட்டுக் கொண்டிருக்கும் பல்வேறு கட்சியினரும் சேர்ந்து தீர்மானித்திருக்கிறார்கள். அவர்களின் பிரதிநிதி என்ற முறையில், தங்களது திருஉபதேசங்கள் இப்போது தேவை இல்லை; எனறைக்குமே தேவை இல்லை என்பதை அனந்த கோடி வணக்கங்களுடன் தெரிவித்துக் கொள்கிறேன். தாங்கள் சொர்க்கலோகத்தில் நிம்மதியாக இருந்து கொண்டிருங்கள் மகாத்மாஜி!"

இந்த வேண்டுகோள் முடிந்ததும் அவர் தம் ஷெர்வானிப் பைக்குள் வலக்கையை விட்டுச் சிறிய இரும்புச் சுத்தியலை எடுத்தார். அதை ரேடியோவுக்கு மேல் உயரப்

பிடித்துக்கொண்டு, ''மகாத்மா காந்திக்கு ஜே! மகாத்மா காந்திக்குஜே!!'' என்று சொன்னார். மறுகணம் ''டமார் டமார்'' என்ற சப்தம் கேட்டது. அவர் ரேடியோவைச் சுத்தியால் அடித்து நொறுக்கிவிட்டார். உடனே சுத்தியைச் சட்டென்று ஷெர்வானிப் பைக்குள் திணித்துக்கொண்டார். பிறகு அறைக் கதவைத் திறந்துவிட்டு, ''தாசப்பா! தாசப்பா! ரேடியோ திடீரென்று வெடித்துவிட்டது'' என்று உரக்கச் சொன்னார்.

அதைக் கேட்டுப் பகவதியும், தாசப்பாவும் விரைந்தோடி வந்தார்கள். பகவதி, ஏதோ விஞ்ஞானக் கோளாறினால் ரேடியோ வெடித்துவிட்டது என்று எண்ணி மனம் வருந்தினான். ஆனால் இரும்பு அலமாரிக்குள் ஒரு லட்சம் ரூபாய் இருக்கிறது என்ற எண்ணம் மனப்புண்ணை ஆற்றியது.

தாசப்பாவும், ஷெர்வானிக்காரரும், அநுதாபம் தெரிவித்துவிட்டு அவனிடம் விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள்.

இந்த விந்தை விஞ்ஞான ஒலிபரப்பின் காந்தியடிகள் பேசியதன் முழு வாசகம் (தமிழில்) வருமாறு:

''சத்திய தேவதையாயும் சன்மார்க்க தேவதையாயும் உள்ள அந்தக் கடவுள்தான் நான் வணங்கும் ஒரே கடவுளாகும்.

''நான் கற்பனை செய்துகொண்டுள்ள அந்த ராமர் உண்மையில் இந்த உலகில் வாழ்ந்திருந்தாரோ இல்லையோ, ராமராஜ்யம் என்ற அந்தப் பண்டைய லட்சியத்தின் அடிப்படையான அம்சங்கள், உண்மையான ஜனநாயகமும், அந்த ஜனநாயகத்தில் ஒவ்வொரு பிரஜைக்கும் நியாயம் உடனுக்குடனே தாமதமின்றி வழங்கப்படுவதுமாகும் என்று நான் நம்புகிறேன்.

''எனது இந்தியாவில் மேல் வகுப்பினர், கீழ் வகுப்பினர் என்ற பாகுபாடு இராது. எல்லா வகுப்பினரும் சகோதரர்களைப் போலப் பழகுவார்கள். அதில் தீண்டாமைக்கோ, சாபக்கேடான மதுபானத்துக்கோ இடமிராது. பெண்கள் ஆண்களுக்குச் சரியான உரிமை பெற்றவர்களாக, சீலம் நிறைந்தவர்களாக இருப்பார்கள்.

''இப்போது என் மனத்தை மிகவும் புண்படுத்திக் கொண்டிருக்கும் விஷயம், நாடு முழுவதும் குண்டர்கள் கட்சி விரைவாகப் பரவிக்கொண்டு வருவதுபற்றித்தான். அதிகாரம், சகிப்புத்தன்மை இல்லாமை, சுயநலம் முதலியவை சேர்ந்து குண்டர்கள் மனப்பான்மையைத் தோற்றுவிக்கின்றன.

''லஞ்சம் வாங்குவதைப்பற்றி நான் கொண்டுள்ள அபிப்பிராயம் எல்லாரும் அறிந்ததே. ஒரு சமயம் கஸ்தூரிபா, என்னைப் பார்க்க வந்த ஒருவர் அன்புடன் கொண்டுவந்து கொடுத்த பழக்கூடையை வாங்கி வைத்துக் கொண்டாள். அதையே நான் லஞ்சம் பெறுவதற்குச் சமமாகும் என்று கண்டித்துக் கூறியவன்.'' ✻





நெல்-கல்-குருணை-உமி நீக்கிச்
சுத்தமான அரிசி சப்ளை செய்யும்
"ரைஸ் மில் பேன் பாக்ஸ் மிஷின்"

நிலக்கடலை உடைத்து உமி உறிஞ்சும்
புது மாதிரி "ஸ்பெஷல் டைப்
நிலக்கடலை உடைப்பு மிஷின்"

தயாரிப்பாளர்கள்:

ESTD: 1969

போன்: 3876 ஆபீஸ். 3126 வீடு.

## G. A. J. நாயுடு & கோ.,

மெஷினரி டீலர்ஸ்

128/19, ராமமூர்த்தி ரோடு, விருதுநகர்-626 001.

---

சர்மரோக நிவாரணி

போன்: 4507

# கணேஷ் ஆயுர்வேதிக் சோப்






கணேஷ் சோப்
இண்டஸ்ட்ரீஸ்
சேலம்-2

Prabu

Estd. 1957 Regd. No. 207058
Phone: 4507 With Extn
Tel: **Ganeshsoap**

இதர தயாரிப்புகள்:

தூய்மையான சலவைக்கு;-

222 கணேஷ் ஸ்பெஷல்
பச்சை பார் சோப்

GSI ராட்டை பார் சோப்

4507 அரை பார் சோப்

*தயாரிப்பாளர்கள்:*

கணேஷ் சோப் இண்டஸ்ட்ரீஸ்
404, மெயின் ரோடு,
சேலம்-636002.

*பூரண விற்பனையாளர்கள்:*

கணேஷ் சோப் ஏஜென்ஸீஸ்
403/C, மெயின் ரோடு,
சேலம்-636002.



# அரங்க மாநகர்

## தி.சே.சௌ.ராஜன்

'எங்கள் ஊர்' என்று சொல்வதற்கு அப்படிப்பட்ட ஊர் இருந்தாலல்லவோ அதைப்பற்றி எழுதலாம்? அப்படியில்லாமல் யாரும் இருப்பார்களா என்று கேட்கலாம். இருக்கக்கூடும் என்பதற்கு நானே அத்தாட்சி. என் பாட்டனார், என் தகப்பனார் கூட இள வயசில் வாழ்ந்த கிராமம் திருவையாற்றுக்குச் சமீபமாயுள்ள தில்லைஸ்தானம் (திருநெய்த்தானம்). பரம்பரையாக அந்தக் கிராமத்தினரென்பதற்காக என் தகப்பனார், பேருக்கு முன்பாக, 'தி' என்று போட்டுக் கொண்டார். நான் அவர் மகன் என்பதற்காக, 'தி' வைத்துக்கொண்டிருக்கிறேன்.

நான் பிறந்த ஊர் நாகப்பட்டணமென்று என் தகப்பனார் சொல்லியிருக்கிறார். குழந்தைகளுக்கு ஐந்து அல்லது ஆறு வயசிற்குமுன் நினைவுகள் ஞாபகத்தில்இருக்கமாட்டா என்பது என் அநுபவம். நாகப்பட்டணத்தைப் பற்றி எனக்கு யாதொரு நினைவும் இல்லை. ஆனால் ஒன்றே ஒன்று மட்டும் இன்றைக்கும் என் மனத்தைவிட்டு அகலவில்லை. மீசை வைத்த ஒருவர்; சற்றுக் கருநிறமானவர்; நெற்றியில் பட்டை நாமமும் உண்டு. என்னைத் தோளில் சுமந்துகொண்டு கடை, கோவில் முதலிய இடங்களுக்குச் செல்வார். அவருடைய பெயர் மணவாள ராஜு என்று என் தாயிடமிருந்து தெரிந்துகொண்டேன். அந்த நினைவைத் தவிர, பிறகு ஒரு முறையாகிலும் அவரைச் சந்திக்கவில்லை. அவர் உருவமும் நாமமும் என் மனக் கண் முன் நிற்கின்றன.

எனக்கு நினைவு தெரிந்த பிறகு கண்ட ஊர் திருவரங்கம் அல்லது ஸ்ரீரங்கம். கட்டி முடிந்த கோபுரங்கள், முடியாத மதில்கள், இடியாத மதில்கள், பாழடைந்த மண்டபங்கள், அதிவிசித்திரமான கல்வெட்டுக்கள், உடைந்தும் உடையாமலும் உள்ள அழியாத கற்சிலைகள்—இவ்விதம் பல விநோதங்கள் அடங்கிய அவ்வூரைப்பற்றிச் சரித்திர ஆராய்ச்சியாளர்கள் தாம் எழுத முடியும்.

நான் பிறந்தது ஏழைக் குடும்பம். என் பாட்டனாருக்கு மாதம் ஐந்து ரூபாய் சம்பளம். எங்கள் தகப்பனாருக்குத் தென் இந்திய ரெயில்வே கம்பெனியில் எங்கள் பாட்டனாரைக் காட்டிலும் ஆறு மடங்கு அதிகமான சம்பளம். எங்கள் பாட்டனாருக்கு ஒரே பிள்ளை. எனினும் எங்கள் குடும்பம் வளர்ந்துகொண்டே தான் வந்தது. ஆனால் வருவாய் வளரவில்லை. ஒரே முற்றுப்புள்ளிதான். பாட்டனார், தகப்பனார், தாயார்—இம்மூவரும் முப்பது ரூபாயில் தான் அன்று வளர்ந்தனர்.

நாங்கள் ஆறு மக்களும் பிறந்து, குடும்ப ஜனத்தொகை ஒன்பது பெயரான காலத்திலும் அதே முப்பது ரூபாய்தான். வாடகை கொடாமல் அகோபில சுவாமிகள் மடத்தில் இரண்டு இருட்டு அறைகளுடன் எங்கள் உலகம் நடந்தது.

தேர் முட்டிக்கும் திண்ணைப் பள்ளிக்கூடத்துக்கும் என்ன உறவு என்பது எனக்குத் தெரியாது. ஆனால் நான் படித்த ஆரம்பப் பாடசாலைகள் இரண்டும் தேர்முட்டி மண்டபங்கள். சித்திரை மாதத்தில் நடக்கும் ரதோற்சவத்துக்கு ஓடும் தேர், கிழக்குச் சித்திரை வீதியில் உள்ளது. சுவாமியைத் தேரில் ஏற்றுவதற்கான இருபது படிக்கட்டுகளுள்ள மேடை மண்டபமும் இன்னும் இருக்கின்றன. அந்த அடி மண்டபத்தில் இருபுறம் மதில்களாலும் அடைக்கப்பட்டிருந்த இடமே என் முதல் பள்ளிக்கூடம். எங்கள் பள்ளிக்கூடத்தில் மேஜை, பெஞ்சு, நாற்காலி ஒன்றும் இல்லை. எல்லாரும் தரையில் உட்காருவோம்.

'எங்கள் ஊர்' என்ற தலைப்பில், 'கலைமகளில்' 1942 ஆகஸ்ட் இதழிலிருந்து பல பெருமக்கள் தொடர்ந்து எழுதினார்கள். அவற்றில் ஒன்று இது.

உயர்தர வகுப்பு, கருங்கல் தள வரிசை போட்ட இடத்தில் நடக்கும். எங்கள் வகுப்பு மணல் தரை, சுவர்களில் படம் ஒன்றும் இராது.

மத்தியில் இரண்டு தூண்களுக்கு இடையில் பத்தடி உயரத்தில் ஒரு பனை விட்டம். அதன் மத்தியில் இரண்டு துளைகள். அதனின்று, திரித்த முரட்டுக் கயிறு ஒன்று வளைவாகத் தொங்கிக்கொண் டிருக்கும். அதற்குப் பெயர் கோதண்டம் என்று சொல்லுவது அக்காலத்தின் வழக்கம். இந்த அலங்காரத்தைத் தவிர எங்கள் பள்ளிக்கூடத்தில் வேறு சாமான்கள் இல்லை. குறும்பு செய்யும் பையன்களைத் தொங்க விட்டுப் பின்புறத்தில் ஆசிரியர் பிரம்பால் அடிப்பதற்காக ஏற்பட்ட ஒரு சாதனம் இது. நான் முதல் நாள் பள்ளியில் நுழைந்ததும், இதன் வரலாற்றைத் தெரிந்துகொண்டேன். அன்று என் மனத்தில் உண்டான திகில் இன்றும் மறக்கவில்லை.

உபாத்தியாயர் ஏழை மாத்துவப் பிராமணர். கறுப்பு நிறம். இள வயசு, அழுக்கடைந்த நீர்க்காவி ஏறிய உடை, நெற்றியில் கருங்கோடு, உடலில் கோபி முத்திரைச் சின்னங்கள்-இவற்றோடு விளங்கினார்.

அவருடைய முகத்தில் சிரிப்பு, புன்முறுவல், மலர்ச்சி இவற்றை நான் ஒருபோதும் காணவில்லை. எப்போதும் கடுகடுப்பு; பிரம்பைக் கீழே வைப்பதே இல்லை. பள்ளியில் இருந்த மூன்று வகுப்புக்கும் ஒரே ஆசிரியர். அவர் கவனம் இல்லாதபோது சட்டாம்பிள்ளையின் கண்காணிப்பு. உபாத்தியாயரை, 'ஸார்' என்று நாங்கள் சொல்லுவதும் கூப்பிடுவதும் வழக்கம். என் மனத்தில் அந்தப் பள்ளியில் வேரூன்றிய படிப்பு, கோதண்டமும் ஸாரின் தரிசனமும் பிரம்படியுந்தான். என்னை எதற்காக 'ஸார்' அடிக்கிறாரென்பது எனக்கே தெரியாது. 'ஸார்' என்றால் பிரம்பால் அடிக்க வேண்டியவர் என்பதுதான் என் மனத்தில் ஏற்பட்ட முடிவு.

அந்தப் பள்ளிக்கூடத்தில் என்ன கற்றுக் கொண்டேன் என்று எனக்குத் தெரியாது. மணலில் எழுத்து எழுதிப் பழகியது ஞாபகம் இருக்கிறது. நான் வேண்டுமென்று குறும்பு செய்ததாக நினைவு இல்லை.

ஆனால், தினந்தோறும் அடி வாங்குவது மட்டும் வழக்கமாக இருந்தது. சில சமயங்களில், 'ஸாரு'க்குக் கை வலி எடுத்ததாலோ என்னவோ என்னை அடிக்காமல் வேறு தண்டனைகள் விதித்ததும் உண்டு. 'குறிச்சி போடுகிறது' ஒரு வகை; அதாவது சுவரில் முதுகை வைத்துக்கொண்டு, முழங்கால் மண்டி போட்டு நிற்பது; அந்தக் காட்சி கையில்லாத நாற்காலி போல் இருக்கும். இந்தத் தொல்லை, சுமார் அரை மணிக்குக் குறையாது; ஒரு மணிவரை நீடிக்கும். போதாக்குறைக்கு ஒரு தடிப் பையனை மடியில் சுமந்து கொண்டு நிற்க வேண்டும். இந்தச் சித்திரவதை மிகவும் லேசான தண்டனை. வீட்டில் வந்து இதைப்பற்றி சொன்னாலும் அதிகப் பயன் இராது. குற்றம் இல்லாமல் ஆசிரியர் ஒன்றும் செய்யமாட்டார் என்பது என் தகப்பனாரின் முடிவான எண்ணம்.

எனக்கோ தினந்தோறும் பள்ளிக்கூடத்துக்குப் போவது, சிறைக்கூடம் போவதுபோல் இருந்தது. போகாமல் வெளியே விளையாடி விட்டால், வீட்டுக்குத் தகவல் கிடைத்து விடும். பள்ளிக்கூடத்தில் விழும் அடிகளைச் சாயங்காலத்தில் என் தகப்பனாரிடம் பெற்று விடுவேன்.

சுமார் இரண்டு வருஷம் இந்தப் படிப்பு நடந்தது. எங்கள் வீட்டுக்கு எதிரில் கோவிலின் கருங்கல் மதில் உண்டு. மதிலுக்குச் சற்று வடக்கே உயர்ந்த கோபுரம். அதற்கு வெள்ளைக் கோபுரமென்ற பெயர் இன்னும் வழங்கி வருகிறது. சுமார் இருநூறு அடி உயரம் இருக்கும். கோபுரம் கறுப்பாக மாறி விட்டது; எனினும் அது வெள்ளைக் கோபுரந்தான். மதிலில் தரை மட்டத்திலிருந்து பத்து அடி உயரத்துக்குமேல் முக்கோண வடிவமாக ஒரு சிறிய துவாரம் உண்டு. அந்தத் துவாரத்தில் மிகவும் அழகான பச்சைக் கிளி ஒன்று, கழுத்தில் பவள மணி கட்டியதுபோல், செங்கோட்டுடன் பார்ப்போர் மனத்தைக் கவரும்படி காட்சி அளிக்கும்.

பள்ளிக்கூடம் போவதைக் காட்டிலும் சுவாரஸ்யமாக, அந்தக் கிளி வந்து, அந்தத் துவாரத்துக்குள் புகுந்து, சற்றுநேரம் தங்கிய பிறகு ஓடிவிடுவதை அடிக்கடி கவனித்திருக்கிறேன். அதுதான் அதனுடைய வீடு. அதற்கு வாசஸ்தலம் அழிவில்லாத கருங்கல் கட்டிடத்தில் ஏற்பட்டு விட்டது. அது வருவதையும் போவதையும் வெகுநேரம் பார்த்துக் கொண்டிருப்பதில் எனக்கு ஓர் ஆசை. உள்ளே அது என்ன செய்கிறதென்பதைத் தெரிந்து கொள்ள மிகுந்த ஆர்வம். பல நாள் பார்த்திருந்து, கடைசியாக ஒரு நாள் கிளி உள்ளே நுழைந்திருக்கும் சமயம் பார்த்து, ஓர் ஏணியின் உதவியைக் கொண்டு அந்தப் பொந்தில் விரலை விட்டேன். கிளி வெடுக்கென்று கொத்தி, விரலில் ரத்தம் வந்துவிட்டது. இந்தச் சங்கதி தெரிந்த என் தாய், "நீ ஏன் பள்ளிக்கூடம் போகாமல் இப்படிக் குறும்பு பண்ணிக்கொண்டிருக்கிறாய்? நல்ல தண்டனை!" என்று வியாக்கியானம் செய்தாள். அப்பொழுதும் நான் குற்றம் செய்ததாக எனக்குத் தோன்றவில்லை.

பள்ளிக்கூடத்தில் இருக்கும்போது குறைந்தது அரை மணிக்கு ஒரு தடவையாவது, 'ஸார், ஒண்ணுக்கு' என்று ஆள்காட்டி விரலை நீட்டிக்கொண்டு நிற்பேன். 'தொலை' என்று வெறுப்புடன் 'ஸார்' ஆசீர்வதிப்பார். சட்டாம்பிள்ளை மேற்பார்வையாக இருந்தால் கால் மணிக்கு ஒருதரம் 'ஒண்ணுக்கு' வெளியேறிவிடுவேன். உபத்திரம் பொறுக்கமுடியா விட்டால், 'ஸார், இரண்டுக்கு' என்று இரண்டு விரல்களைக் காண்பிப்பேன். வெளியே வந்ததும் வீட்டிற்கு வந்து, கிளியைப் பார்க்கலாமென்று காத்திருப்பேன். என் ஆரம்பப் படிப்பு இவ்வளவு விமரிசையாக நடந்தது.

பள்ளிக்கூடத்துக்கு மாதம் ஓர் அணாச் சம்பளம் கொடுத்ததாக நினைவிருக்கிறது. ஆசிரியர் உட்பட ஒருவரும் சொக்காய் போடுவதில்லை. வேறு செலவுகளோ இல்லை. இந்த இரண்டு வருஷத்தில் போதிய படிப்பு

இந்தப் பள்ளிக்கூடத்தில் வரவில்லையென்று என்னை வேறு பள்ளிக்கு அனுப்பினார்கள்:

அதற்குப் பெரிய பள்ளிக்கூடம் என்று பெயர். நாலு வகுப்புகளும் இரண்டு உபாத்தியாயர்களும் சுமார் நூறு பையன்களும் உண்டு. ஆனால் பள்ளிக்கூடம் என்னவோ மற்றொரு 'தேர்முட்டி' மண்டபந்தான். சித்திரைத் 'தேர்முட்டிக்கு'ப் பதிலாகத் தைத் தேர் முட்டி. தேர்முட்டிகளில் பள்ளிக்கூடங்கள் வைப்பதால் பள்ளிக்கூடத்துக்குக் கக்கூஸ் தேவையில்லை. தேரின் அடிப்பக்கத்திலும் சக்கரங்களின் மறைவுகளிலுமே எல்லாப் பையன்களும் மலம், நீர் முதலியவை கழிப்பார்கள். பன்றி, தினந்தோறும் வந்து மலத்தைத் தின்று இடத்தைச் சுத்தம் செய்துவிடும்.

இந்தப் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயருக்கு நாற்காலி மேசை உண்டு. எங்களுக்கு உட்காருவதற்குச் சுவர் ஓரமாகப் பெஞ்சுகள் உண்டு. சுவரிலும் யானை, பூனை, மாடு முதலிய வர்ணப் படங்கள் இருந்தன. நான் படித்தது மூன்றாவதோ அல்லது நான்காவது வகுப்போ எனக்குத் தெரியாது: இரண்டு வகுப்பும் சேர்ந்து உட்காருவோம். வாத்தியார் ஒருவரே. கோதண்டம் போன்ற அலங்காரங்கள் இல்லை; 'குறிச்சி போடுகிற' பழக்கமும் கிடையாது. வாத்தியார் நல்ல வாட்டசாட்டமானவர். நெற்றியில் வடகலை நாமத்துடன் விளங்கினார். ஆனால் அவரும் சொக்காய் முதலியவை போடுவதில்லை. அந்த நாளில் போடவேண்டுமெனச் சட்டமும் இல்லைபோலும்! அநேகமாகக் கால்களை மடக்கிச் 'சப்பணம் கூட்டி' உபாயத்தியாயர் நாற்காலியில் அமர்ந்திருப்பார். மேஜையின் பேரில் ஒரு முழ நீளமுள்ள சிவப்பு, மஞ்சள் வர்ணம் மாறி மாறிப் போட்ட ஒரு 'ரூல் தடி' இருக்கும்:

ஆனால் இந்தத் தடி ரூல் போடுவதற்கு மட்டும் உபயோகப்படாது. உபாத்தியாயர், கையில் உருட்டுவதற்கும், பையன்களின் மணிக்கட்டில் அடிப்பதற்கும் பயன்படும். உபாத்தியாயருக்கு மூக்குப் பொடி போடுவதில் வெகு பிரியம். மற்றவர்களைப் போல் விட்டு விட்டுப் போடமாட்டார். பள்ளிக்கூடம் நடக்கும் பகல் நேரம் முழுவதற்கும் தேவையான மூக்குப் பொடியை ஒரு சிறிய குன்றுபோல் மேஜைமேல் குவித்துவைப்பார். வலக்கைப் பெருவிரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்த்து, நிஷ்டையில் இருப்பவர்கள்போல், இடையில் பொடியை வைத்து, மெதுவாக இழுத்துக் கொண்டே இருப்பார். இந்த மூக்குப் பொடி ஜபம், பையன்களை ரூல் தடியால் அடிக்கும்போது நின்றுவிடும். ஒரு சமயம் இந்த நிஷ்டை கலைய விருப்பம் இல்லாவிட்டால், இடக் கையால் ரூல் தடியை எடுத்து உபயோகப்படுத்துவதும் உண்டு.

இந்த ஆசிரியருக்கு ஒரே ஓர் எண்ணம் பையன்களுக்குக் கையெழுத்து நன்றாக இருக்க வேண்டும். தம் 'பையன்கள் எல்லாரும் குமாஸ்தாவாகவே வேலை பார்த்து, தமக்கு



# கோபால் பல்பொடி




பாக்கெட் விலை 45 காசுகள்

# ஜெட் பல்பொடி




பாக்கெட் விலை 20 காசுகள்

வாங்கி உபயோகியுங்கள்!

**தயாரிப்பாளர்கள்: S. P. S. ஜெயம் & Co.**

மதுரை - 625001.

—மினர்வா



மலைக் கோட்டை

நல்ல பெயர் கிடைக்கச் செய்ய வேண்டும் என்ற ஆசை. அதற்காகவே, பையன்களுடைய 'கைமணிக்கட்டி'ல் போர் புரிந்துகொண்டிருப்பார்கள். கையெழுத்து உருப்படி இல்லாமல் போனதற்கு, இந்த ஆசிரியரும், அவருடைய ரூல் தடியுந்தான் காரணம். எவ்வளவோ முயன்று எழுதிய போதிலும், என் எழுத்து சற்றுக் கோணலாகவே போகும். பேனாவைச் சரியாகப் பிடிப்பதைப் பற்றியோ அல்லது நேராக நல்ல வெளிச்சத்தில் உட்கார்ந்து எழுத வேண்டிய தன் அவசியத்தைப் பற்றியோ அவர் ஒன்றும் சொல்லிக் கொடுக்க மாட்டார். ரூல்தடிப் பிரயோகம் ஒன்றுதான் அவருக்குத் தெரிந்தது. முதலில் படித்த பள்ளிக்கூடத்தில் எவ்வளவு இருந்ததோ அதைக் காட்டிலும் இன்னும் அதிகமாகவே இந்த இடத்தில் இருந்தது.

வெள்ளைக் கோபுர வாசல் வழியாக அழகான சிற்ப வேலைப்பாடுகளும் கல்வெட்டுகளும் அடங்கிய நூற்றுக்கால் மண்டபத்தின் வழியே தெற்குக் கோபுரவாயில் தாண்டியவுடன் தைத்தேர் மண்டபம். வீட்டைவிட்டுச் சரியான நேரத்தில் நான் புறப்பட்டபோதிலும், பள்ளிக்கூடத்துக்குச் சரியான நேரத்தில் வந்து சேரமாட்டேன். வெகு அழகாகச் செதுக்கப்பட்ட கல் குதிரைகள், கம்பங்களில் உயிருடன் இருப்பதுபோலத் தோன்றும். உடனே புத்தகம், பலகை எல்லாவற்றையும் கீழே வைத்துவிட்டு, அரை மணி நேரமாகிலும் அந்தக் குதிரைகளில் தினம் ஒன்றாக ஏறி, ஒட்டுவதை ஆனந்தமாக அநுபவிப்பேன். ஓடாத கல் குதிரையானாலும் அது ஓடுவதாக எனக்கு உணர்ச்சியும் ஆனந்தமும் இருக்கும். அலுத்துப் போனபிறகுதான் இறங்கி, வேண்டா வெறுப்பாகப் பள்ளிக்கூடம் போவேன்.

ஸ்ரீரங்கத்தில் மிகவும் பெயர் போனது, வைகுண்ட ஏகாதசி உற்சவம். மகத்தான கொட்டகை நிருமாணித்து, அதில் அலங்காரங்கள் செய்வதற்காகச் சுமார் இரண்டு மாதங்களுக்கு முன்பாகவே அசைந்தாடிகளும் பொம்மைகளும் சேகரித்துவைக்கப்படுவது வழக்கம். நூற்றுக்கால் மண்டபத்தில் (இதைச் சேஷகிரி ராயர் மண்டபமென்று சொல்வதும் உண்டு) கீற்றினால் அடைத்து, அங்கே வேலைக்காரர்கள் வர்ணக் காகிதங்கள், குருணுப்பட்டை, நெட்டி இவற்றால் வெகு அழகாக வேலை செய்வார்கள். அவர்கள் செய்யும் வேலையைக் கவனிக்க என் மனம் நாடும். என்னை உள்ளே விடமாட்டார்கள். அடைத்திருக்கும் தட்டிகளில் ஒரு சிறு துவாரம் செய்து கொண்டு, அதன் வழியாக மணிக்கணக்காக அவர்கள் வேலையை மிக்க ஆச்சரியத்துடன் கவனிப்பேன். காலையில் பள்ளிக்கூடம் போகும்பொழுதும் நெட்டியைச் சீவிக் கட்டி, உருவம் உண்டாக்குவதற்கான வேலை நடக்கும்.

அப்பொழுது உடனே ஒரு பாகம் செய்யப்பட்டிருக்கும். மறுபடியும் சாயங்காலம் பார்க்கும்பொழுது கை கால்கள் உண்டாகிவிடும். மற்றொரு புறத்தில் உயர்தர வேலைக்காரன் ஒருவன் தலை, முகம், கண், காது இவைகளைச் செய்துகொண்டிருப்பான். சில பொம்மைகள் முண்டமாக இடைவரையில்தான் இருக்கும். தினந்தோறும் பொம்மைகள் உருவமடைந்து வருவதைப் பார்ப்பதில் என் மனம் ஈடுபடும். கடைசியாக மண் பூசி, வர்ணங்கள் தடவி, கண் முதலியவை வைத்து, உருவமாக்க ஒரு மாதத்துக்குமேல் ஆகும். பள்ளிக்கூடம் போவதை விட்டு, இடுக்கு வழியாக இந்த விநோத உற்பத்திகளைச் சலிக்காமல் கவனிப்பேன். வெட்டுண்டு சிதறிக் கிடக்கும் வர்ணக் காகிதங்களையும் குருணுப்பட்டைகளையும் சேகரிப்பதில் எவ்வளவு நேரம் செலவழித்திருப்பேனென்று தெரியாது.

ஒரு நாள், பள்ளிக்கூடம் புறப்பட்டபின் வழக்கம்போல் வர்ணக் காகிதம் பொறுக்கும் வேலையில் ஈடுபட்டு, சற்று அலுத்துப் போய், அங்கே கிடந்த ஒரு மரக்கட்டையில் புத்தகத்தை வைத்து விட்டு, அதன்மேல் தலையை வைத்துக்கொண்டு தூங்கிவிட்டேன்.

அந்தக் காலத்தில் பையன்கள் பள்ளிக்கூடம் வராவிட்டால், ஆசிரியர், சட்டாம் பிள்ளையை அனுப்பி வராத பிள்ளைகள் வீட்டுக்குப் போய்க் கூட்டிவரச் செய்வது வழக்கம். இந்த வழக்கம் இன்னும் சில கிராமங்களில் நடந்து வருகிறது. நான் சேஷகிரி ராயர் மண்டபத்தில் தூங்கிக்கொண்டிருந்த தினம். சட்டாம்பிள்ளை எங்கள் வீட்டிற்குப் போய்த் தேடியபோது, நான் சரியான நேரத்திலே பள்ளிக்கூடம் புறப்பட்டு விட்டதாக என் தாய் சொல்லிவிட்டாள்.

நான் காகிதம் பொறுக்கும் தொழிலில் ஈடுபட்டிருப்பதை அறிந்த என் நண்பர்கள்,

உபாத்தியாயரிடம் நான் இருக்கக்கூடிய இடத்தைப் பற்றிக் 'கோள்' சொன்னார்கள்.

உடனே இரண்டு தடிச் சட்டாம்பிள்ளைகளை அனுப்பி, என்னைக் கையோடு பிடித்து இழுத்து வரும்படி உபாத்தியாயர் உத்தரவிட்டார். அந்த இரண்டு கிங்கரர்களும் வந்து, தூங்கிக் கொண்டிருந்த என்னை ஒரே கட்டாகக் கட்டித் தூக்கிக்கொண்டு போய்ப் பள்ளிக் கூடத்தில் உபாத்தியாயர் முன் நிறுத்தினார்கள். நான், அகப்பட்டுக் கொண்ட பிரமையில் ஒன்றும் சொல்லத் தெரியாமல் விழித்தேன். அன்றைத் தினம் எனக்கு இரட்டை உபயம்! உபாத்தியாயர் என்னைப் பையன்களின் முன்பாக எலும்பு நொறுங்கும்படி புடைத் தார். வீடு வந்ததும் என் தகப்பனார் என்னைக் கண்டிக்கும் முறையில் என் உடம்பில் அடிபட டிராத பாக்கி இடங்களைப் பிரம்படியால் நிரப்பி விட்டார். பள்ளிக்கூடத்தைப்பற்றி நாங்கள் அக்காலத்தில் பாடிவந்த பாட்டு எனக்கு இன்னும் மறக்கவில்லை. அந்தச் செய் யுளுக்கு ஆசிரியர் யாரோ தெரியாது.

'நெடுமால் திருமுருகா நித்த நித்தம்
இந்த இழவா? வாத்தியார் சாகானா?
வயிற்றெரிச்சல் தீராதா?'

இதைப் பாடிப் பாடி என் வயிற்றெரிச்சலை ஒருவாறு தீர்த்துக் கொள்ளுவேன்.

உபாத்தியாயரின் மேஜைமீது ஒரு சிறிய கடிகாரம் வைத்திருக்கும். அது அவருடைய உபயோகத்துக்காகவும் மணி அடிப்பதற்காகச் சட்டாம்பிள்ளையின் உபயோகத்திற்காகவும் இருக்கும். பையன்களுக்கு மணி பார்க்கிற படிப்பு, நாலாவது வகுப்பில்தான் என்பது திட்டம். ஆனால், எனக்கு அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற ஆவல். அதற்காக ஒரு சிறிய கைக்கடிகாரமாகிலும் இருந்தால் நலமென நினைத்தேன். அது டக்டக் என்று சப்தம் செய்வதைக் காதில் வைத்து நெடு நேரம் சலியாது கேட்பதில் ஆசை.

ஆனால் கடிகாரம் ஏது? வாங்குவதற்குப் பணம் யாரிடம் கேட்பது? ஒருவரும் கொடுக்க மாட்டார்கள் என்பது திண்ணம்.

என் மாமா திருச்சி காலேஜில் ஓர் உயர்தர உபாத்தியாயர். ரூபாய் எண்பதற்கு மேல் மாதச் சம்பளம். அவரும் ஸ்ரீரங்கத்தில் கிழக் குச் சித்திரை வீதியில் ஒரு மேல் மெத்தை யுள்ள வீட்டில் இருந்து வந்தார். அங்கிருந்து பார்த்தால் திருச்சி மலைக் கோட்டை நன்றாகத் தெரியும். காலை வேளைகளில் அதை ஆசை யுடன் பார்த்துக்கொண்டிருப்பேன்.

ஒரு நாள் காலையில் விளையாடு வதற்காக அங்கே சென்றபொழுது மேல் மாடியிலுள்ள என் மாமா அறைக் குள் சென்றேன். அங்கே ஒருவரும் இல்லை. அவருடைய கைக்கடிகாரம் டக், டக் என்று மேஜைமீது அடித்துக்கொண்டிருந்தது. என்ன காரணத்தினாலோ திருடுகிறோம் என்கிற எண்ணமில்லாமல், ஒரு நாளைக்காகிலும் அதை வைத்துக்கொண்டிருந்து, என் ஆசையைத் திருப்தி செய்துகொள்ளலாமென்று எண்ணி, ஒருவருக்கும் தெரியாமல் அதை எடுத்துக் கொண்டு, என் பள்ளிக்கூடம் சென்றுவிட் டேன். அதை என் நண்பர்கள் கண்டவுடன் என்னைப் புகழ ஆரம்பித்துவிட்டார்கள். எல்லாருக்கும் அன்றைத் தினம் என் கடிகாரத் திலேயே மணி பார்க்கக் கற்றுக் கொண்டுவிட வேண்டும் என்கிற எண்ணம். கூட்டம் கூடி, ஒருவன் மற்றொருவனைத் தள்ளி, கடிகாரத் தைப் பிடித்திழுத்ததில், அது கீழே விழுந்து முன் பக்கத்திலுள்ள கண்ணாடி வில்லை உடைந்து தூள்தூளாகிவிட்டது.

இந்த அமளியில் உபாத்தியாயரும் வந்து விட்டார். கடிகாரத்தைக் கைப்பற்றி விசா ரணை நடத்தினார். அது என் மாமாவின் கடிகாரமென்றும், அவருக்குத் தெரியாமல் நான் எடுத்துவிட்டேனென்றும் சொன்னேன். தாம் அவரிடம் திருப்பிக் கொடுத்துவிடுவ தாகச் சொல்லி, அதை வாங்கிக்கொண்டு விட்டார்.

பிறகு அதைப்பற்றி நான் ஒன்றும் கவனிக்க வில்லை. பிற்பகல் பள்ளிக்கூடம் முடிந்து, வீடு சென்றேன். இரவில் என் தகப்பனாருக்கு மாமா சொல்லியனுப்பித் தம் கடிகாரத்துக்கு ஏற்பட்ட விபத்தையெல்லாம் அவரிடம் சொல்லிவிட்டார். இரவு எட்டு மணி இருக் கும். வீடு திரும்பிய என் தகப்பனார், என்னைக் கூப்பிட்டு, ''ஏன் கடிகாரத்தைத் திருடினாய்?'' என்று கேட்டார். திருடவில்லையென்று நான் பதில் சொல்லவே, அவருக்குக் கோபம் அதிகரித்துவிட்டது. சுமார் ஒரு மணி நேரம் என்னைச் சித்திரவதை செய்துவிட்டார். நான் பட்ட அடியும் கத்தின கதறலும் எனக்கு இன்றைக்கும் ஞாபகம் இருக்கின்றன.

அன்று முதல் கடிகாரத்தை எங்கே பார்த் தாலும் ஒரே பயம். மணி பார்க்கும் வித்தையை அன்றோடு மறந்தேன். இனி இந்த ஜன்மத்தில் கடிகாரமென்பதையே கனவில் கூட நினைப்பதில்லையென என் மனத்தில் முடிவு செய்துகொண்டேன்.

பத்தொன்பதாவது வயதில் சென்னை மெடிகல் காலேஜ் வரும் வரையில் கடிகாரத்தை ஏறிட்டும் பார்த்ததில்லை.

பள்ளிக்கூட வாழ்க்கையில் இருந்த சங்கடங் களுக்கிடையில் எனக்கு ஓர் ஆறுதல் மட்டும் உண்டு. வீட்டில் எழுபத்தைந்து வயதுள்ள என் பாட்டனார் மட்டிலும் என்னை ஒரு தரமும் அடித்ததே இல்லை. மாலையானால், என்னைக் கூப்பிட்டுப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொள்வார். வருஷம், மாதம், தேதி, நட்சத் திரங்கள், கிழமைகள், ராகுகாலம், எமகண்டம் ஸ்தோத்திர பாடம் இவைகள் எனக்குக் கற் பிப்பார். அவர் முதலில் சொல்ல, நான் பிறகு அவர் சொல்வதைச் சொல்லி வருவேன். தினந்தோறும், சலிக்காமல் இவைகளைக் கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் சொல்லி வைப்பார். எனக்கு மனப்பாடமான பிறகு கூடத் தாமும் கூடவே சொல்லிவருவார்.

அந்த வயதில் நான் என்ன படித்தேன் என்பது எனக்குத் தெரியாது. கையெழுத்தோ தலையெழுத்துப் போல்தாம் இருக்கும். நான்கு வருஷத்தில் நாலாவது வகுப்பு முடித்துவிட் டேன். என் தாத்தா சொல்லி வைத்த பாடம் மட்டும் எனக்கு மிச்சம். மற்றப்படி பள்ளிக்கூடத்துப் படிப்பில் வெறுப்பும் வாத்தி யார் பேரில் அழியாத துவேஷமும் பள்ளிக் கூடம் ஒரு சிறைக்கூடம் என்கிற முடிவுமே மிஞ்சின.

*

—R. நாகசுந்தரம்



V. S. K.




‘தன் பலம் தனக்குத் தெரியாது’ என்பது வெகு ஜனவாக்கு; அதே மாதிரி தன் பலவீனமும் விசித்திர பேதங்களும் பிறர் கண்ணுக்குத் தெரிவது போல் தனக்குத் தெரியா என்பதையும் வெகு ஜன வாக்காகக் கொள்ள வேண்டும். ஏனென்றால், முந்திய வசனத்தின் உட்கிடை பிந்திய வியாக்கியானம். நல்லதும் சோடையுமாகச் சுமார் இருநூறு கதைகள் எழுதிவிட்டு, அப்புறம் அவற்றின் தராதரத்தைப் பற்றிக் கவனிப்பது, எழுதினவருக்கு ஒரு ரசமான பொழுது போக்கு. என்னுடைய கதைகளைப் பற்றி அமிதமான பாராட்டும் பரவசமும் ஒரு சார்; மற்றொரு புறம் பலத்த, மனப்பூர்வமான கண்டனம். இந்த இரண்டும் என் கதைகள் பெற்றுள்ள கவர்ச்சிகள். ஒரு பரம ரஸிகர் என்னுடைய கதைப் புஸ்தகத்தைக் கண்டவுடன், ‘‘இந்த மனிதன் எப்பொழுது கதை எழுதுகிறதை நிறுத்திக் கொள்வான்?’’ என்று ஆவலுடன் கேட்டார். அந்தப் பரம ரசிகருக்குத்தான் என்னுடைய அடுத்த புஸ்தகத்தை - அவருடைய கொய்னா மாத்திரையை - ஸமர்ப்பிக்கப் போகிறேன். மற்றொரு கலை நுணுக்கவாதி, ‘‘இவர் என்ன சூனா மானாவா?’’ என்று கேட்டார். என் கட்சி பேச ஆசைப்பட்ட ஒருவர், ‘‘அவரும் நம்மைப் போல ஒரு மனிதர்தாம்’’ என்று தெளிவுபடுத்திக் கொடுத்தார். இதே மாதிரிதான் பரவசமும் பராட்டுதலும். அவையும் தன்னை மறந்த ‘சாமியாட்டமாக’ இருக்கிறது.

என் கதைகளில் உள்ள கவர்ச்சிக்கு ஓரளவு காரணம், நான் புனைந்துகொரண்ட புனை பெயராகும். அது அமெரிக்க விளம்பரத் தன்மை வாய்ந்திருக்கிறது என்பதை இப்போது அறிகிறேன். பிறகு நான் எடுத்தாளும் விவகாரங்கள்; பலர் வெறுப்பது, சிலர் விரும்புவது. நிற்கட்டும்.

என்னுடைய கதைகளை நான் எப்படி எழுதுகிறேன்? மற்ற எல்லாரையும் போலத்தான் பேனாவும் பென்சிலும் உபயோகித்து எழுதுகிறேன். வாரத்துக்கு ஐந்து ஆறு கதைகளிலிருந்து வருஷத்துக்கு ஒன்று என்ற திருமூலர் அந்தஸ்தை எட்டியிருக்கிறேன். பரிணாமவாத நியதிப்படி வளர்ச்சிதான். ஆனால் என் கதை இனிமேலும் இந்த நியதிப்படியே பிறக்க ஆரம்பித்தால் பொருளாதார வகையில் எனக்கு நஷ்டக் கணக்குத்தான்.

என் கதைகளில் எது நல்ல கதை? எனக்குத் தெரியவில்லை. ஒவ்வொன்றும் நல்ல கதையாகத்தான் இருக்கிறது. இப்பொழுது படித்துப் பார்க்கும்போதும் எனக்கு வாசிக்கப் பரம சுகமாக இருக்கிறது. எல்லாரும் ‘சில்பியின் நகம்’ நல்ல கதை என்கிறார்கள். அது மணிக்கொடி நடக்கும்போது, அந்தக் காரியாலயத்தில், சாயங்காலம் சிக்கிக் கொண்டு, விளாசிக் கிறுக்கிவிட்டு வீட்டுக்குத் தப்பி வந்த கதை. சிலர் ‘நினைவுப் பாதை’ நல்ல கதை என்று சொன்னார்கள். தினமணி வருஷ மலரில்தான் அந்தக் கதை முதல் முதலில் வெளியாயிற்று. அப்போது வருஷ மலரைப் பதிப்பிக்கும் பொறுப்பு என்வசம் அளிக்கப்பட்டிருந்தது. ஒரு நாள் ராத்திரி எட்டுப் பக்கங்களுக்கு என்று விஷயங்களை எடுத்துக் கொடுத்துவிட்டுப் ‘புரூப்’ வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ராத்திரி பதினொரு மணி இருக்கும். அப்பொழுது அச்சு இலாக்காப் ‘போர்மன்’ என்னிடம் வந்து, ‘‘ஸார், இரண்டு பக்கங்களுக்கு விஷயம் தேவை’’ என்றார். படத்துக்குப் ‘பிளாக்கு’கள் செய்து கொடுப்பவர், குறித்த

காலத்தில் 'பிளாக்கு' களைக் அனுப்பாததனுல் அந்தச் சங்கடம். அந்தப் பக்கங்களில் வர வேண்டிய கட்டுரைகளை மாற்றி, வேறு கட்டுரைகளைக் கொடுத்தேன். அது இரண்டு பக்கங்களில் வந்து உதைத்துக்கொண்டது. வேறு ஏதோ கதை ஒன்று எழுதி, அதற்காகச் செய்து வைத்த பிளாக்குகளை உபயோகித்து, இரண்டு பக்கங்களுக்கு என்று ஒரு கதை எழுதிப் பக்கத்தை நிரப்பினேன்; நிரப்பினேன் என்று சொல்வது பிசகு; 'ரொப்பினேன்' என்று கிராம்யமாகச் சொன்னுல்தான் பொருந்தும்.

நான் தினசரிப் பத்திரிகைக்கு வருமுன் ஒரு வாரப் பத்திரிகையில் உதவி ஆசிரியனுக அமர்ந்திருந்தேன். இந்த ஆசிரியர் வீணுகப் பொருள் விரயம் செய்பவர் அல்ல. ஒரு நாள் என்னிடம் வந்து, ஒரு பிளாக்கைக் கொடுத்து, ''இந்தப் படத்துக்காக வைத்திருந்த கதை கை தவறி விட்டது; நீங்கள் இதற்குப் பொருந்துவதுபோல் ஒரு கதை எழுதுங்கள்'' என்ருர். அப்படி எழுதியதுதான் ''கோபாலபுரம்''. இன்றும் அதை வாசிக்கும் போது எனக்கு நன்ருக இருப்பதுபோலத் தான் தெரிகிறது.

இந்தக் கதை எழுதுகிறதிலேயே வேடிக்கையான அநுபவம் எனக்குத்தான் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்ல வேண்டும். கதை தருவதாக வாக்குக் கொடுத்து விட்டுக் கடைசி நிமிஷம் வரை போக்குக் காட்டி, சாத்தியமானுல், அந்தக் குறிப்பிட்ட இதழுக்குத் தப்பிவிடுவதில் நான் கைதேர்ந்த நிபுணன். இது என்னுடைய நண்பர்களான பத்திரிகை நிர்வாகிகளுக்கு நன்ருகத் தெரியும். பக்கத்தில் உட்கார்ந்து எழுதி வாங்கிப் போய் விடுவார்கள். இது வழக்கப்படி அவர்கள் அநுஷ்டிக்கும் முறை. ''அடுத்த இதழுக்கு என்ன கதை?'' என்று ஒரு பத்திரிகையில் கேட்டார்கள். ''சரி, தருகிறேன்'' என்றேன். ஒரு நாள் திடீரென்று வந்து, ''அடுத்த இதழுக்கு முன் விளம்பரம் கொடுக்கப் போகிறேன். கதையைக் கொடுங்கள்'' என்று கெடுபிடி செய்துவிட்டார்கள். ''ரொம்ப நீளமான கதை; பாதிதான் எழுதியிருக்கிறேன்; பூர்த்தி செய்துகொடுக்கிறேன்'' என்று சொன்னேன். அப்பொழுது, ''கதையின் தலைப்பையாவது சொல்லுங்கள்'' என்ருர்கள்.

அப்போது மத்திய அசெம்பிளித் தேர்தல்போல் இருக்கிறது. காங்கிரஸ் போட்டியிடும் காலம். சங்கு சுப்பிரமணியன் 'தினமணி'யில் எங்களுடன் சக ஆசிரியராகத் தந்தி மொழிபெயர்த்துக் கொண்டிருந்தார். அவர் தேர்தல் பாட்டு ஒன்று அன்றைத் தினமணியில் பிரசுரமாகி இருந்தது. ''நாட்டினுக்கு நலம்கெடுக்கும் நாசகாரக் கும்பல்' என்பது அந்தப் பாட்டில் ஒரு வரி. 'நாசகாரக் கும்பல்' என்ற வார்த்தைச் சேர்க்கை எனக்குப் பிடித்திருந்தது. கதையின் தலைப்புக் கேட்ட நண்பர்களிடம் அதைச் சொல்லிவிட்டேன். நான் சொல்லப் போகும் அந்த நாசகாரக் கும்பல் யார் என்பது எனக்குச் சற்றும் தெரியாது. முப்பத்து முக்கோடி தேவர்களா, அல்லது அதற்கும் சிறிது எண்ணிக்கைக் குறைவான சிறு தேவதைகளா, அல்லது 1935-ஆம் வருஷ இந்திய சர்க்கார் சட்டப்படி நடக்கும் பிரிட்டிஷ் ஆளுகைக்கு உட்பட்டவர்களா என்பது எனக்குத் தெரியாது. ஏதோ சொல்லிவிட்டேன். பிறகு என் வழக்கப்படி விவகாரத்தை அடியோடு மறந்துவிட்டேன். பத்திரிகைக்குக் கதை கொடுக்கவேண்டிய நாள் நெருங்க நெருங்க மனசு 'கெதக்', 'கெதக்' என்று துடிக்க ஆரம்பித்தது. கடைசிக் கெடுவும் வந்தது. நண்பர்கள் வந்து உட்கார்ந்துவிட்டார்கள். நானும் எழுதத் தொடங்கினேன். எழுத்து, பக்கம் பக்கமாகக் குவிந்துகொண்டு செல்லுகிறது; வசமான பிடிப்பு, கைக்குள் சிக்கவில்லை. அவர்களும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்துவிட்டு, ''மீதியை நாளைக்கு முடித்து அனுப்புங்கள்'' என்று கைவசம் இருந்த கடுதாசிகளை எடுத்துப் போய்விட்டார்கள். அந்தச் சமயம தப்பித்துக்கொண்டோம் என்ற பிரக்ஞை இருந்ததே ஒழிய, கதை எப்படி முடியுமோ என்ற பிரக்ஞை சற்றும் இல்லை. மறுநாள் எப்படியோ அதை முடித்துக் கொடுத்தேன். கதையும் வெளி வந்தது.

'கதையின் கதை' என்ற தொடரில் (1942) பல எழுத்தாளர்கள், தங்கள் படைப்பைப் பற்றி எழுதினுர்கள். அவற்றில் ஒன்று.

அச்சுப் பிழை பார்க்கிறவர்களை ஒதுக்கி விட்டால், என் கதையின் முதல் வாசகன் நான்தான். அவ்வளவு ரசித்துப் படிப்பேன். வேகமாக எழுதிக்கொண்டு போவதனுல் எழுதியதில் அங்கொன்றும் இங்கொன்றுதான் என் ஞாபகத்தில் இருக்கும். கோவையாக எழுத்து ரூபத்தில், என் கதைகளை நான் அச்சில்தான் பார்த்து வருகிறேன். அந்தப்படி படித்து வரும்போது முதலில், 'இலங்கையிலிருந்து திரும்பிய மருத்துவனுருக்கு மனைவி காலமாகிவிட்டார்' என்று இரண்டாம் பக்கத்தில் எழுதிவிட்டு, முடிப்பதற்குமுன் பக்கத்தில், 'அடிபட்ட மருத்துவனுர் தம் மனைவியின் கைத்தாங்கலில் தள்ளாடி' வந்ததாக எழுதியிருந்தேன்! இந்த மாதிரி மாண்டவர் மீண்ட விந்தையைப் பத்திரிகை ஆசிரியருக்கு நாசூக்காக அறிவித்தேன். நான் எடுத்துக் காட்டிய பிறகுதான் அவர் கண்ணுக்கும் அது தென்பட்டது. அந்தக் கதையைச் சமீபத்தில் ஒருமுறை படிக்க நேர்ந்தது. நன்ருகத்தான் இருக்கிறது.

நான் கதை எழுதுகிற சீர் சிறப்பு எல்லாம் இந்த மாதிரிதான் என்று வைத்துக் கொள்ள வேண்டாம். அதாவது நான் எழுத வேண்டியதுதான் பாக்கி. அது நேராகப் பத்திரிகையின் பக்கங்களில் போய் உட்கார்ந்து கொள்வது நிச்சயம் என்றும் கருத வேண்டாம். அப்படி ஒன்றும் இல்லை. ஒரு காலத்தில், என் கதைகளைப் போல், பத்திரி

கைகளில் நுழைய அநுமதி மறுக்கப்பட்டவை வேறு இருக்கவே முடியாது. பிரசுரமாகியிருக்கும் கதைகளைப்போல் இரண்டுமடங்கு திரும்பி வந்திருக்கின்றன.

நான் கதை எழுதுவதற்காக நிஷ்டையில் உட்கார்ந்து யோசித்து எழுதும் வழக்கம் இல்லை; இதை நான் ஸ்பஷ்டமாகச் சொல்ல வேண்டியதில்லை; நான் முன் விவரித்த உதாரணங்களே போதும்.

என் கதைகளில் எதையாவது ஒன்றைக் குறிப்பிட்டு அது பிறந்த விதத்தைச் சொல்லுவதென்றால், ரிஷிமூலம் நதி மூலம் காணுகிற மாதிரிதான். சில, ஆபாச வேட்கையில் பிறந்திருக்கலாம்; சில, குரோத புத்தியின் விளைவாகப் பிறந்திருக்கலாம்: வேறு சில, அவை சுமக்கும் பொருளுக்குச் சற்றும் சம்பந்தமே இல்லாத, ஒரு காரியம் கைகூடாதபோது எழுதப்பட்டிருக்கலாம். இதனால் சுயமாகக் கற்பனை பண்ணிக் கொண்டிருக்கிறவனுக்கு, இன்னதுதான் இந்தக் கதையை எழுதத் தூண்டியது என்று சொல்லுவது எளிதல்ல; கேட்டால், ''என்னமோ தோன்றித்து; எழுதினேன்'' என்றுதான் சொல்ல வேண்டியிருக்கும்.

என் கதைகளின் தராதரத்தை பற்றி 'எரிந்த கட்சி, எரியாத கட்சி,' ஆடுகிறார்கள்; அதற்குக் காரணம், இலக்கியத்தில் இன்னதுதான் சொல்ல வேண்டும். இன்னது சொல்லக்கூடாது என்று ஒரு தத்துவம் இருப்பதாகவும், அதை ஆதரித்துப் பேசுவதாகவும் மனப்பால் குடித்துக் கொண்டிருக்கலாம். உண்மை அதுவல்ல; சுமார் இருநூறு வருஷங்களாக ஒருவிதமான சிலைப் பேன் வாழ்வு நடத்திவிட்டோம். சில விஷயங்களை நேர்நோக்கிப் பார்க்கவும் கூசுகிறோம். அதனால்தான் இப்படிச் சக்கர வட்டமாகச் சுற்றி வளைத்துச் சப்பைக் கட்டுக் கட்டுகிறோம்: குரூரமே அவதாரமான ராவணனையும் ரத்தக் களரியையும் மனக்குரூபங்களையும் விகற்பங்களையும் உண்டாக்க இடம் இருக்குமானால், ஏழை விபசாரியின் ஜீவனோபாயத்தை வர்ணிப்பதால் சமூகத்தின் தெம்பு இற்றுப் போகாது: இற்றுப் போனது எப்படிப் பாதுகாத்தாலும் நிற்கப் போகிறதா? மேலும், இலக்கியம் என்பது மன அவசத்தின் எழுச்சிதானே? நாலுதிசையிலும் ஸ்டோர் குமாஸ்தா ராமன், ஸினிமா நடிகை சீதம்மாள், பேரம் பேசும் பிரமநாயகம்- இத்யாதி நபர்களைத் தவறுமல் பார்த்துக் கொண்டிருந்து விட்டு இவர்களது வாழ்வுக்கு இடமளிக்காமல், காதல் கத்திரிக்காய் பண்ணிக்கொண்டிருப்பது போன்ற - அநுபவத்துக்கு முரணான விவகாரம் வேறு ஒன்றும் இல்லை. நடைமுறை விவகாரங்களைப் பற்றி எழுதுவதில் கௌரவக் குறைச்சல் எதுவும் இல்லை.

நீளமாகத் தலையைக் கத்தரித்துக்கொண்டு, அடையாறு ஜிப்பா போட்டுக்கொண்டு, பங்கியடித்த மாதிரி கண்களை ஏறச் செருக வைத்துக் கொண்டிருக்கும் படங்கள், அவை போன்ற கதைகள், நாசூக்கான கட்டம் வரை, அதாவது உடை குலையாத கட்டம்

## திருவாதிரை தரிசனம்

கோபாலகிருஷ்ண பாரதியார்

இராகம்-தன்யாசி தாளம்-ஆதி

**பல்லவி**

திருவாதிரை தரிசனத்திற்கு
வந்தேன் உன்றன் (திருவாதிரை)

**அநுபல்லவி**

திருவாய்திறந் திறவா இனிப்பிறவா
வரந்தருவாய் என்று (திருவாதிரை)

**சரணம்**

1. கங்கு கரையேது மில்லாத பவக்
கடல் தாண்டவே உனது சிவ
கங்கைதனில் மூழ்கினும் பெருங்
கடலும் குளப்படி யாகுமே
(திருவாதிரை)

2. அல்லும் பகலும் உனது சபை
அருகில் நின்று கூத்தாடினல்
கல்லாம் மனது உருகும் பர
கதியுங் கைவசம் ஆகலாம்
(திருவாதிரை

3. ஆலந்தன்னைக் கண்டோடிய
அமரர் துயர்கெடக் காத்தவன்
பாலகிருஷ்ணன் பணியுந் திருப்
பாதன் கனகசபாபதி (திருவாதிரை)

—ஜனவரி, 1964

---

வரை எழுதிக் கொண்டிருப்பதே கலையல்ல அவையே, அப்புறம் என்ற நினைப்பைத் தட்டிவிட்டு ஆபாச வேட்கைகளைக் கிளப்புகின்றன. இலக்கியத்தில் கலையம்சம் என்பது ஜீவத் துடிதுடிப்பில்தான் இருக்கிறது. ராமாயணத்தில் விபசாரம் இல்லையா? தற்காலப் புஸ்தகத் தணிக்கை போர்டார், இப்பொழுது எழுதினால் 'ஆபாசம்' என்ற தலைப்பில் தடை விதிக்கக் கூடிய வேறு விவகாரங்கள் இல்லையா? ஒரு பெரிய மாளிகை மாதிரி, ராமாயணம் அகண்டாகாரமாக இருப்பதால். அவை பலர் கண்களுக்குத் தென்படுவதில்லை; கோவில் கோபுரச் சிற்பங்கள் போல, என் கதை அப்படிப்பட்டவை என்று நாமகரணம் சூட்டி இருப்பதாக நான் தாக்கீது பிடித்துப் பேசவில்லை. என்னுடைய கதைகளில் அப்படிப்பட்டவை விலக்கு அல்ல என்று கூறுவது பொருந்தும்; ஏனென்றால் என் கதைகளில் ஒவ்வொன்றும் ஒரு விவகாரத்தைப் பற்றியதாக இருக்கும்.

ஒருவர் என்னுடைய புனைபெயரை வைத்துக் கொண்டு என் கதையை விமர்சனம் செய்தார். ''பித்தமும் இடையிடையே புதுமையும் காணப்படும்'' என்றார். வாஸ்தவந்தான். 'பித்தா பிறைசூடி பெருமானே' என்ற உருவத்தில் பொதிந்துள்ள உன்மத்த விகற்பங்களை அவர் குறிப்பிடுகிறார் என்று பொருள் கொண்டு, அவ்வளவும் நமக்கு உண்டு என ஒப்புக் கொள்ளுகிறேன். அவரவர் மனசுக்கு உகந்த ரீதியில் இருப்பவையே புதுமை எனக் கொள்ளப்படுகின்றன. நான் பொருள் கொடுக்கும் பித்தந்தான் அதில் புதுமை, என் கதைகளின் புதுமையும் அதுதான். *




# வெள்ளி விழாக் காட்சிகள்





1957

கலைமகளின் பொன் விழாச் சமயத்தில், வெள்ளிவிழாக் காட்சிகளைக் கொண்டாடிய சிறப்பையும் பார்க்கும்போது பெருமித உணர்ச்சி உண்டாகிறது. மயிலை ரஸிக ரஞ்ஜனி சபை அரங்கில் 1957-இல் சித்திரா பௌர்ணமியன்று வெள்ளி விழா நடந்தது. விழாவுக்கு வந்தவர்களை எல்லாம் இனிப்பு வழங்கி இன்முகம் காட்டி வரவேற்றார்கள். ராஜாஜி, எஸ். எஸ். வாசன், 'சுதேசமித்திரன்' ஆசிரியர் ஸி. ஆர். ஸ்ரீநிவாசன், முன்னா





முதல்வர் எம். பக்தவத்சலம், போன்ற பெருமக்கள் எல்லாரும் கூடிக் 'கலைமகளை' வாழ்த்தினார்கள். தமிழ் மொழிக்கும் இலக்கியத்துக்கும் 'கலைமகள்' செய்துள்ள சிறந்த இலக்கியச் சேவையை ஒருமுகமாகப் பாராட்டினார்கள்.

தம் தகப்பனார் தொடங்கிய 'கலைமகளை'க் கண்ணெனப் போற்றி, குடும்பத்தில் 'தந்தையும் தனயனும், தாயும் மகளும்' படிக்கத் தகுந்த பத்திரிகையாக வளர்த்த அமரர் நா. ராமரத்தினம், விழாவுக்கு வந்திருந்த ரசிகப் பெருமக்களை வரவேற்று மகிழ்ந்தார்.

அமரர் நாராயணசாமிஐயர் நினைவு நாவல் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கெல்லாம், மத்திய அமைச்சராக விளங்கிய திரு சி. சுப்பிரமணியம் பரிசுகளை வழங்கிப் பாராட்டினார்.

ஆசிரியர் திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள், கலைமகளின் வளர்ச்சி















நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார்:

வெள்ளிவிழா நிகழ்ச்சிகள் தொடர்பாக மாலையில் மயிலாப்பூர் வுட்லண்ட்ஸில் சிறப்பு விருந்தும் நடந்தது: நகரப் பிரமுகர்களும் பத்திரிகையாசிரியர்களும் எழுத்தாளர்களும் அதில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

போட்டோ:
என். ராமகிருஷ்ணு

யைப்பற்றிச் சுவைபடக் கூறினுர். அமரர் ராஜாஜீ, 'கலைமகளி'ன் தனித்தன்மையையும் இலக்கியச் சிறப்பையும் புகழ்ந்து கூறி, 'இப்படியே நீடூழி வளரவேண்டும்' என்று ஆசியும் கூறினுர்.

தர்மரக்ஷாமணி அமரர் கே. பாலசுப்ரமண்ய ஐயர் வாழ்த்திப் பேசினுர். திரு பெ.நா. அப்புஸ்வாமி அவர்களுடன் திரு அகிலன் அவர்களும் வெள்ளி விழா







# வஞ்சிர மீன்

சுகி சுப்பிரமணியம்

“ஏண்டாலே, டேய் முத்துப்பாண்டி, வெள்ளி முளைக்கப் போவுது. கண்ணைத் தொறடா. இல்லியானாக் காஞ்ச மொளகாயை எடுத்துக் கண்ணு ரெப்பையிலெ சொருகிப் போடுவேன் சொருவி!”

ஏகப்பன் இப்படிச் சொன்னால் அது விடியற்காலை மூன்று மணி. மகன் முத்துப்பாண்டியை எழுப்புவதற்குள்ளே பெரும்பாடு.

தகப்பன் குரலைக் கேட்டதும், கிழிசல் பாயை மடக்கிச் சுருட்டிச் சுவர் ஓரம் தள்ளினான்.

“பீடிக்கட்டு, வத்திப்பெட்டி இருக்குதாப்பா?”

“உம்...உம். பழஞ்சோறும் வெங்காயமும் இருக்குது. அட கௌம்புடா. ஒன்னோட தெனம் இதே பொளப்பு; வாடா' சடுதியாக் கடலுக்கு.”

ஏகப்பன் குடிசையை விட்டு இறங்கிப் போய்க் கொண்டிருந்தான்; தகப்பன் குரல் கேட்டு, “யப்போவ், வஞ்சிரமோ, வெளவாலு மீனோ பாத்துப் புடிச்சா? நாக்குச் செத்துப் போச்சு, அரிசிச் சோறு தின்னு தின்னு” என்றாள் பிள்ளைத்தாச்சி மகள்.

பேறுகாலத்துக்காக வந்திருக்கும் மகள் வேண்டுவது நியாயமான கோரிக்கை. இது அவளுக்கு ஒன்பதாவது மாதம்; அவளும் அலுக்காமல் ஏழு நாளாக இதே பல்லவி பாடுகிறாள். வஞ்சிரமும் கிடைக்கவில்லை. வெளவாலு மீனும் கிடைக்கவில்லை. எது எதுவோ கிடைத்தது; விற்பனையிற்று.

“ஆகட்டும்மா. இன்னிக்கு ஆண்டவன் வழிவிடுவான்; டேய், வாடாலே விரசா, முத்துப்பாண்டி.”

முத்துப்பாண்டி சாம்பலை வாயில் அள்ளிப் போட்டு இரண்டு இழு இழுத்து வாய் கொப்புளித்துக்கொண்டிருந்தான். பல் தேய்க்கும் படலம்.

அந்தக் குப்பத்து ஆட்களிலே ஒரு சிலர் கடற்கரையை நோக்கி வலையும் கையுமாக நடப்பது தெரிந்தது; இருட்டு அவர்களுக்குப் பழகிய பாதை. கண்ணுக்கு எட்டாத கடல் அவர்கள் வயிற்றுக்குச் சோறிடும் வளமான பூமி.

ஆங்காங்குக் கிடக்கும் கட்டைகளைச் சேர்த்துக் கட்டிக் கொண்டிருந்தார்கள். அண்ணன் தம்பிகள் சேர்ந்து போனார்கள்; மாமன் மச்சான் சேர்ந்து போனார்கள். மைத்துனனும் மைத்துனனும் சேர்ந்து அவரவர்கள் பாட்டினைப் பார்க்க, அலையோடு மோதி எதிர் நீச்சல் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்பன் ஏகப்பனும், மகன் முத்துப்பாண்டியும் சேர்ந்து அலையோடு முன்னேறி, முட்டி மோதி அரை மணிக்கு அப்பால் அலையற்ற பகுதியைக் கண்டனர். தார் ரோட்டில் போகும் கார் மாதிரி கடலில் கட்டுமரம் பாய்ந்து சென்றது; அலைகள் இல்லாத பரந்த நீர்ப் பரப்பு.

நீரின் மேல் எழுதினால் அது நிற்காது. மீனவர்களுக்கு நீரின்மேல் நின்று தடம் பிடிக்கும் மனோசக்தி உண்டு. எவ்வளவு தொலைவு, வீட்டிலிருந்து எந்தத் திக்கு. எத்தனை மைல் என்றெல்லாம் பழகிப் போன தண்ணீரில் தடம் பிடித்து மேலே மேலே போனார்கள்.

வலை வீசி வீசிக் கை ஓய்ந்தது. கன்னங்கறுத்த பகுதிக்கு அப்பாலிருந்து சின்னஞ்சிறு சிவப்புப் பொட்டு. கடல் எங்கும் குங்கும வண்ணம் பிரதிபலித்தது.

“அப்பா, சூரியன் நம்மைப் பார்த்துச் சிரிக்குது.”

“நமக்கு வெளிச்சம் காட்டுதுடா.”

மீண்டும் நாலு திசையும் ஓட்டி ஓட்டி அவர்கள் மீன் பிடித்தார்கள். வஞ்சிரமோ, வெளவாலோ சிக்கவில்லை. “இன்னும் ஒரு மைலு உள்ளாலே போவோமே!”

மகன் முத்துப்பாண்டிக்கு அக்காளின் குரல் கேட்டது; பிள்ளைத்தாச்சியின் ஆசை, கடலுக்குள் ஒரு மைல் போகத் தூண்டியது.

“ஏண்டாலே, நாம என்ன மோட்டார் போட் விடறோமா? சுறு வந்தா உன்னையும்

என்னையும் கட்டுமரத்தையும் முழுங்கி ஏப்பம் விடுண்டா;''

போக ஆசைதான். ஆனாலும் மகன் மீது உள்ள பாசம்; பதினைந்து வயசில் தனக்குத் தோள் கொடுத்துக் கடலைக் கலக்கும் மகன் மீதுள்ள அன்பு எச்சரிக்கை செய்தது;

''கடல்லே பொளப்பு இருந்தாக் கடல்லே சாவு. கடன்லே பொளப்பு இருந்தா கடன்லே சாவு.''

மகன் பேசிய வேதாந்தம் அநுபவ உண்மை. ஆனாலும் பரந்த கடலின் உப்பினைவிடக் கரிப்பாக இருந்தது; ''நமக்கு இன்னிக்கு வஞ்சிரமும் கெடைக்காது, வெளவாலும் கெடைக்காது. பத்தோ இருபதோ ரூபாய்க்கு மத்த மீன்களைப் புடிச்சுப் பார்க்கலாம்'' என்றான் தந்தை.

''புடிச்சா, அக்கா கேட்ட மீனு இல்லே, வீசின கையும் வெறுங் கையுமாகக் குடிசைக்குப் போகலாம்;''

வலை வீசியபோதெல்லாம் ஏதேதோ மீன்கள் அகப்பட்டன; அவற்றைக் கடலிலேயே தூக்கி எறிந்து விட்டார்கள்; இனி?

''இனிமேல் எறியக்கூடாது.'' இது தந்தை கட்சி.

''இனியும் எறிவேன்.'' இது மகன் கட்சி;

சூரியனின் பொற்கதிர்கள் நீலத்திரைக் கடல் மீது ஒளி பாய்ச்சின; கண்ணுக்கு எட்டிய தூரம் தங்கத் தரங்கங்கள்.

''சொன்னதைக் கேளுடா.''

முத்துப்பாண்டி பிடியைப் பற்றவைத்து இழுத்தான்; தெம்பாக இருந்தது. மகனை வழிக்குக் கொண்டுவர, ''மிச்சப் பீடியை இங்கனே கொடு'' என்றான் ஏகப்பன்;

ஒருவர் மாற்றி ஒருவர், பீடியைப் புகைத்தார்கள். நெஞ்சுக்குள் குதுகுதுப்புப் புகுந்தது;

வலைக்குள் ஏதேதோ விற்பனை மீன்கள் சுற்றிவந்தன; அத்தனையும் உதறிவிட்டான் முத்துப்பாண்டி. மகனைக் கோபிக்க முடியவில்லை.

இச்சமயம் நாற்பதடி தூரத்தில் பெரிய வஞ்சிரம் ஒன்று தெரிந்தது. அது அகன்ற கடல் என்பதையும் மறந்தான்; தன் வயது பதினைந்து என்பதையும் மறந்தான். கட்டுமரத்திலிருந்து பாய்ந்து தண்ணீருக்குள் மூழ்கிப்போய் அதனைப் பிடிக்க முயன்றான், முத்துப்பாண்டி. தமக்கையின் குரலை மட்டும் மறக்கவில்லை.

''அறிவு கெட்ட பயமவனே! நடுக் கடல்லே இப்படிக் குதிச்சா, சுறு வந்து இடுப்பு எலும்பைப் பாக்குவெட்டி மாதிரி வெட்டி எடுத்துடுண்டா. செவந்தி புருஷனைக் கடிச்சுக் கடல் தண்ணியே ரெத்தச் செவப்பா மாறலே?''

ஏகப்பனின் பதற்றமான பேச்சு அவனுக்குத்தான் கேட்டது. முத்துப் பாண்டி கடலுக்குள் மூழ்கிப் போனான்.

எங்கே காணோம்? பரபரப்பாக நாலு பக்கமும் சுற்றிப் பார்த்தான். பாசம் துடித்தது. பயம் பீரிட்டது. செய்வது அறியாது கட்டுமரத்தில் நின்று சுற்றுமுற்றும் பார்த்தான்.

குதித்த முத்துப்பாண்டி வஞ்சிரத்தை ஆழ்கடலுக்குள்ளிருந்து வந்து வாலைப் பிடித்து இழுத்தான்; வஞ்சிரத்துக்குத் தண்ணீரில் யானை பலம்;

மீனையும் மேற்பரப்பில் காணோம்; மகனையும் கடல் பரப்பில் காணோம்.

'ஆழ்கடலுக்குள் இழுத்துப் போய்விட்டதோ?' ஏகப்பனுக்கு நடுக்கம். கட்டுமரத்தை விட்டுக் குதித்தால், அதனை மீண்டும் தேடிப் பிடிப்பது சிரமம். மகனைக் கண்டதும் அவன் பக்கம் கட்டுமரத்தை ஓட்டாவிட்டால் மகனுக்கு ஆபத்து. தகப்பன் தலை சுழன்றது.

கெட்ட வார்த்தை சொல்லி அருமை மகனை வைதான்;

நூறு கஜ தூரத்துக்கு அப்பால் முத்துப்பாண்டியின் தலை கறுப்பாகத் தெரிந்தது; தண்ணீருக்கு மேலே ஒரு கை அசைவதும் தெரிந்தது; அங்கு மீனுக்கும் மகனுக்கும் உயிர் மரணப் போராட்டம் நடந்தது.

விரைவாகக் கட்டுமரம் நகர்ந்தது. துடுப்புக்குப் பதிலாகக் கையைத் துடுப்பாக்கி வேகமாக விரைந்தான்.

மீன் கடலுக்குள் இழுக்க, முத்துப்பாண்டி தண்ணீருக்கு மேலே இழுத்தான்.

நல்ல சந்தர்ப்பத்தில் களைத்துப் போன மகனைப் பார்த்து, ''அதை விட்டுத் தொலைடா. சாவறதுக்கா கடலுக்கு வந்தோம்?'' என்று கத்தினான்;

பேச முடியாமல் மகன் ஒரு கையால், ''வா வா வா'' என்று சைகை செய்தான்.

அங்கு வருவதற்குள் மீண்டும் மகனின் உருவம் மறைந்தது.

ஐந்து நிமிடத்தில் வஞ்சிர மீனை, நீருக்கு மேலாக இழுத்து வந்தவன் களைத்துவிட்ட சோர்வு தெரிந்தது. அப்பன் கையில் மீன் வாலைக் கொடுத்துவிட்டு, கட்டுமரத்தில் ஏறி விழுந்தான்;

''ஏண்டாலே, உனக்கு உசிரு இருக்கா?''

பேச முடியவில்லை. 'இழுத்துக் கட்டி மரத்தில் போடு' என்று சைகை செய்தான்.

மீன் ஆறடி நீளம். பத்திருபது கிலோ எடை தாளும்; கட்டுமரத்தைக் கட்டவிழ்த்து விடுவதுபோன்று துள்ளியது; துடுப்பால் இழுத்துக் கயிற்றால் கட்டிக் கட்டுமரத்தில் தூக்கிப் போட்டான் ஏகப்பன்.

தன் உயிரைப் பணயம் வைத்துப் பிடித்த பெருமிதம் முத்துப்பாண்டி முகத்திலிருந்தது.



''மயக்கமா இருக்குதப்பா.'' மெல்லிய குரலில் பேச்சுப் பிறந்தது.

மகனுக்குப் பிடியைப் பற்றவைத்து இரண்டு தம் இழுத்துப் பக்குவமாக்கிக் கொடுத்தான். போராடிய மீனுல் இன்னும் துள்ள முடிந்தது. போராடிய முத்துப்பாண்டிக்கு உடலை நகர்த்த முடியவில்லை. பேச முடிந்தது.

''எம்மா ஆழம் இளுத்துப் போச்சுதுடா?''

''பத்துப் பதினஞ்சுபாகம் கடலுக்குள்ளே.''

''ஏன்டா, சாகத் தெரிஞ்சயே!''

''எத்தினி நாளா அக்கா கேக்குது. நம் மாலே முடியலையேன்னு அவமானமா இருக்குது. குதிச்சேன்.''

சொல்லில் வீருப்பு இருந்தது போன்று அடுத்து வேண்டுதல் ஒன்றும் பிறந்தது.

''யப்போவ், கடல்லே தனியாக் குதிச்சு நான் மீனைப் புடிச்சதா அம்மாகிட்டே சொல் லாதே.''

தை வீருப்பாச் சொல்ல நினைத்ததோ அந்த நெஞ்சத்தில் ஒரு சவுக்கடி விழுந்த மாதிரி இருந்தது மகன் பேச்சு.

''உம்!''

''சத்தியமாச் சொல்லாதே. சொன்னே, நாளை முதல் என்னைக் கடலுக்கு அம்மா அனுப்பாது. அப்பாலே சங்கரன் மாமனோட தான் வரவேணும் கடலுக்கு.''

அருகே துடிக்கும் வஞ்சிரத்தைவிடச் சங்கரன் மாமா பெயரைச் சொன்னதும் பயந்து ஏகப்பன் சும்மா இருந்தான். லாபத்தில் பாதி போய்விடும். சோம்பேறியைக் கட்டிக் கொண்டு மாரடிக்க முடியாது.

''சத்தியமா நீ புடிச்சதாச் சொல்லலே.''

''நீயே கரை நோக்கித் துடுப்பை வலிச்சுக் கிட்டுப் போ.''

கட்டையோடு கட்டையாக வஞ்சிரத்தின் மீது காலைப் போட்டு அழுத்தியபடி படுத்து விட்டான் முத்துப்பாண்டி.

வரும் வழியில் கொஞ்சம் நெத்திலி, வெளவாலு மீன் இரண்டு கிலோ அளவு கிடைத்தன.

''தூக்கிப் போடுப்பா கடல்லே. இன்னிக்கு வஞ்சரம் ஒண்ணுதான் நம்ம சரக்கு!''

முத்துப்பாண்டி குரலில் வெற்றிச் சங்கநாதம் ஒலித்தது. பிடித்த சிறு மீன்களை முத்துப்பாண்டி அலட்சியமாகக் கடலில் எறிந்தான்.

கட்டுமரம் கன வேகமாகக் கரைக்குச் சீறி வந்துகொண்டிருந்தது.



அங்கங்கே கட்டு மரங்களும், கட்டுமஸ்தான மீனவர்கள் கூட்டமும் கடலில் சூரிய புள்ளி புள்ளியாக எட்ட எட்டத் தெரிந்தன. கடலுக்குப் போனவர்கள் கரையை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். பல கட்டுமரங்கள் கரைக்கு வந்து கூடை கூடையாக மீன்களை இறக்கிக் கொண்டிருந்தன.

வாடிக்கையாக மீன் வாங்கும் முதலாளி சடையப்பன் கணக்குப் பிள்ளை அங்கே இல்லை. கடலில் இருந்தபடியே ஏகப்பன் கண் பீச்சு ரோட்டைப் பார்த்தது. மஞ்சள் கார் நின்றிருந்தது.

''லே, முத்துப்பாண்டி, பீச்சு ரோட்டில தெரியறது மீன் மொதலாளி காரு. ஊதோ மஞ்சள் நெறம். எறங்கி ஓடிப் போய் அதை நிறுத்துடா, முதல்டுல.''

கரைக்கு வருவதற்குள் நீரில் குதித்து நீந்தி மணலில் ஓடினான். வேகமாக ஓடோடி வந்தான் முத்துப்பாண்டி.

உடம்பெல்லாம் மணல் ஒட்டிக்கொண்டிருந்தது. கரிய உடம்பில் வெண் மணல் தகதகத்தது.

முத்துப்பாண்டி ஓடி வருவதைப் பார்த்த முதலாளி, ''வண்டியை நிறுத்து! ஏகப்பன் மகன் ஓடி வருறான்'' என்றார். உடன் இருந்த கணக்குப்பிள்ளையும், ''நிறுத்து'' என்றார்.

சாலையை விட்டுக் கார் ஓரமாக நின்றது. முத்துப்பாண்டி ஓடிவந்தவன் மூச்சு இரைத்தது. ''மொதலாளி, எங்கப்பாரு ஒங்களைப் பார்க்கணுமாம். காரை நிறுத்தி ஒங்களை இருக்கச் சொன்னாரு. ஒங்களை அவசியம் கண்டுக்கிடணுமாம்.''

கணக்கப்பிள்ளை, ''ஏண்டா முத்துப்பாண்டி, என்னடா, இன்னிக்கு வேட்டை வலுவா?'' என்று கேட்டார்.

''ஒரே ஒரு மீனுதான்! வேறெ சரக்கு ஏதும் இல்லே.''

முத்துப்பாண்டிக்குச் செய்தியை முதலாளியிடம் சொல்லிவிட்டதில் மகிழ்ச்சி. குடிசைக்குப் போய்த் தன் அக்காளிடம் சொல்ல வேண்டும். எடுத்தான் ஓட்டம்.

'வருகிறது வஞ்சிர மீன்.' இதைச் சொல்ல வேண்டாமோ?'

அவன் ஆவலோடு குடிசையை நோக்கி ஓடினான். பிள்ளைத்தாச்சி அக்கா குழல் பிட்டுத் தின்றுகொண்டு காலை நீட்டியபடி உட்கார்ந்திருந்த தமக்கையிடம், ''அக்கோவ்! வஞ்சிரம் மீனு ரொம்பப் பெரிசு புடிச்சோம்...நானும் அப்பனும் புடிச்சோம்'' என்றான் பெருமிதமாக.

கையிலிருந்த குழாய்ப் பிட்டுக் காசு போட்டு வாங்கியதாகத் தெரியவில்லை. அதனைத் தூக்கிக் கோழிக்குப் போட்டாள், குதூகலத்தோடு.

ஆண் குழந்தை பெற்றதைப்போல வஞ்சிர மீன் என்னும் வார்த்தை அத்தனை மகிழ்ச்சியைத் தந்தது.

குடிசைக்குள்ளிருந்து தாயார் வந்து, ''ஏண்டா பெரிய வஞ்சிரமா?'' என்று மகன் கையைப் பிடித்துக்கொண்டு கேட்டாள்.

மகன் கண்ணில் மகிழ்ச்சி; தாய் கண்ணில் ஆனந்தம். செயற்கரிய செய்த வீரனாகத் தாய் கண்ணில் தோன்றினான்.

''ஆமாம்மா. நம்ம வீட்டுக்குக் கறிக் குழம்புக்குப் போகப் பதினஞ்சு ரூபாய்க்கு மேலே வித்திடலாம்!''

மறுகணம் அவனது தாய் விறுவிறுவென்று நடந்தாள். நேராக இபுராகிம் சாயபு கடை முன் வந்து நின்றாள். அங்கே மீனவர் கூட்டம் கூட்டமாகக் கடைச் சாமான், மசாலாப் பொருள்கள் வாங்கிக் கொண்டிருந்தனர்.

வஞ்சிர மீனைத் தூக்கிக்கொண்டு மணலில் நடந்த ஏகப்பன் காரின் பக்கம் வந்தான். முதலாளியைக் கும்பிட்டான்.

''உம் மகளுக்குத் தலைப்பிரசவம். அந்தச் செலவுக்கு முன் பணம் வேணும். நூறு ரூவா; அதைத்தானே சொல்ல வந்தே?''

''ஆமாங்க! 150 ரூபா வேணுமுங்க.''

''கையில் இருக்கிற வஞ்சிர மீனைக் கார் டிக்கியிலே வை. இதுக்காக நானும் ஒரு வாரம் பீச்சு ரோட்டிலே நாயாச் சுத்தறேன். மீன் வியாபாரிக்கு வஞ்சிரம் மீன் கெடைக்கலையான்னு காறித் துப்புறுங்க வீட்டிலே. உம்! வை. சடுதியா?''

சொன்னவர் முதலாளி; முன் பணம் தரப் போகிறவர். கேட்டவன் தொழிலாளி, முன் பணம் எதிர்பார்க்கிறவன்.

''என் புள்ளைத்தாச்சிப் பொண்ணுக்காக.''

முதலாளி, ''உன் வீட்டுக்குக் கொண்டு போ. கண்ணுலக் கடன் முந்நூறு பாக்கி நிக்குது. அதைச் சாயங்காலம் கொண்டு வந்து குடுத்திடு. இல்லே, காலையிலே கட்டுமரம் கடல்லே இறங்கிப் போகாது. என் லாரியிலே ஏறிப் போகும்'' என்று அமைதியாகச் சொன்னார்.

மகன் முத்துப்பாண்டி கடலுக்குள் நூறு அடி மூழ்கிப் போய் மரணப் போராட்டம் நடத்தியது யாருக்காக?

கணக்கப்பிள்ளை, ''ஏகப்பா, நீ பொளைக்கத் தெரியாதவன். வா இப்படி. உன் மக பிரசவத்துக்கு 150 முன் பணம் வாங்கித் தாரேன். இப்போ வஞ்சிரத்துக்கு அம்பது ரூபா தாரேன். இந்த மீனுக்காக ஒரு வாரமா அலையுறோம். நம்ம முதலாளி வைப்பாட்டி புள்ளைத்தாச்சி. ஒரு வாரமா நாயா அலையுறோம். நீ வந்தே தெய்வம் மாதிரி'' என்று நயம்படப் பேசினார்.

''50 ரூபாய் வெலை பெரிசு இல்லீங்க. இதில் பாதி மீனு இனுமாத் தர்றேன்.''

''சே முட்டாள்!''

நூறு ரூபாயை அவன் கையில் வைத்துவிட்டு, மீனைத் தூக்கி வண்டிக்குள் போட்டார், காரியவாதி. கடலைவிடக் கரையில் நின்ற அவன் நிலை இல்லாத நிலை. கலங்கி நின்றான்.

''முதலாளி, சாயங்காலம் இவனுக்கு 150 ரூபா கடன் குடுக்கறேன்.''

''சரி. சரி. விடப்பா வண்டியை.''

கார் வேகமாக நகர்ந்தது.

உயிரற்ற ஓடம்போல ஏகப்பன் கையில் கரன்சியைப் பிடித்தபடி தள்ளாடித் தள்ளாடி வந்தான். அவன் தலை குனிந்து இருந்தது. மனம் ஒடிந்து போயிருந்தது.

அவன் காதுக்குள் முத்துப்பாண்டியின் சொற்கள் மட்டும் கணீரென்று விழுந்தன.

''கடல்லே பொளைப்பு நடந்தா, கடல்லே சாவு; கடன்லே பொளைப்பு நடந்தா, கடன்லே சாவு.''

குடிசைக்கு வந்த சமயம் அங்கே, மீனுக்கு வேண்டிய மசாலாச் சாமான்கள் இருந்தன. மனைவி மக்கள் ஆவலோடு குழுமி இருந்தார்கள்.

பலசரக்குக் கடை இபுருகிம் சாயபுவும் வஞ்சிரத்தில் பங்கு போட்டுக்கொண்டு போக, வந்து உட்கார்ந்திருந்தார்.

ஏகப்பன் கையில் நூறு ரூபாய் நோட்டு இருந்தது.

பணம் வைத்திருப்பவர்களுக்குப் பாசம் கொள்வது சுலபம். பாசம் வைத்திருப்பவர்களுக்குக் கண்ணீர் வடிப்பது சுலபம்.

ஏகப்பனும் முத்துப்பாண்டியும் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தார்கள்.

இபுருகிம் சாயபு கடனாகக் கொடுத்த மசாலாச் சாமான்களை எடுத்துக்கொண்டு தம் கடைப்பக்கம் போய்க் கொண்டிருந்தார். ※




டப்பா அரிசியை முறத்தில் கொட்டி ஆத்திரம் கொப்புளிக்கப் பட்பட்டென்று கனகு புடைக்கிறாள். கடுகினும் கடுகாகக் கொள்ளி எறும்புகள். ஓர் அரிசிக்கு ஒரு நூறு இருக்கும் போல் இருக்கிறது. நறுநறுவென்று பொடியாக்கித் தொலைத்து விடும் பெரும்படை. தங்கள் ஆக்கிரமிப்புக்கு எதிர்ப்பு வந்துவிட்டதென்று கண்டதும் அவள் கைகளில் ஏறுகின்றன. துளித் துளி ஊசிகளைப் போல் தங்கள் வலிமையைக் காட்டுகின்றன.

சனியன்கள்! மனிதரை எல்லா விதத்திலும் எல்லாமாய்ப் பிடுங்குகின்றன. முறத்தைக் கீழே வைத்துவிட்டுக் கண்களைத் தேய்த்து அந்த அற்பங்களைத் தேய்த்து வதம் புரிகிறாள். ''கிலோ ஐந்து ரூபாய் கொடுத்து வாங்கி வந்தால், எந்த இடுக்கோ சந்தோ பார்த்து இப்படியா படை திரண்டு வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளும்? வெயிலில் வைக்க முடியாது. தின்னும் பண்டமானால் காக்காயும் குருவியும் அணிலும் படையாக வந்து சூறையிடும்!''

படார் படாரென்று முறமும் கையும் ஓசையிட, அரிசி குதிக்கிறது. அரிசியோடு எறும்புப் படையும் சேர்ந்து குதிக்கிறது.

''மீனாம்மா! மீனாம்மா!''

'இந்த வெயிலில் யார் வந்திருப்பார்கள்? தபால்காரன் கடிதாசை விட்டெறிந்து விட்டுப் போயிருக்கிறானா?'

கதவடியில் எண்ணெய்த் தூக்குடன் ரேவதியின் அம்மா நிற்கிறாள். ''வாங்கம்மா! உள்ளே வாங்க! ரேவதியம்மா தானே?''

''ஆமாம், ஸ்டோருக்கு வந்தேன், சர்க்கரை வாங்கிட்டுப் போக. பாமாலின் குடுக்கிறாங்க. ரெண்டு கார்டிருக்கு. இவ்வளவு தூரம் வந்திட்டேன். இருபது ரூபாய் குடுக்கிறீங்களா? வீட்டுக்குப் போய் எடுத்திட்டு வரதுன்னா, எண்ணெயிருக்குமோ என்னவோ? உங்க நெனைப்பு வந்தது சட்டுனு.''

''அதுக்கென்ன, வாங்கம்மா, உள்ளே. வாசலிலேயே நிக்கிறீங்களே!''

கனகு உள்ளே சென்று பெட்டியடியில் வைத்திருக்கும் ரூபாய் நோட்டுக்களை எண்ணி, இரண்டு நோட்டுக்களைக் கொண்டு வருகிறாள்.

''சர்க்கரைப் பையை வச்சிட்டுப் போங்கம்மா, இங்கே விட்டு வீடு கட்டிட்டுப் போன பிறகு இப்படி ஒரு சந்தர்ப்பம் வந்துதான் வந்திருக்கீங்க.''

அவளை அனுப்பிவிட்டு உள்ளே திரும்பும் போது, தபால்காரன் இரண்டு கடிதங்களைக் கொடுத்துவிட்டுச் செல்கிறான். தன் பையன் எழுதியிருக்கிறானோ என்று பார்க்கிறாள். இல்லை; இரண்டும் பெண்களிடமிருந்து வந்திருக்கின்றன. மூத்த பெண்ணை மூன்று வருஷங்களுக்கு முன் திருமணம் செய்து கொடுத்து அவளுக்கு ஒரு குழந்தை இருக்கிறது. அஞ்சல் துறையில் சாமானியமாகச் சம்பளம் வாங்கும் மருமகன். வடஆர்க்காடு மாவட்டச் சிற்றூரிலிருந்து எழுதியிருக்கிறாள். ''சுமதியின் அப்பா துபாய்க்குப் போவதென்று உறுதியாகிவிட்டது. விசாவும் இன்னும் ஒரு வாரத்தில் கிடைத்துவிடுமாம். இங்கே வேலையை விட்டுவிட்டார். அவர் அங்குச் சென்று, என்னை அழைத்துக் கொள்ள ஆறு மாசம், ஒரு வருஷம் போலாகுமாம். வீட்டைக் காலிசெய்து வீட்டுச் சாமான்களை எல்லாம் கட்டி அங்குப் போட்டு வைக்கலாம் என்று தீர்மானம் செய்திருக்கிறோம். அப்பாவை இரண்டு நாள் லீவு போடச் சொல்லிவிட்டு நீயும் கூட வந்தால் எனக்கு உதவி

யாக இருக்கும். மீனா ரத்தினகிரியில் சுகமாயிருக்கிறாளா? கடிதம் வருகிறதா? ராமு நைஜீரியா போய் ஒரு கடிதம் கூட எங்களுக்கு வரவில்லை. உங்களுக்கு வந்திருக்கும்.''

மனத்தில் இனம் புரியாத கவலை படருகிறது. மூன்றாண்டுகள் வேலையில்லாத பட்டதாரியாகத் திரிந்து விட்டு, சென்ற மாதம் புறப்பட்டுப் போனான். போய்ச் சேர்ந்து இன்னமும் கடிதம் வரவில்லை. பம்பாயிலிருந்து புறப்பட்டுப் பத்து நாட்களாகியிருக்க வேண்டும். இன்னமுமா கடிதம் வர நாட்களாக வில்லை?

மற்றொரு கடிதத்தைப் பிரிக்கிறாள். ஆறு மாதங்களுக்குமுன் திருமணமாகிச் சென்ற மீனா எழுதியிருக்கிறாள். கருவுற்றிருக்கிறாள் என்பது முன்பே வந்த செய்தி. இங்கிருந்து வளையல்கள் வரிசைகளுடன் சென்று பூட்டி அழகு பார்த்து விட்டுக் கூட்டி வரவேண்டும். அவர்கள் வீட்டு வழக்கமாம். மீனாவை எம். ஏ. வரை படிக்க வைத்தார்கள். மருமகன் வங்கியில் வேலை பார்க்கிறான். வசதியாக வாழ முடியும்.

''மாமியார் வளையல் மூன்று சவரனுக்குக் குறைந்தால் எடுப்பாக இருக்காது என்று சொல்லுகிறார். நான்கு முத்தும் நான்கு சிவப்புமாக வைத்துக் கட்டியதாக இருக்க வேணுமாம். என் நெக்லேசுக்குப் பொருத்தமாக இருக்கட்டும். பூ முடிக்க ஒரு புடைவை, வளையலடுக்க ஒரு புடைவை வாங்குவது இவர்கள் வழக்கமாம். காஞ்சிபுரம் பட்டே வாங்கி விடுங்கள். சரிகை வேண்டாம். கலியாணத்தின்போது செய்த அதிரசம் நன்றாக இல்லை என்று இன்னும் குறை சொல்கிறார்கள். சர்க்கரை இடித்து ஐம்பத்தோர் அதிரசமும் மிக்ஸ்சரும் செய்து கொண்டுவா. இப்போது அங்கே எலுமிச்சை சீசனாக இருக்குமே? நீ தயாரிக்கும் சர்பத் நன்றாக இருக்குமென்றேன். இரண்டு பாட்டிலில் செய்து எடுத்துவா. நல்லெண்ணெய் இங்கே கிடைப்பதில்லை. சுத்தமான நயம் எண்ணெய் நான்கு கிலோ வாங்கி எடுத்துவா.'' இப்படிப் பட்டியல் நீள்கிறது.

கனகுவுக்குத் தலையைச் சுற்றுகிறது.

சரசுவின் கல்யாணத்துக் கடனை அடைத்து மூச்சு விடுமுன் இவளுக்குக் கல்யாணம் திகைந்துவிட்டது. அவளைக் கல்லூரி நுழைமுகத்தோடு நிறுத்தி விட்டார்கள். இவள் நன்றாகப் படித்தாள். எம்.ஏ. முடித்துக் கொஞ்ச நாள் வேலை செய்யட்டும் என்று எண்ணியிருந்தார்கள். வேலையொன்றும் நல்ல வருவாயைத் தருவதாகக் கிடைக்கவில்லை. குழந்தைப்பள்ளி ஒன்றில் நூற்றிருபது ரூபாய்ச் சம்பளத்துக்குப் போனாள். அண்ணன் குழந்தையைச் சேர்க்க வந்த பிள்ளைக்கு இவளைப் பிடித்துப் போயிற்று. அவனும் எம்.ஏ. படித்து வங்கியில் வேலையாக இருந்தான். வரதட்சிணை வாங்க மாட்டேன் என்றான். இதற்கு மேல் பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுக்க மாட்டோம் என்று சொல்ல முடியுமா?

வாழைப் பழத்து ஊசிகளாக அவனுடைய அம்மா இறக்கிய நிபந்தனைகளைத் தள்ள முடியவில்லை. கனகம் இப்போது தனது கௌரவத்தையும் மங்கலத்தையும் கண்ணாடி வளைகள் கொண்டும் 'கவரிங்' செயின் கொண்டும் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாள். அதீத வட்டிக்குக் கடன் வாங்கி முழுச் சம்பளத்தையும் ஓய்வு பெற இருக்கும் இரண்டாண்டுக் காலமும் கண்ணால் பார்க்க இயலாதபடி நெருக்கியிருக்கிறார்கள்.

இந்த நிலையில் பையன் எங்கோ நைஜீரியாவில் பிழைக்கச் சென்று பணம் அனுப்பப்போவது ஒன்றுதான் ஆறுதல்.

இதெல்லாம் எம். ஏக்காரிக்குத் தெரியாதா? இந்த வீட்டு இரத்தமே அவள் உடம்பில் ஓடவில்லையா? மாமியார் சொல்கிறாளாம், இவள் எழுதுகிறாள்! உள்ளம் ஓய்ந்து போகிறது. அரிசியும் எறும்பும்



இந்தப் பெரிய எறும்புக்கடிகளுக்கு முன் பொருட்டாகத் தோன்றவில்லை.

எண்ணெய் வாங்கிக் கொண்டு ரேவதியின் தாய் வந்துவிட்டாள். ரேவதியும் மீனாவும் ஒன்றாகப் படித்தவர்கள்; இணைபிரியாத் தோழிகளாக இருந்தார்கள். வரதட்சிணை கொடுத்துக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டோம் என்று கல்லூரிக் காலத்தில் கருத்தரங்கு கூட்டிப் பேசினார்கள். அந்த நாட்களில் சரசுவுக்கு மாப்பிள்ளைக்குக் கையில் இரண்டாயிரத்தைந்நூறு கொடுத்துத் திருமணம் செய்தபோது இவர்கள் இருவரும் எப்படி நையாண்டி செய்தார்கள்! 'தன்மானம் இல்லாத பூச்சிகள்! நானானால், இந்தக் கல்யாணம் வேணாம். அவரும் பி.யு.சி. தானே? எதுக்குக் கையில் பணம்?' என்று மீனா கேட்டாள். சரசுவோ முகப் சுண்டச் செய்தாள். கடைசியில மாப்பிள்ளை வீட்டில், "ஐந்து சேலை வாங்க வேண்டும், இருபது சவரனுக்குக் குறைந்தால் எப்படி? மாப்பிள்ளைக்கு மோதிரம் போடவேண்டும்?" என்றெல்லாம் பட்டியல் கொடுத்தபோது வாயே திறக்கவில்லை.



"என்னை அப்படியெல்லாம் பழித்தாளே! இப்ப இவளுக்கு ஆயிரம் ஆயிரமாச் செலவு செய்யறாங்க" என்று சரசு பொருமினாள்.

தங்கை வீட்டில் டி.வி.யும் ஃபிரிஜும் இன்னும் பிற வசதிகளும் இருக்கின்றன. திருமணமான மறுநாளே கணவருடன் ஸ்கூட்டரில் சவாரி சென்றாள். இந்த அஞ்சல் அலுவலக எழுத்தர் வாழ்வில் எந்நாளையில் இதெல்லாம் வரும் என்று தான் குடைந்து எடுத்து அந்தப் புருஷனை அரபு நாட்டுக்கு ஓட்டுகிறாள் என்பது வெளிப்படை.

இந்தப் பெண்கள் எல்லாரும் வாழ்க்கையில் எதைப் பெரிதாக நினைக்கிறார்கள்?

"நல்ல வேளையாகக் கூட்டம் இல்லை. வெளிக் கடையில் எண்ணெய் பதினாறு பதினெழு விற்கிறது. அதனால்தான். மீனாகிட்டேருந்து கடிதாசி வருதாம்மா? ராமு துபாய்க்குப் போய்ட்டான்னு சசி சொன்னாளே; நெசமா?"

"துபாயில்ல. நைஜீரியா போயிருக்கிறான். போய்ச் சேர்ந்து கடிதாசியே வரலை. கவலையாயிருக்கு. ரேவதிக்கு எதானும் கல்யாணம் கூடறாப்பல இருக்குதா?"

"அதை ஏன் கேக்குகிறீங்க? அவப்பா இருக்கிறபோதே நல்லபடியாக் கல்யாணத்தை முடிச்சிருக்கலாம். ஹூம், நான் வரதட்சிணை குடுத்த கல்யாணம்ணுக் கட்டிக்க மாட்டேன். அப்படி இப்படின்னு குதிச்சா. அப்பாவும் சந்தோஷப்பட்டுப் பூரிச்சுப் போனார். இப்ப வேலையா இருக்கிறா. மாசம் எட்டு நூறு சம்பாதிக்கிறா. ஆனா, அவளோடொத்த எல்லாருக்கும் கலியாணமாயிட்டுது. கிட்டி முட்டி எதானும் இடம் வந்தா இந்த வரதட்சிணையிலே அடிப்பட்டுப் போகுது."

''ஆமா. கையில் வாங்கலேம்பாங்க. மாப்பிள்ளை வீட்டாரு டில்லில இருந்தா வந்து போகச் செலவு, மாப்பிள்ளை டிரஸ், மோதிரம் அது இதுக்கெல்லாம் குடுக்கணும். அது வரதட்சிணை யோட சேர்த்தியில்லே. பிறகு, இந்த இடத்தில்தான் கல்யாணம் பண்ணணும்னு அவுங்க சொல்றதைக் கேக்கணும். வரதட்சிணை இல்லையேங்கற ஒரு துருப்புச் சீட்டை வச்சிட்டு அவங்க மேலாவே ஆடிட்டிருப்பாங்க. நம்ம பொண்ணுங்களும் கூட ஆடுவாங்க!''

''அது சரிதான். அதுக்குன்னு எந்தப் பாதுகாப்பும் இல்லாம இந்தக் காலத்தில பொண்ணை எப்படி வச்சிட்டிருக்கறது? ரேவு ஆபீசு விட்டு வரவரையிலும், உண்மையைச் சொல்றேன், மனசு திக்குதிக்குனு அடிச்சிட்டிருக்கு. வெளியிலே எறங்கினுக் கண்ணுல படறதெல்லாம் ஆணும் பொண்ணும். இந்த ஒரே காரியத்துக்குத்தான் பொறந்திருக்கறதா நினைக்கிறுங்க. வாழ்ந்து முடிச்சு எல்லாம் போனவங்களுக்கே அந்தப் படங்களையும் இன்னெண்ணையும் பார்க்கக் கூசிப்போவுது.''

''அது என்னவோ உண்மைதாம்மா. ஒரு வகையில் அத்தப் பாத்தா நமக்குப் பொறுப்பு விட்டுதுன்னு தோணும், ஆனு, பொறுப்பு எங்க விடுது? மீனு இப்பக் காகிதம் எழுதியிருக்கா, பாருங்க, வளையல் காப்புக்கு மூணு சவரன் முத்துவளையல் போடணும்னு மாமியார் சொல்றளாம். வளையலடுக்க ஒரு சேலையாம், பூ முடிக்க ஒரு சேலையாம். சர்க்கரை இடிச்சு அதிரசம் வேணுமாம். நம்ம பொண்ணுதான் இப்படி எழுதியிருக்கா. எங்க போய்ச் சொல்ல? இவ எம். ஏ. படிச்சது, தன்மானம் அது இதுன்னு பேசின தெல்லாம் என்ன ஆச்சு? மாமியார் சொன்னு, இவ ஏன் எழுதணும்? நம்ம காலத்துலேல்லாம் இப்படியா இருந்தோம்?''

அந்த அம்மாள் புன்னகை செய்கிறுள். ''மாமியா நாத்தனு எறும்புக்கடியாப் புடுங்கிட்டே இருப்பாங்க. ஆனு அது இப்பப் போல உறவையே விரசமாக்கியிருக்கலே. வீட்டில எல்லாருக்குமா சக்தியிருக்கும்? மீனும்மா, இப்ப எங்க சசிக்கு, உறவு விட்டுப் போவக்கூடாதுன்னு நாத்தனர் மகளைத்தான் கட்டிருக்கேன், உங்க கிட்டச் சொல்றதுக்கு என்ன? ஏதோ நகை போட்டாங்க, கலியாணமாச்சு. இப்ப ரேவுக்குன்னு அவப்பா பார்த்துப்பத்துச் சவரன் நகை வச்சிருக்காரு. என் கம்மலைப் போடலாம்னு ஒரு பேச்சு முன்னமே சொல்லிவிட்டிருந்தோம். இவதான் வரதட்சிணை கேட்டா வேண்டாம், வயிரத் தோடு கேட்டா வேண்டாம்னு நிக்கருளே! மாலாவுக்கு, தோட்டைத் தனக்குக் குடுத்திடணும்னு இருக்கு. விளையாட்டாவே சொன்னேன், நீ இப்படி வாணும் வாணும்னு கடைசில, எங்கனுலும் காதல்வலையில விழப்போறேன்னு. அப்படீன்னு கல்யாணச் செலாவு இருக்காதேன்னு அவ எண்ணம். இந்தக் காலத்துப் பொண்ணுங்களுக்காகட்டும், புள்ளைங்களுக்காகட்டும் சுயநலம் ரொம்ப ஆயிட்டுது.''

ஒத்த மனங்கள் தம் தம் சுமைகளை இறக்கி ஆறுதல் கொள்வதில் நேரம் போவது தெரியவில்லை.

கனகு காபி கலந்து கொண்டுவருகிறுள்.

''அந்தக் காலத்தில முதல்ல நான் உண்டானப்ப, தாய் வீட்டில் ரொம்ப மோசமான நெலைமை. அப்பா இறந்து போயிட்டார். தம்பிக்கு அறுபது ரூபாய்தான் சம்பளம். கிராமத்தில ஆசுபத்திரி இல்லே; அஞ்சு வருஷம் கழிச்சுப் புள்ளைப்பேருயிருக்கு. டவுனிலேயே இருக்கட்டும்னுட்டாங்க. அம்மா வந்து எழு ரூபாய் பூவுக்கும், பத்து ரூபாய் வளையலுக்கும் குடுத்தாங்க. பூ முடிச்சதைப் படம் புடிச்சு மாட்டவேணும்னு அம்மாவுக்கு ஆசை. அவளுக்குக் கையில் பணமில்லே. மாமியாரிடம் சொல்லக் கூச்சம். எடுக்கவே யில்லே. ஆனு, பிரசவத்துக்கு அம்மா வந்திருந்தாள். சம்பந்தியும் சம்பந்தியும் மாத்தி மாத்தி ஆசுபத்திரிக்கு வந்தாங்க. பத்தியம் போட்டாங்க, எண்ணெய் முழுக்காட்டினுங்க, இப்படியா? நான் சொல்றேன்னு நெனைக்காதிங்கம்மா. மனித உறவுகளை ஏறி மிதிச்சுட்டு இப்ப ஆடம்பரப் பொருளுக்கான பணத்தாசை மனிசங்களை ஆட்டுது.''

''எனக்கு ஒண்ணுமே புரியலே. நேரம் ஓடிப் போச்சு. நான் நாளக்கிச் சசி கிட்டயோ மாலாவிடமோ பணத்தைக் குடுத்தனுப்பறேன். ரேவதியையே அனுப்பிச்சு வைக்கிறேன், ஞாயித்துக்கிழமை யன்னிக்கு. புத்தி சொல்லி அனுப்புங்க, லட்சியம் எதுவும் அப்படி வந்திடாதுன்னு.''

அவள் தலைமறையும் வரையில் வாயிலில் நின்று பார்க்கிறுள்.

ரேவதி, மீனுவைவிட எடுப்பும் துடிப்புமான பெண். அவள் உறுதியாக நிற்பதில் ஆச்சரியம் இல்லை. படித்துச் சம்பாதிக்கும் பெண்களேனும் உறுதியில் நிற்கத்தான் வேண்டும். அவள் வரட்டும், 'உன் தோழி இப்படி எல்லாம் எழுதியிருக்காள் பாரு' என்று சொல்லிக் காட்டவேண்டும். புருஷன் வீட்டு உப்பும் நீரும் ஒரு வருஷம் கூட உள்ளே போகவில்லை, பிறந்த வீட்டு ஈரமே போய்விடுமா?

நினைக்க நினைக்க ஆறவில்லை.

சொன்னபடி அடுத்த ஞாயிறு பணத்தைத் திருப்பிக் கொடுக்க யாரும் வரவில்லை. அடுத்த இரண்டு ஞாயிறுகளும் ஓடி, மாதக் கடைசி வந்து விட்டது. பையன் போய்ச் சேர்ந்த செய்தி மட்டும் தெரிந்தது. கவலை சற்று இறங்கினுலும் மற்றச் சுமைகள் பெரிதாகின்றன. மீனுவின் தந்தைக்கு ஆபீசில் லீவு எடுப்பதற்கில்லையாதலால், சரசுவின் வீட்டை ஒழித்து அவளையும் குழந்தையையும் கூட்டி வரக் கனகுதான் போக வேண்டும். முன்னதாக ரேவதியின் வீட்டைத் தேடிப் புதன்கிழமை பிற்பகல் கிளம்பிச் செல்கிறுள். பஸ் பிடித்து வீட்டைத் தேடிச் சென்று கண்டுபிடிக்கையில் மணி நான்கடித்து விடுகிறது.

**வீட்டு** வாயிலில் ரிக்ஷா நிற்கிறது. யாருக்கேனும் உடம்பு சுகமில்லையோ,

டாக்டர் வீட்டுக்குச் செல்ல இருக்கிறார்களோ என்ற எண்ணம் கணப்பொழுது தோன்றி மறைகிறது. உள்ளே கூசியவளாக அடி வைக்கிறாள். ஒரு படுக்கையறையும் உட்காரும் அறையும் சமையலறையுமாகக் கட்டப் பெற்ற சிறு வீடு. மொசையிக் தேய்க்கப் பெற்ற முன்னறையில் டி. வி., சோபா செட் எல்லாம் இருக்கின்றன.

''மாலு.. ! மாலா.. !'' மெதுவாக அவள் குரல் கொடுக்கிறாள். உள்ளிருந்து யாரும் வரவில்லை. ஆனால் லேசாக விசும்பல் ஒலி கேட்கிறது. திக்கென்ற உணர்வுடன் அடுத்த அடியை வைக்கலாமா, வேண்டாமா என்று குழம்புகிறாள்.

''அஞ்சு மணிக்கு ரிசப்ஷன். நான் ப்யூட்டி பார்லர்ல கொண்டை போட்டுட்டு வரேன்கிற சாக்கில், இங்க ஓடிவந்தேன். எனக்குச் சேரவேண்டிய பொருள் நீங்க குடுக்கலேன்னா எப்படி? இது என்ன நியாயம் அம்மா?''

''ஏ, நீ அம்மாட்டப் பேசாதே; இப்ப இந்த வீட்டு உரிமைக்காரர் அம்மாலே, நாங்க. நீ ஒழுங்கா நாங்க சொன்ன இடத்தில கௌரவமாக் கல்யாணம் பண்ணிட்டிருந்தா, உனக்குன்னு உங்கப்பா செஞ்சு வச்ச சங்கிலியும் ரெண்டு வளையலும் சேர்ந்திருக்கும். நீதான் இந்த வீட்டுச் சொந்தத்தையே, பொட்டை அழிச்சிட்டு, பேரையும் ரோஸ்மேரின்னு மாத்திக்கிட்டுக் கட் பண்ணிட்டியே? பெறகு சங்கிலி வளைன்னு வருமா?''

''மாலா, நீ ரொம்ப அத்துமீறிப் போறே. இந்த வீட்டுப் பொண்ணுங்கிற உரிமை எனக்குப் போகலே, அம்மா, ஏம்மா எல்லாத்தையும் பாத்திட்டு உக்காந்திருக்கே? என் பொருளை என்னிடம் குடு. ரசாபாசம் வேணும் ''

''என்னை என்னடீ செய்யச் சொல்றே? அன்னிக்குச் சுதந்தரம், உரிமை, தன்மானம்னே. நீ கல்யாணம் பண்ணிக்கோ. வாணும்ன்னு சொல்லலே. ஆனா, உம் பேரு, பொறந்ததிலேருந்து வந்த நம்பிக்கை எல்லாத்தையும் கழட்டி ஒரு நொடில போட்டுட்டுப் போயிட்டியே! நீங்க எப்படி வேணா இருங்க. தான் இப்படி மாறச் சம்மதிக்க மாட்டேன்னு சொல்லியிருக்க வேண்டாமா? நீ மனசோடு மாறியிருப்பியா? இது நிர்ப்பந்தந்தானே?''

''ஆமா, கையில நாப்பது குடு, முப்பது குடுன்னு கேக்கறுங்கல்ல? அதுக்கு இப்படித்தான் விமோசனம். சரி, நீங்க இப்படிக் கேட்டாக் குடுக்கமாட்டீங்க. நான் வாங்கறபடி வாங்கிக்கறேன்.''

விர்ரென்று நீலச் சேலைத் தலைப்பால் தலையை மூடிக்கொண்ட ரேவதி அந்த அறையைக் கடந்து வந்து வெளியேறுகிறாள். புழுக்கத்தினூடே 'இழையாக வருவது போல் நறுமணம் விசிறிச் செல்கிறது. ரிக்ஷாவில் அமருகையில் தலையை மூடிய முக்காடு நழுவி விழுகிறது. பெரிய கொண்டை முழுவதும் மல்லிகையும் கனகாம்பரமும் நட்சத்திரங்களாகச் சரிகைப் பொட்டுக்களுடன் தைக்கப்பட்டிருக்கின்றன. அந்த வீட்டை ஆற்றாமையுடன் பார்ப்பது போல் முகத்தை ஒரு கணம் திருப்புகிறாள். துணுக்குற்றுக் குலுங்குகிறது கனகுவின் உள்ளம். 'ரேவதியா அது? மாநிறமாக நீண்ட கண்களுடன் பரபரப்பும் சுறுசுறுப்புமாக விளங்கும் அந்தக் களையான முகமா இப்படியிருக்கிறது.'

'முன் நெற்றிச் சுருள்முடியும், கீற்றாக வளைந்த புருவமும், பொம்மைக் கண்களைப் போல் அகற்றி விடப் பெற்ற கண்களும், பளீரென்ற சிவப்பால் குவிந்தாற் போல் குறுகிய உதடுகளும், பொட்டில்லாத நெற்றியுமாக.... ரேவதியா இவள்? விலைக்கு வைக்கப்பட்ட காட்சிப் பொம்மை போல் முகம் மாறியிருக்கிறதே.'

மீனாவேனும் முன் கூந்தலைக் கத்தரித்துக் காதோரங்களில் கொண்டு வந்து வளைத்துக் கொண்டிருந்தாள். கண்களுக்கு மை தீட்டிக் கொள்வாள். ரேவதிக்கு ஒன்றிலும் நாட்டம் இருந்ததில்லை. பல நாட்களிலும் கூந்தல் பிரிந்து முகத்தில் விழ, ஒரு ஜோல்னாப்பையுடன் வந்து நிற்பாள். மீனாவின் திருமணத்தின்போது, முகூர்த்த நேரத்துக்குவந்துபெயர் பண்ணிவிட்டுப்போனாளே ஒழிய மாலையில் தலை நீட்டவில்லை. 'இதெல்லாம், 'ஸில்லியாயிருக்குடீ மீனா! என்னடி தலைச்சாமான்லாம் வச்சிட்டு?'' என்று கூட அவள் சொன்னதாக நினைவு.

அந்த ரேவதியா? அவள் பெயரை ரோஸ்மேரி என்று மாற்றிக் கொள்ளவும், அடியோடு மாறித் தனது அணிபணிகளுக்காக மட்டும் வீட்டில் வந்து உரிமை கோரவும் எப்படிச் சம்மதித்தாள்? திருமணம் என்ற முடிவு, ஒரு பெண் தன்னை எந்த வகையிலேனும் இழந்து விடுவது என்ற நாணயத்தின் மறுபக்கந்தானா? இதெல்லாம் திருமணம் என்ற கட்டாயத்துக்குள் வந்த பிறகு நேர்ந்திருக்கும் தொடர் நிர்ப்பந்தங்கள். கைப்பூணுக்குக் கண்ணாடி வேண்டியதில்லை.

''மீனும்மா? நீங்க எப்ப வந்தீங்க, மீனும்மா, ரேவுவப் பாத்தீங்களா? ' என்று அந்தத் தாய் கதறுவது போல் கூவும் ஒலியில்தான் திடுக்கிட்டுச் சுதாரிக்கிறாள் கனகு.

''பேரு, சொந்தபந்தம் எல்லாம் அடியோடு மாத்திக்கிட்டா. இந்த வீட்டுப் பொண்ணு, ரேவு இல்ல, அடி, நீ அவனையே கல்யாணம் கட்டிக்கோ. நீ நீயாகவே இருந்திட்டுக் கட்டிக்கடீன்னு கெஞ்சினேன், சசி ஒரு கத்தல் போட்டுட்டு ஆபீசுக்குப் போயிட்டான். என்னால, என்னால, தாங்கவே முடியல மீனும்மா, இந்த நகையக் குடுத்திருந்தா, இன்னிக்கு வந்திருக்கமாட்டா. வீட்டில ஒரு மாசமா ரகளை. நீங்க பாத்திங்களாம்மா?''

''வருத்தப்படாதீங்க. ஆயிரங்காலத்துப் பயிர். நல்லா இருக்கணும்னு வாழ்த்துங்க. அவுங்க எப்படியிருந்தாலும் நாம பெத்தவங்க. சந்தோசப்பட வேண்டிய சமயம். கண்ணீர் விடாதீங்க. இதெல்லாம் எறும்புக் கடின்னு நெனைச்சிக்கிங்க.'' கனகத்துக்கு அவளாலேயே கட்டுப்படுத்திக்கொள்ள இயலாமல் குரல் தழுதழுக்கிறது. ❋

## இம்மாத மலர் வாங்கிவிட்டீர்களா?

# ரத்ன பாலா

### பாலர் வண்ண மாத மலர்

கண்களுக்கும், கருத்துக்கும் களிப்பூட்டும் விருந்தாகப் பல்சுவை கனியான ரத்னபாலா. வேடிக்கை, வினோதம், வீர தீர சாகஸக் கதைகள், வியப்பூட்டும் மாயா வினோதக் கதைகள், விறுவிறுப்பான சித்திரக் கதைகள், பக்திப் பரவசமூட்டும் புராணக் கதைகள், அனைத்தும் கொண்டு பாலர் உலகின் ரத்தினப் புதையலாக, தீஞ்சுவைக் கனிகளின் சுவையை மிஞ்சும் தேன்கனித் தோட்டமாக மாதந்தோறும் மலர்கிறது ரத்னபாலா.

தனி இதழ் ரூ. 1–75

ஆண்டு சந்தா ரூ. 21-00

வண்ணப் பக்கங்கள் 100

*ரத்ன பாலா, தபால் பெட்டி எண் 17*
*சிவகாசி-626123*

—வி. சங்கரலிங்கம்

இலக்கிய உயர்வுக்கு 50 ஆண்டு அரும்பணியாற்றி, பொன்விழாக் காணும் கலைமகளுக்கு, மக்களின் நல்வாழ்விற்காகப் பல்லாண்டுகள் பணியாற்றிவரும்

# சைபால்

வழங்கும் நல்வாழ்த்துக்கள்!

சேத்துப்புண்
வேனல்கட்டி
தீப்பட்டபுண்
சொறிசிரங்கு
முதலியவைகளை
குணப்படுத்தும்
களிம்பு

சைபால்



சர்ம ரோக நிவாரணி



Manufactured by:
THE SOUTH INDIAN MFG CO.
70/2. SATHAMANGALAM. MADURAI-625 020.

—ராஜன்



# பாரதியும் கலைமகளும்

பெ.நா. அப்புஸ்வாமி

பாரதி பிறந்து நூறு ஆண்டுகள் ஆகின்றன. தமிழ் நாட்டின் அரசு இந்த ஆண்டைப் பாரதி ஆண்டாகக் கொண்டாடுகிறது. தமிழ நாட்டிலும், உலகெங்கும் வாழும் தமிழ் மக்கள், பற்பல சங்கங்கள், நிறுவனங்கள் முதலியவற்றின் துணையால் பாரதி நூற்றாண்டு விழாவைக் கொண்டாட ஏற்பாடு செய்துள்ளார்கள். பாரதியின் நூல்களை வெளியிடுகிறார்கள். பாரதியின் பாடல்கள் மொழிபெயர்த்து வெளியிடப்படுகின்றன. இத்தகைய சிறப்பும் மகிழ்ச்சியும் மிக்க ஆண்டில், 'கலைமகள்' பத்திரிகையின் பொன்விழாவும் சேர்ந்திருப்பது அனைவருக்கும் மகிழ்ச்சியை ஊட்டுகிறது.

'பாரதி' என்னும் சொல்லுக்குக் கலைமகள் என்பது பொருள். இந்தப் பெயர் ஒற்றுமையைத் தவிர, பாரதிக்கும் 'கலைமகள்' பத்திரிகைக்கும் வேறு சில தொடர்புகளும், ஒற்றுமைகளும் உள்ளன. அவற்றை நன்றாகப் புரிந்து கொள்வதற்கு, பாரதியின் பின்னணியையும், கலைமகளின் பின்னணியையும் தெரிந்துகொள்வது நன்று.

எட்டையபுரம் பாரதியின் ஊர். அது திருநெல்வேலி மாவட்டத்தில், அக்காலத்தில் ஜமீன்தார் என்று வழங்கப்பட்டு வந்த ஒரு குறுநில மன்னரின் தலைநகர். பாரதி வாழ்ந்த காலத்தில் அங்கே ஆட்சி புரிந்த மன்னர் பண்டை மரபுகளில் ஊறியவர், தமிழில் பற்று மிக்கவர். கலைகளை ஆதரித்தவர். அவருடைய முன்னோர் சிலரும், அவருங்கூட, காலப் போக்கில் மாறிவரும் புரட்சிக் கருத்துகளை ஏற்றுப் புதிய செயல்களையும் மேற்கொண்டனர்.

எட்டையபுரத்துச் சம்ஸ்தான வித்துவான்களில் ஒருவராக இருந்தவர் உமறுப்புலவர். அவர் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவர். அவர்தம் முகமது நபியின் சரிதமாகிய சீறாப் புராணத்தைப் படைத்தார் என்பதைத் தமிழ் மக்கள் அறிவர்.

தமிழ் நாட்டில் இசைத் துறையில் 'திரிமூர்த்திகள்' என்று பாராட்டப்படும் மூவருள் ஒருவரான முத்துஸ்வாமி தீக்ஷிதர் வடமொழியிலும், ஓரளவு தெலுங்கிலும், தமிழிலும் பயிற்சி உடையவர். கர்நாடக இசையில் மட்டுமன்றி, வடநாட்டு இசையிலும் ஓரளவு ஐரோப்பிய இசையிலும் வல்லவர். அவருடைய குடும்பத்தினரைப் பாராட்டி அவர்களின் மூலமாக இசைக் கலையை வளர்த்து வந்த பெருமையும் எட்டையபுர மன்னரைச் சேர்ந்தது. அந்தக் குடும்பத்தைப் போலவே ஏ. எம். சின்னஸ்வாமி முதலியார் என்பவரையும் ஆதரித்து, அவருடைய நூலை வெளியிட வாய்ப்பளித்தார். சின்னஸ்வாமி முதலியார் அக்காலத்தில் சென்னை டெபுடி கலெக்டராக நேர்மையோடு அலுவல் பார்த்து விட்டு, ஓய்வு பெற்றவர். இசையில் மிக்க திறமையும், ஆசையும் உடையவர். கர்நாடக இசையில் வல்லுநர்.

அந்தக் காலத்திய இசைப் பயிற்சி 'குருகுலவாசம்' என்ற முறையிலேதான் நடந்தது. இசையை, அதாவது பாடும் முறையை விளக்கக் கூடிய நூல்கள் ஒன்றும் அக்காலத்தில் இல்லை. மேற்கத்திய இசையின் சுரங்கள், தாளம் முதலியவை எல்லாம்

ஏற்கனவே வகுக்கப்பட்டிருந்த சங்கேதக் குறியீடுகளின் துணையால் எளிதில் புகட்டப்பட்டும் கற்கப்பட்டும் வந்தன. அந்தக் குறியீட்டுக்கு 'ஸ்டாஃப் நொடேஷன்' என்பது பெயர். அந்த முறையைப் பயன்படுத்தி, சிக்ஷைப்படுத்திச் சின்னஸ்வாமி, நாட்டுக் கீர்த்தனங்கள், நாட்டுப் பாடல்கள் முதலியவற்றை 'இண்டியன் ம்யூஸிக் இன் யூரோப்பியன் நொடேஷன்' என்னும் நூலில் வெளியிட்டார். இது ஒரு புரட்சிகரமான அரிய முயற்சி. இதுவும் எட்டையபுர மன்னரால் ஆதரிக்கப் பெற்றது.

முத்துஸ்வாமி தீக்ஷிதரின் தம்பியின் புதல்வரான சுப்பராம தீக்ஷிதர் தம்முடைய குடும்பச் செல்வமாகிய இசையை, அதாவது வர்ணம், கீர்த்தனம் முதலியவற்றைப் பழைய வடிவம் கெடாமல், கற்றிருந்தார். அவற்றைத் திருத்தமான சீரிய முறையில் பதிவு செய்யாவிட்டால் அவை உருமாறித் தரம் குறைந்து போகும். ஆகவே சின்னஸ்வாமி முதலியார் தூண்ட, சுப்பராம தீக்ஷிதர் அந்தப் பாடல்களை வீணைக்கு ஏற்றவை என்று தாம் கருதிய முறையில் சங்கேதக் குறிகளை இட்டு ஸ்வரப்படுத்தி, தெலுங்கு எழுத்துக்களின் மூலமாக வெளியிட்டார். இரண்டு பகுதிகளாக உள்ள 'சங்கீத சம்பிரதாயப் பிரதர்சினி' என்ற பெருநூல் ஒன்றும், 'பாலசிட்சா' என்னும் சிறிய நூல் ஒன்றுமாக அவை வெளிவந்தன. இதுவும் ஒரு புரட்சிகரமான முயற்சி. இதுவும் எட்டையபுர மன்னரின் ஆதரவைப் பெற்றது. அந்தச் சுப்பராம தீக்ஷிதரிடம் முறையாகத் தீக்ஷிதர் பாடல்களைக் கற்று வந்த மகாலிங்க ஐயர் இசைகளில் வல்லவர். தங்கக் குரவினர். பாரதியின் நண்பர்.

நாட்டியம் போன்ற மற்றக் கலைகளுக்கும் ஆங்கிலம் போன்ற மற்ற மொழிகளுக்கும் கூட அம்மன்னர் ஆதரவு அளித்து வந்தார். அவருடைய குடும்பத்தோடு தொடர்புள்ள பாரதி, சோமசுந்தர பாரதி, சற்றே பின் நாளில் வேங்கடேசுவர எட்டப்பன் முதலியோர் ஆங்கிலத்தைக் கற்கத் தூண்டப்பட்டனர்.

அந்நாளில் மருத்துவத் துறை பெரும்பாலும் 'பண்டிதர்' என்று வழங்கிய ஒரு சிலராலேயே பயிலப்பட்டு வந்தது. சித்தூரங்கள் என்று வழங்கிய தாதுப் பொருள்களும் ஒரு சில பச்சிலைகள், கஷாயங்கள், லேகியங்கள் முதலியவைகளுமே பெரும்பாலான மக்களால் நோய் நீக்கி மருந்துகளாகப் பயன்படுத்தப்பட்டு வந்தன. ஆயினும் ஆங்கில (மேல்நாட்டு முறையில் சென்னை மருத்துவக் கல்லூரியில் பயின்ற அப்பாவு பிள்ளை என்ற) மருத்துவரை அந்த மன்னர் தம் மருத்துவராகப் பயன்படுத்தி வந்தார்.

இத்தனை புரட்சிகரமான சூழ்நிலைகளில் பாரதி தமது சிறு வயதில் தம் வீட்டின் மரபாக, தமிழ் முதலியவற்றைச் கற்றுவந்த போதிலும், இந்தத் தாக்குகளுக்கெல்லாம் உள்ளாகியிருந்தார். அவரும் தம் தந்தையின் வாழ்நாளிலேயே திருநெல்வேலியில் இந்துக் கல்லூரியில் சேர்ந்து ஆங்கில மொழியையும் கற்று வந்தார். தந்தை இறந்தபின் அவர் காசிக்குச் சென்று வடமொழி, ஆங்கிலம் முதலியவற்றை நன்கு பயின்று, கல்கத்தாப் பல்கலைக்கழகப் புகுமுகத் தேர்வில் வெற்றி பெற்றார். தென்னாட்டுச் சூழ்நிலையிலிருந்து மாறுபட்ட வடநாட்டுச் சூழ்நிலையும், வங்காள மக்களின் சுதந்தர உணர்ச்சியும் பாரதியின் உணர்ச்சிகள் பலவற்றைத் தட்டி எழுப்பின. பின்பு பாரதி மீண்டும் எட்டையபுரத்துக்கு வந்து அங்கே சில காலம் பணிபுரிந்தார்.

மதுரையில் சேதுபதி உயர்தரப் பள்ளியில் ஆசிரியராக இருந்து, தேசபக்தி மிகுந்த கோபாலகிருஷ்ண ஐயர் முதலியோரோடு பழகினார். பின்பு தேசபக்தரும் சீர்திருத்தவாதியுமான ஜி. சுப்பரமணிய ஐயரோடு பழகிப் பக்குவம் அடைந்தார். அத்தனை தொடர்புகளாலும் அவருடைய மனம் விரிந்தது.

இத்தனை பின்னணிகளையும் பெற்றிருந்த பாரதி நாட்டின் முன்னேற்றத்தை நாடினார். பாரத தேசம், தமிழ் நாடு, சுதந்தரம், வரலாறு (புதியதும் பழையதும்), வாழ்க்கை வரலாறு ஓவியம், சிற்பம், சமயம், பிற நாட்டு அமைப்புகளும் அவற்றை ஒட்டிய செய்திகளும், கலைகள், அறிவியல், தொழில்நுட்பம், சமூகம், பெண்கள் முதலிய பல துறைகளிலும் கருத்துக் கொண்டார். புரட்சிகரமான கவிதைகளை எழுதினார். இலக்கணப் புலிகளின் வாயிலிருந்தும் விடுபட்ட கவிதைகளையும், தெளிந்த உரைநடையையும் எழுதி வந்தார்.

இனி, 'கலைமகளி'ன் பின்னணியைப் பார்ப்போம். தமிழ் நாட்டின் கோடியில் ஏறத்தாழக் கிராம வாழ்க்கை என்பதே நடைபெற்று வந்த எட்டையபுரத்திலே இத்தனை வகையான கிளர்ச்சிகளும், புரட்சிகளும், அவற்றின் பின்விளைவுகளும் அந்நாளில் காணப்பட்டன. தமிழ் நாட்டின் தலைநகராக இருந்து வரும் சென்னையில் இத்தகைய கிளர்ச்சி மனப்பான்மை மிகுதியாகவும், சற்று முன்னமேயும் தோன்றத் தொடங்கிவிட்டது. இப்போது 'கலைமகள்' பத்திரிகையைப்பற்றிப் பேசுவதால் பத்திரிகை உலகை மட்டும் குறிப்பாகப் பார்த்தால் போதும்.

பாரதி பத்து வயதுச் சிறுவனாக இருந்த காலத்திலேயே, அதாவது, 1892-ஆண்டில், நான் பிறந்த ஆண்டுக்கு அடுத்த ஆண்டில், சென்னை, திருவல்லிக்கேணி பெரிய தெருவில், என் தந்தையோடு ஒரே வீட்டில் வாழ்ந்த சி. வி. சுவாமிநாத ஐயர் என்பவர் 'விவேக சிந்தாமணி' என்னும் மாதப் பத்திரிகை ஒன்றைத் தொடங்கி நடத்தினார். பழமையில் ஈடுபட்டிருந்தும், முன்னேற்றக் கருத்துக்களையும் பேணிவந்த பேரறிஞர்கள் பலர் கட்டுரைகளும் கதைகளும் அப்பத்திரிகையில் வந்தன. மாதவையா, பி. ஆர். ராஜம் ஐயர், மனோன்மணீய ஆசிரியர் பீ. சுந்தரம்பிள்ளை முதலியவர்கள் அதில் எழுதி வந்தார்கள்.

சுந்தரம் பிள்ளை அதில் அறிவியலைப்பற்றியும் எழுதி வந்தார். வேறு சிலரும் அந்தத் துறையில் கட்டுரைகள் எழுதினர்கள். அதில் வெளிவந்த் கட்டுரைகளில் சில, சற்றே பின்னர்த் தனி நூல்களாக வெளிவந்தன. 'சத்திய தேவதையின் கதை' என்பது சிறுவர் களுக்கான நூல். 'கோல்பெர்ட் சரித்திரம்', 'விக்டோரியா ராணி சரித்திரம்' என்பவை அரசியலில் சிறப்புடையோரின் வரலாறுகள். 'புத்தர் சரித்திரம்' என்பது சமயத் துறை யைச் சார்ந்தது. 'கமலாம்பாள் சரித்திரம்' என்பது சமூக நாவல். அப்பத்திரிகையில் வெளிவந்த 'அப்பைய ராஜன் கதை' முதலி யவற்றைச் சிறு வயதில் நான் திரும்பத் திரும்பப் படித்து மகிழ்ந்தேன். எவ்வகைத் திறமையும் இல்லாத அந்த வயதிலேயே (ஆறு ஏழு வயதுதான் இருக்கும்) நானும் குழந்தைக் கதைகள் முதலியவற்றை எழுத வேண்டும் என்னும் ஆசையை அந்தப் பத்திரிகை என் மனத்தில் தூண்டிற்று. பின் நாளில் 'கலைமகள்' குழந்தைக் கதைகள் சிலவற்றை எழுதினேன்.

வையங்காராலும் பின்பு பேராசிரியர்கள் இராகவ ஐயங்கார், திரு நாராயண ஐயங் கார், அப்பன் ஐயங்கார் முதலியோராலும் அது நடத்தப்பட்டு வந்தது. வித்துவான் டி.கே. இராமானுஜ ஐயங்கார் அதன் ஆசிரிய ராகப் பொறுப்பேற்று நடத்தி வந்தார். அந்தப் பத்திரிகையிலும் அறிவியல் கட்டுரை கள் இடம்பெற்று வந்தன. பின் நாளில் நான் எழுதிய அறிவியல் கட்டுரைகளும், நான் வானொலியில் பேசிய அறிவியல் துறைப் பேச்சுகளும் அதில் வெளிவந்தன.

அதன் பின்பு, 1908-ஆம் ஆண்டு வாக்கில் 'விவேகபோதினி' என்னும் பத்திரிகை மயிலாப்பூரில் வி. குப்புசாமி ஐயரால் தொடங்கப்பட்டு மேலே குறிப்பிட்ட பல துறைகளையும் தன்னுள் கொண்டு, சிறப் பாக நடந்து வந்தது.

தமிழ் நாட்டில் மட்டும் அன்றி இலங்கை, பர்மா, மலேசியா முதலிய நாடுகளிலும் அது ஆதரவு பெற்றிருந்தது. அதில் வெளி வந்த கட்டுரைத் தொகுதிகளில் சில, பின் னர் நூல்களாக வெளிவந்தன. அதில் சமயச்



பாரதியாரும் தேசீயத் தலைவர்களும்

சார்பான கட்டுரைகள், கதைகள் முதலியன வும், அறிவியற்கட்டுரைகளும் வெளிவந்தன. ஆரிய மதோபாக்கியானம் என்னும் கதை நூல் அவற்றுள் ஒன்று. அந்தப் பத்திரிகையும் இருபத்து மூன்று ஆண்டு வாழ்ந்து, நின்று போய்விட்டது.

இதற்கிடையில் 'வாணீ விலாசினி' முதலிய வேறு எத்தனையோ பத்திரிகைகள் சிறந்த முறையில் நடத்தப்பட்டபோதிலும், மடிந்து போயின. அதைப் போலவே, புகழ் பெற்ற ஜி.ஏ. நடேசனின் தம்பி ஜி.ஏ. வைத்தியராமன் நடத்திய 'பிழைக்கும் வழி', கரந்தைத் தமிழ்ச் சங்கம் நடத்தி வந்த 'தமிழ்ப் பொழில்' போன்றவற்றாலும் தங்கி நிற்க முடியாமல் போயிற்று. கா. சி. வேங்கடரமணி நடத்திய 'தமிழ் உலகு', 'பாரத மணி' இரண்டும், மாதவையர் தொடங் கிய 'பஞ்சாமிர்த'மும் குற்றுயிராக வாழ்ந்து மடிந்தன.

இவற்றுக்கெல்லாம் இடையில் 1917 ஆம் ஆண்டில் தமிழ் நாட்டில் முன் னேற்றம் நிகழ வேண்டுமானால்,

சி.வி: சாமிநாத ஐயரின் தமிழ்த் தொண் டைப் பாராட்டி, அந்த நாளிலேயே உ. வே சாமிநாத ஐயர் எழுதியிருக்கிறார். அந்தச் சுவாமிநாத ஐயர் என் தந்தையின் நெருங்கிய நண்பர். அவருடைய மூத்த மகன் சதாநந்த் என்பவர் சிறந்த தேசபக்தர். 'ஃப்ரீ ப்ரெஸ் ஜர்னல்' என்னும் பத்திரிகையைத் தொடங் கிய ஆசிரியர்.

'விவேக சிந்தாமணி' சில காலம் சிறப் பாக நடந்து வந்தது. பிறகு அதன் ஆசிரி யருக்கு ஏற்பட்ட சில இடையூறுகளாலும் மக்களின் ஆதரவு இன்மையாலும் நின்று போயிற்று. மறைமலை அடிகள் நூல் நிலை யத்தில் அந்த இதழ்கள் உள்ளன.

அதன் பிறகு வெளிவந்த 'செந்தமிழ்' என்பது மதுரையிலிருந்து சிறப்பான முறை யில் 1901-ஆம் ஆண்டு வாக்கில் தொடங்கி, ஐம்பது ஆண்டுக் காலம் வாழ்ந்து, பொன் விழாவை நடத்திய பத்திரிகை.

அதைத் தொடங்கியவர் ராமநாதபுரம் அரச குடும்பத்தைச் சேர்ந்த பாண்டித் துரைத் தேவர், மகாவித்துவான் ரா. இராக

TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDC




# TAMILNADU INDUSTRIAL DEVELOPMENT CORPORATION LIMITED

L L A BUILDINGS 735 Anna Salai, Madras-600 002.

## ACCEPTS/RENEWS DEPOSITS

| 1 Year | 2 Years | 3 Years |
|---|---|---|
| $10\frac{1}{2}\%$ p.a. | $11\frac{1}{2}\%$ p.a. | $12\frac{1}{2}\%$ p.a. |

(INTEREST PAID MONTHLY)

On deposits of charitable, educational, scientific research and benevolent institutions an increased rate of ½% is offered subject to production of satisfactory evidence.

**INTEREST PAID TO CHARITABLE INSTITUTIONS FULLY EXEMPTED FROM INCOME TAX (SECTION 13 OF THE I.T. ACT 1961)**

**INTEREST PAID TO OTHERS QUALIFIES FOR THE BENEFITS UNDER SEC. 80 L OF THE INCOME TAX ACT 1961 UPTO Rs. 3000/-**

**APPLICATION FORMS ARE AVAILABLE AT REGISTERED OFFICE**

**Particulars to be furnished as per Sub rule (2) of Rule (4) of Companies (Acceptance of Deposits) Rules 1975 (as amended) framed under Sec. 58A of the Companies Act 1956.**

(A) Name of the Company — Tamil Nadu Industrial Development Corporation Ltd.

(B) Date of incorporation of the Company — 21st May 1965.

(C) Business carried on by the Company and its subsidiaries with the details of branches or units — The object of the Company is to promote, improve, establish and develop industrial activities in Tamilnadu through Public Sector and Joint Sector. Units: Tamilnadu Steels, Arakkonam, North Arcot District.

(D) Brief particulars of the management of the company — The Company is a wholly owned enterprise of Government of Tamilnadu and the management is done by a Board of Directors with the Chairman and the Managing Director controlling the day to day affairs of the company.

(E) Names, addresses and occupation of the Directors

| Name of Directors | Occupation and Address |
|---|---|
| 1. Thiru C.V.R. Panikar, I.A.S. | Chairman, Tamilnadu Industrial Development Corporation Ltd., Madras-600 002 |
| 2. Thiru C. Ramachandran, I.A.S. | Commissioner and Secretary to Government, Industries Department, Fort St. George Madras-600 009. |
| 3. Thiru C. Ramachandran, I.A.S. | Director of Industries & Commerce, Chepauk, Madras-600 005. |
| 4. Thiru P. Muran, I.A.S. | Chairman, Tamilnadu Electricity Board, Anna Salai, Madras-600 002. |
| 5. Thiru K.J.M. Shetty, I.A.S. | Commissioner and Secretary to Government, Finance Department, Fort St. George, Madras-600 009 |
| 6. Thiru C.A. Srinivasan, B.E.,F.I.E. | Chief Engineer (General) Public Works Department, Chepauk, Madras 600 005 |
| 7. Thiru K. Venkatesan, I.A.S. | Managing Director, Tamilnadu Industrial Development Corporation Ltd., Madras-600 002 |

(F) & (G) Profits of the Company before and after making provision for tax and dividends declared by the company for the three preceding financial years:—

| Year ended 31st March | Profits before tax (Rs. in lakhs) | Profit after tax (Rs. in lakhs) | Dividends Declared |
|---|---|---|---|
| 1979 | 46.86 (loss) | 46.86 (loss) | Nil |
| 1980 | 53.35 .. | 53.35 .. | Nil |
| 1981 | 29.61 (Profit) | 29.61 (Profit) | Nil |

(G) Summarised financial position of the Company as appearing in the two latest audited balance sheet of the company (as at 31st March).

| Liabilities | Figures for the year 1980 Rs. | Figures for the year 1981 Rs. | Assets | Figures for the year 1980 Rs. | Figures for the year 1981 Rs. |
|---|---|---|---|---|---|
| Share capital | 24,72,77,000 | 28,22,77,000 | Fixed Assets | 3,78,96,622 | 3,49,93,877 |
| | | | Works under construction | 22,006 | 27,783 |
| Reserves and Surplus | – | – | Investments (at cost) | 22,82,09,935 | 28,06,71,145 |
| Secured loans | – | – | Current Assets | 4,07,77,995 | 3,94,33,598 |
| Unsecured Loans | 23,91,84,655 | 25,70,77,489 | Loans & Advance | 15,57,81,190 | 17,55,19,888 |
| Current Liabilities and Provisions | 4,19,38,829 | 5,44,86,302 | Misc. expenditure | 25,19,194 | 29,61,945 |
| | | | Profit & Loss Account | 6,31,93,542 | 6,02,32,555 |
| | 52,84,00,484 | 59,38,40,791 | | 52,84,00,484 | 59,38,40,791 |

Note: Brief Particulars of contingent liabilities for the year ended 31.3.1981

a) i) Claims against the Corporation not acknowledged as debt.
ii) Estimated amount of contracts remaining to be executed on capital account and not provided for.
iii) Indemnity bond executed.
iv) Unclaimed liabilities in respect of partly paid shares.
v) Loan to Joint Stock Companies inclusive of interest due.
vi) Sundry debtors disputed by Tamilnadu Electricity Board being the excise duty on bars sold to them.
vii) Balance of estimated liability for payment of Gratuity
viii) Cumulative sales tax liability for which exemption is applied for and pending with Government of Tamilnadu.

(items i–viii) — Rs. 1,98,10,410

b) Contingent liability on account of guarantees given by the Corporation either solely or jointly with other promoters in favour of various financial institutions banks in connection with the loans and interest due thereon as at 31.3.81 amounted to Rs. 35,90,38,388/- and foreign exchange of US $ 1003330. S.F. 66457 DM 607204. £ 38024.

(I) a) The amount which the company can raise by way of deposits as on 31.3.81 as per rules — 25% of Rs. 2190.62 lakhs = 547.74 lakhs.

b) Deposits actually held as on 31.3.1981 Rs. 332.60 lakhs.

(J) Overdue deposits on the date of advertisement - Nil

(K) It is hereby declared that

i) The Company has complied with the provisions of the Companies (Acceptance of Deposits) Rules 1975 (as amended).

ii) The said compliance does not imply that repayment of deposits is guaranteed by the Central Government and

iii) The deposit accepted by the company are unsecured and shall rank paripasu with other unsecured liabilities.

**NOTE: THIS ADVERTISEMENT IS ISSUED ON THE AUTHORITY AND IN THE NAME OF THE BOARD OF DIRECTORS OF THE COMPANY AND THE TEXT OF THE ADVERTISEMENT HAS BEEN APPROVED BY THE BOARD OF DIRECTORS OF THE COMPANY AT ITS MEETING HELD ON 24th SEPTEMBER 1981.**

BY ORDER OF THE BOARD

Place Madras 600 002

Date : 24th SEPTEMBER 1981

S. HARI
Secretary

Note. A copy of the advertisement duly signed by a majority of the Directors of the company has been registered with the Registrar of Companies, Madras-6 pursuant to Rule 4 (4) of the Companies (Acceptance of Deposits) Rules 1975 (as amended)

TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDCO ■ TIDC

அறிவியல் ஒன்றே அதற்கு உரிய வழி என்னும் கருத்துக் கொண்ட அறிஞர் சிலர், தமிழ் நாட்டு மக்களுக்குத் தமிழ் மொழியின் மூலமாக அறிவியலைப் பரப்பவேண்டும் என்னும் நோக்கம் கொண்டு, 'தமிழர் கல்விச் சங்கம்' என்னும் சங்கத்தைத் தொடங்கினர், அதன் வெளியீடாகத் 'தமிழர் நேசன்' என்னும் பத்திரிகையைத் தொடங்கினார்கள். நீதிபதி சதாசிவையர், அ. ரங்கஸ்வாமி ஐயங்கார், சி. ஆர். ஸ்ரீநிவாசன், மாதவையர், பவானந்தம் பிள்ளை, முத்தையா முதலியார். கோபாலஸ்வாமி முதலியார், டி. ஆர். வேங்கடராம சாஸ்திரி முதலிய பலர் அதில் ஈடுபட்டார்கள். மாதவையர் அதன் முதல் பத்திரிகாசிரியர். பின்னால் நான் அந்தப் பதவியை ஏற்றிருந்தேன்.

அந்தப் பத்திரிகையின் முக்கிய நோக்கம் அறிவியல் என்று இருந்தபோதிலும், மருந்து மாத்திரைகளுக்குச் சர்க்கரை உறை இடுவதைப் போல் கதைகளுக்கும் அதில் இடம் கொடுக்கப்பட்டது. வரலாறு, சிறுவர் பகுதி, கலைச் சொற்களின் அமைப்பு, இலக்கிய ஆய்வு முதலியவையும் அதில் இடம் பெற்றன. முதல் முதலாக நான் எழுதிய அறிவியல் கட்டுரையும், முதல் தமிழ் மொழிபெயர்ப்பும் அதில்தான் வெளிவந்தன. தொடர்ந்து, நான் அதில் எழுதி வந்தேன். அதுவும் பத்துப் பன்னிரண்டு ஆண்டுக் காலம் வாழ்ந்து, பொது மக்களின் ஆதரவின்மையால் நின்று போயிற்று.

இதன் பின்பு மயிலாப்பூரில் சித்திரக் குளத்தின் கரையில் 'சித்ரா' என்னும் என் வீட்டில் சனிக்கிழமை பகல் பன்னிரண்டு மணிக்குத் தொடங்கி இரவு எட்டு மணியோடு முடிவுபெற்ற கூட்டம், வாரந்தோறும், நாலரை ஆண்டுக் காலம் நடத்து வந்தது. அதற்குப் பெயர் கிடையாது, அழைப்புக் கிடையாது, சந்தாவும் கிடையாது. முப்பது பேர் போல் வரும் அந்தக் கூட்டத்துக்குச் சிற்றுண்டி, காபி, மாலையில் எலுமிச்சம் பழப் பானம் முதலியவற்றைக் கொடுத்து வரும் பொறுப்பை என் மனைவி மனமகிழ ஏற்று, நன்றாகவே நடத்தி வந்தாள். இதைப்பற்றி முன்னால் தெரிவித்திருக்கிறேன்.

அந்தக் கூட்டத்துக்கு டி. கே. சி. யைத் தலைவர் என்று ஒரு வகையில் கூறலாம். அதில் பங்கு கொண்டவர்கள், வையாபுரிப் பிள்ளை, நீதிபதிகள் டி. எல். வேங்கடராம ஐயர், வி. வி. ஸ்ரீநிவாச ஐயங்கார். எஸ். ஜி. ஸ்ரீநிவாஸாசாரி (கொனஷ்டை), ஆனந்தவிகடன் வாசன், கல்கி, துமிலன்; மணிக்கொடி வ. ரா. சொக்கலிங்கம்; ப. ரா., கே. சாமிநாதன், கோ, சேஷாத்திரி, டாக்டர் மீனாக்ஷி, லக்ஷ்மிநாராயணன் (உயிரியல் ஆசிரியர்), நாரதர் சீனிவாச ராவ், சாவித்திரி அம்மாள், கி. சந்திரசேகரன், 'ஹரிஜன்' பத்திரிகையைச் சில காலம் நடத்தியவரும், சில காலம் (பின்பு) 'கலைமகள்' பத்திரிகையை நடத்தி வந்தவருமான ஆர். வி. சாஸ்திரியும் அவருடைய மனைவியும், ஏ. என். சிவராமன் (தினமணி) சங்கு சுப்பிரமணியன், (சந்தர்ப்பம் வாய்த்த போது) பி. ஸ்ரீ, ரா. இராகவையங்கார் மு. ராகவையங்கார், ஆறுமுக முதலியார், நீதிபதி வரதாசாரியார், மகாகனம் வி. எஸ். ஸ்ரீநிவாச சாஸ்திரியார். ஆர். நாராயணஸ்வாமி ஐயர் முதலியோரும் இன்னும் சிலரும் அங்கு வந்ததுண்டு.

அங்கே இலக்கியங்கள், வரலாறு, இசைகள் முதலிய பலவும் இடைஇடையே இடம் பெறுவதுண்டு. என் இளைய மகள் அம்மணியும், அவளுடைய தோழி சம்பூர்ணமும் சில வேளைகளில் குழந்தைப் பாடல்களைப் பாடியும், ஆடியும் மகிழ்விப்பார்கள். டாக்டர் மீனாக்ஷியும், ஆர். வி. சாஸ்திரியின் மனைவியாரும், டி. எல். வேங்கடராமையரும், சங்கு சுப்பிரமணியமும் இசையோடு பாடல்களைப் பாடுவதுண்டு.

இந்தக் கூட்டங்கள் நாராயணஸ்வாமி ஐயரின் மனத்தில் ஒரு கிளர்ச்சியை உண்டாக்கின. சிறந்த தமிழ்ப் பத்திரிகை ஒன்றை நடத்த வேண்டும் என்று அவர் கருத்துக் கொண்டார். அவர் பரம்பரைச் செல்வர்; தஞ்சாவூர் மாவட்டப் பண்பாளர்; சிறந்த பதிப்பக அச்சகத் தலைவர். அத்தகைய பத்திரிகையைப்பற்றி என்னோடு கலந்து ஆலோசித்தார். 'தமிழர் நேசன்' மறைந்ததிலிருந்து மனம் வாடிய என் மனத்துக்கு அவருடைய கருத்து, பேரானந்தம் ஊட்டியது. செல்வத்தை மேலும் திரட்டுவது அவருக்குத் தேவை இல்லை. தமிழுக்குப் பணி செய்யவேண்டும் என்பதே அவருடைய கருத்து. அதுவே என் (எங்கள்) கருத்தும்.

உடனே நான் மனம் மகிழ்ந்து, ''நீங்கள் ஒருவர்தாம் சிறந்த தமிழ்ப் பத்திரிகையை நடத்த இப்போது வாய்ப்பு உடையவர்கள். நான் ஒருவன்தான் என் நண்பரின் பத்திரிகையை நடத்தித் தோல்வியுற்றபோதிலும் என் நண்பரின் மனவலியால் உங்களுக்கு இப்போது உதவி செய்யக் கூடியவன்'' என்றேன். என் நண்பர்கள் சிலரோடு கலந்து ஆலோசித்தேன். தமிழ் நாட்டின் நலத்தை நாடி, எவ்வகை ஊதியமும் இன்றி, அத்தகைய பத்திரிகையை நடத்தத் துணை செய்ய அவர்கள் இணங்கினார்கள். அவர்களோடும் நாராயணஸ்வாமி ஐயரோடும் கலந்து, 'கலைமகள்' பத்திரிகையைத் தொடங்கத் திட்டமிட்டோம். அதற்கு உருவளித்துப் பேணிய பெருமை நாராயணஸ்வாமி ஐயரைச் சேர்ந்தது. அதன் முதல் இதழைக் 'கலைமகள் விஜயம்' என்று எழுதிக் 'கல்கி' பாராட்டினார்.

ஆகவே என் நண்பர்கள், நாராயணஸ்வாமி ஐயரின் உறவினரான டி. எஸ். இராமசந்திர ஐயர், டி. சிவராம சேதுப்பிள்ளை ஆகிய பத்துப் பேர்களை ஆசிரியர் குழுவாகக் கொண்டு, 1932-ஆம் ஆண்டில் (பிரஜோத்பத்தி வருஷம் தை மாதம்) 'கலைமகள்' பத்திரிகை வெளிவரத் தொடங்கிற்று. அதன் இலக்கியப் பகுதியை மு. இராகவையங்காரும் வையாபுரிப் பிள்ளையுமாக ஏற்று

நடத்தினர்கள். நீலகண்ட சாஸ்திரி (என் நண்பர் ஒருவர் சுந்தர சர்மாவின் உதவியால்) வரலாறு, ஓவியம், சிற்பம் முதலியவற்றையும், லக்ஷ்மி அம்மாள் பெண்கள், கல்வி முதலியவற்றையும், கதைப் பகுதியை டி. எஸ். ராமசந்திர ஐயரும், அறிவியல், சிறுவர் (குழந்தைகள் உட்பட) பகுதி, நாட்டுப் பாடல் ஆகியவற்றை நானும் பொறுப்பேற்று நடத்தி வந்தோம். என் நண்பர், ராஜசூடாமணி துணை செய்ய, தமிழ் மொழி பல துறைகளிலும் வளர வேண்டும், முக்கியமாக (இன்றியமையாத) அறிவியல் துறையில் குழந்தைகளும் வீட்டிலுள்ள அனைவரும் படித்து அறிவையும் பண்புகளையும், மொழியையும் வளர்த்து முன்னேற வேண்டும் என்பதே 'கலைமகளின்' அடிப்படையான குறிக்கோள்.

'கலைமகள்' தொடங்கப்பட்டபோதே இந்தக் கருத்தை அதன் முன்னுரையில் வெளியிட்டிருந்தோம்.

பாரதியின் குறிக்கோள்களும் இவைதான் எனினும், பாரதியின் போக்கு, சுதந்தரம், அரசியல் என்னும் பகுதிகளில் அதிகத் தீவிரமாக இருந்தது: கலைமகளின் நோக்கு நாட்டின் முன்னேற்றத்தைக் கருதி அறிவியலும், அறிவியல் நோக்கை வளர்ப்பதிலும் தீவிரமாக இருந்தது. மற்றக் கருத்துக்களில் மிகுந்த ஒற்றுமை காணப்பட்டது: செயல் முறைகளில் சிற்சில வேறுபாடுகள் இருந்தன.

பாரதிக்குக் 'கலைமகள்' பத்திரிகையைத் தெரியாது. ஆனால் அவர் 'கலைமகளை'ப் பல வகையில் பாராட்டியிருக்கிறார்; அறிவியலைத் தமிழில் வளர்க்க முடியாது என்று எண்ணிக் கைவிட்டவர்களை வைதிருக்கிறார். ஆனால் கலைமகளுக்குப் பாரதியைத் தெரியும்: பாரதியைப்பற்றிய விஷயங்கள் அதில் வெளிவந்திருக்கின்றன, பாரதியின் கடிதம் (நேர்ப் பிரதி), பாட்டு, விமர்சனம் முதலியன அதில் வெளிவந்திருக்கின்றன.

பாரதியின் இளமையில் பாரதியைச் சற்றே பலர் பாராட்டியபோதிலும் அவரை ஆதரித்தவர் மிகச் சிலரே ஆவர். டாக்டர் உ.வே. சாமிநாதையரை நோக்கிப் பாரதி பாடிய பாடலில், 'நிதியறியோம், இவ்வுலகத்து ஒரு கோடி இன்ப வகை நித்தம் துய்க்கும், கதி அறியோம் என்று மனம் வருந்தற்க' என்று பாடியதைப் பாரதி தம்முடைய மனத்தையே தேற்றிக்கொண்டதாகக் கருதலாம். பாரதி கண்ட கனவும், கலைமகள் பழைய ஆசிரியர் குழுவின் மூலம் கண்ட கன்வும், சிற்றுறுப்புக்களில் அழுத்தம் வேறுபட்டிருந்தபோதிலும் பொது நோக்கில், ஒன்றுதான். அந்த ஆசை நிறைவேறத் தமிழ் மக்கள் உழைப்பார்களாக! அந்த ஆசை நிறைவேறி, கலைமகளும், தமிழும், தமிழ் நாடும் முன்னேறுவனவாக!

✻

— G. S. நடராஜன்

பேராசிரியர் ஜகந்நாதன் இருபது ஆண்டுகளுக்கு முன்—அப்போது அவருடைய வயது, இருபத்தெட்டு—அமெரிக்காவில் சங்கரர் தத்துவப் பிரசங்கங்களில் ஈடுபட்டபோது, அவருடைய சுருதி பேதமில்லாத, மென்மையான கீத ஒலியில் மோகம் கொண்ட யுவதிகள் அவரைச் செல்லமாக, 'டாக்டர். ஜசா' என்று கொஞ்சினார்கள். அந்த நாட்களில் அவருடைய துக்கம் நிறைந்த உள்ளத்துக்கு யுவதிகளின் கொஞ்சல்களும் அன்பு விசாரணைகளும் இதமாயிருந்தன. திருமணமான ஐந்தாவது ஆண்டில், கமலா ஒரு கார் விபத்தில் கண்ணை மூடினாள். மூன்று வயது தேவகியை அவரும் அவருடைய தாயாருமாக வளர்த்தார்கள். குழந்தை பத்தாவது வயதில் பாட்டியையும் அனுப்பி வைத்தது.




ஊரார் தேவகியைத் துக்கிரி என்று வாய் ஓயாமல் தூற்றினாலும், சங்கரர் தத்துவத்தில் மூழ்கிப் போயிருந்த டாக்டர் தம் பெண்ணை, மனைவியின் பிரதிபிம்பமாகவே எண்ணி வளர்த்து வந்தார்.

எவ்வளவுக்கு எவ்வளவு அவர் தம்மிடமிருந்து தம்மைப் பிரித்து வாழ்ந்து ஞான ஒளியில் ஐக்கியமாக வேண்டுமென்று முயன்றாரோ, அவ்வளவுக்குத் தேவகி அவருடன் ஒட்டிக் கொண்டாள். பாசம் எனும் நூல் நாள் ஆகஆக இறுகிக்கொண்டே போயிற்று. தவிர டாக்டரால் தம் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றுதான் என்று உணர முடியவில்லை.

அமெரிக்காவிலிருந்து திரும்பிய பிறகு அவருடைய பெயர் டாக்டர் ஜகா என்றே நிலைத்தது. கமலாவை அவரால் இன்னும் மறக்க முடியவில்லை. சில நாட்களில், சில நேரங்களில் இந்த எண்ணம் அவரையும் மீறி மறந்துபோய்விடும். ஆனால் அழகான, கவர்ச்சியான அமெரிக்க மாணவிகள், இந்திய மாணவிகள் அவருடைய மனத்தை நிர்வாணமாக்குவார்கள். இந்த விபரீதமான சபலங்கள் மனத்தின் சேஷ்டைகள் என்பதை அவர் உணர்ந்திருந்தாலும், அவற்றை அவரால் தவிர்க்க முடியவில்லை. நல்ல வேளையாகச் சபலங்கள் எழுந்தபோது சந்தர்ப்பங்கள் அமையவில்லை. அவரும் உலகத்தின் கண்களுக்குக் குற்றம் செய்யாதவராகப் பெயர் பெற்றார்.

அன்று காலையிலிருந்து அவர் மனம் ஒரு நிலையில் இல்லை. மின் விசிறி இதமான ஒலியில் சுழல, அறையின் உயரத்துக்குப் புத்தக அலமாரிகள் அச்சுறுத்த, அவர் சில நிமிடங்கள் கட்டிலில் சாய்ந்தார். சில நிமிடங்கள் மேஜையைச் சுற்றிச் சுற்றி வந்தார்,

திடீரென்று ஒரு புத்தகத்தைப் பிரித்தார். பிரித்த சூட்டிலேயே மூடினார்.

போன வாரம் ஒரு திருமணப் பதிவு அலுவலகத்தில் அவருடைய பெண் தேவகிக்கும் அவள் காதலித்த சார்ங்கன் (நாமகரணப் பெயர் சாரங்கபாணி) எனும் விஞ்ஞானிக்கும் கையெழுத்துக் கல்யாணம் நடந்தது. தேவி (தேவகியை அவர் அப்படித் தான் அழைப்பார்.) இரண்டு ஆண்டுகளாக ஜெர்மனியில் இருக்கும் காதலனுக்காகக் காத்திருந்தாள். அவளுடைய காதலை அவர் ஓரளவுக்குத் தெரிந்து வைத்திருந்தாலும் காதல் வெறும் காதலாக, வெடிக்காத குண்டுபோல ஆகிவிடும் என்ற நைப்பாசையில் வாளா இருந்தார். திடீரென்று ஒரு சர்வதேச விஞ்ஞானிகளின் மகாநாட்டை முன்னிட்டுச் சார்ங்கன் புதுடில்லி வந்தான். டெலிபோனில் தேவியுடன் பேசினான். தேவி அவனைச் சென்னைக்கு வரவழைத்தாள்.

"அப்பா. இவர் டாக்டர் சார்ங்கன். கடல் ஆய்வு நுணுக்கக் கலையில் சீனியர் ஸயன்டிஸ்ட்..." என்று அவனை அவருக்கு அறிமுகப்படுத்திவிட்டு அவரையும் சார்ங்கனுக்கு விளக்கினாள்.

அவளுடைய வார்த்தைகள் அவரைப் புல்லரிக்க வைத்தன.

"இவர் என் அப்பா, டாக்டர் ஜகா. நீங்கள் சமுத்திரங்களை ஆராய்ச்சி செய்பவர். என் அப்பா ஒரு பெரிய மகா சமுத்திரத்தில் தினம் தினம் மூழ்கி எழுந்திருக்கிறவர். ஆதி சங்கரர் எதை எதையெல்லாம் மனத்தில் வைத்துக்கொண்டு வேதாந்த முத்துக்களை அளித்தாரோ; அந்த முத்துக்கள் ஒவ்வொன்றையும் அலசி ஆராய்ந்து பாமர மனிதனும் புரிந்து கொள்ளும் படியாக விளக்கம் தருகிறவர். அவர் என்னை முன்னிட்டு, இந்த மாதிரி ஒரு வீட்டில், இந்த மாதிரி ஓர் அறையில் பீஷ்ம வைராக்கியத்தோடு இருக்கிறார். இல்லாவிட்டால் அந்த ஆதி சங்கரரைப் போல இவரும் என்றைக்கோ உலக சஞ்சாரத்தில் இறங்கி இருப்பார். இவர் ரொம்ப ரொம்பப் பெரிய மனிதர்" என்றாள் தேவகி.

"ஏன் நீங்க ஜெர்மனி, பிரான்ஸ் முதலான தேசங்களுக்கு வந்து பிரசங்கங்கள் செய்யக்கூடாது?" சார்ங்கன் தன் அறியாமையைக் கோடி காட்டினான்.

தேவகி கலகலவென்று சிரித்தாள். "என் அப்பா போகாத நாடு ரஷ்யா ஒன்றுதான். ஆனா ஒரு பண்பாட்டுக் குழுவோடு அங்கேயும் போகத்தான் போகிறார்."

ஜகாவுக்கு ஆறுதலாக இருந்தது. அன்று சார்ங்கன் முன்னிலையில் தேவி புகழ்ந்தது மாபெரும் கூட்டத்தில் புகழாரம் சூடிக் கொள்ளுவதுபோல இருந்தது.

ஆனால் அடுத்த சில நிமிடங்களிலேயே அவருடைய உள்ளம் சஞ்சலப்பட ஆரம்பித்தது.

சார்ங்கன் விடை பெற்றுக்கொண்டு போனதும் தேவி, "அப்பா, அவர் எப்படி?" என்று கேட்டாள்.

"கண்களில் அறிவு ஒளிவீசுகிறது."

"மண்டையெல்லாம் மூளை."

"கர்வம் துளிக்கூட இல்லை."

"வர்ற வியாழக்கிழமை எங்களுக்குக் கல்யாணம்."

திகைப்பில் அப்படியே சற்று அசந்துவிட்டார். பிறகு கேட்டார். "கல்யாணம் பண்ணிண்டு...?"

தேவி சிரித்தாள். இது "என்னப்பா கேள்வி? பைத்தியக்காரத்தனமா இருக்கு."

"ஏதோ கேட்டுவிட்டேன்."

"சரி, பதில் சொல்றேன். வியாழக்கிழமை ரெண்டு மணிக்குப் பதிவுத் திருமணம். ராத்திரி ஓட்டலில் விருந்து. மறுநாள் மகாபலேஷ்வர். அது வெள்ளிக்கிழமையன்று. ஒருவாரம் முழுதும் தேனிலவு. ஞாயிற்றுக் கிழமை ஓய்வு. திங்கள் மாலை பம்பாய்; அன்னிக்கு இரவு லஃப்ட்ஹான்ஸா விமானம்."

அவருடைய நெஞ்சு கனத்தது. இந்தப் பெண்ணைக் கமலா அவருடைய மடியில் போட்டு விட்டுப் போன நாளிலிருந்து சன் இமைகளுக்குள் வைத்துக் காந்திருக்கிறார். ஒரு நாள், தேவி வீட்டுக்கு நேரத்தில் வராமல் போய்விட்டால் அவருடைய சங்கர தத்துவம் காற்றில் பறந்து போய்விடும். அவள் அவரிடமிருந்து அவருக்காகவே விலகிவந்து அவருக்குச் சாட்சி தரும் அவருடைய ஜீவன். அந்த ஜீவனில் அவர் வெறும் தேவகி என்ற பெண்ணை மட்டும் பார்க்கவில்லை. தம்மையே பார்த்துக் கொண்டார். அவளை அவருக்குத் தந்த கமலாவைக் கண்டார்.

ஆனால் அவள்? வேறு எதையோ பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

தேவகி எப்படி அவரை விட்டுப் போக முடியும்?

ஜகாவினுடைய பலவீனம் அவருக்குக் கோபம் வராததுதான்.

"ஏம்மா தேவி, உன் அப்பாவின் கதி என்ன?"

"நீங்க உங்கள் விதியைப்பத்திச் சொல்கிறீர்களா?"

"நான் கதின்னேன். நீ விதிங்கறே.. ஆமாம். என் விதி என்ன?"

"நீங்க உங்க ஆராய்ச்சியை இங்கே தொடர்ந்து நடத்துங்க. நான் என்னுடைய சங்கீத ஆராய்ச்சியை ஜெர்மனியில் வைச்சுக்கிறேன்."

"நீ போயிட்டா நான் எப்படி அம்மா இருப்பேன்?"

"ஓ அந்தக் கவலையா? அதான் நான் கேட்கற கேள்விக்குப் பதில் சொல்லாம வேறே திசையிலே பாய்கிறீர்களா? இப்ப நான் ஒரு கேள்வி கேட்கிறேன். பதில் சொல்நீங்களா?"

"கேளு, தேவி."

"இப்ப உங்க வயசு நாப்பத்தெட்டு. வர்ற அக்டோபரில் நாப்பத்தொன்பது. ஒரு நாள் திடீர்னு இதயத் தாக்குதல் வந்து.."

"ஏம்மா?" அவர் இடைமறித்தார்.

"தயைசெய்து என்னை இடையே தடுக்காதீர்கள். நாம் கொஞ்சம் அநுபவபூர்வமா இருப்போம். அப்படி ஒரு நாள் நீங்க போயிட்டீங்கன்னா எனக்கு நிழல்தர மரம் எங்கே? சான்

சுக்கச் சுவர் எங்கே? இருட்டுக்கு ஒரு விளக்கு எங்கே? இதெல்லாம் இருக்கிற இடத்தை இந்த இருபத்துநாலு வயசுப் பொண்ணுக்குக் காட்டுங்க. நான் என் கல்யாணத்தை நிறுத்திடறேன்.''

டாக்டர் ஜகா விழித்தார். என்ன பதில் சொல்லுவது? அப்படியே ஒரு பதில் கிடைத்தாலும், அதை எப்படிச் சொல்லுவது?

ஒரு யோசனை தோன்றியது.

''ஒரு பொண்ணுக்குக் கல்யாணம் ரொம்பத் தேவைதான் தேவி. ஆனு...ஆனு...''

''சார்ங்கனைத்தான் பண்ணிக்கணுமான்னு நீங்க கேட்கறீங்களா?''

''ஆமாம்.''

''நான் காதல் செய்கிறவரைத்தான் கலியாணம் செய்துப்பேன். வேறு யாரையும் நான் காதலிக்கல்லே.''

''காதல் என்கிற வார்த்தை வெறும் மாயை, தேவி?''

''அப்ப நீங்க என் மேலே வைத்திருக்கிறதாக நினைக்கிறீர்களே, பாசம், அது என்ன?''

''அது...அது...அது...''

''நீங்க ஆயிரம் படிச்சாலும் சொல்ல முடியாது அப்பா. பாசம், அன்பு, பக்தி, நட்பு, காதல் எல்லாமே மாயை என்கிற முப்பட்டைக் கண்ணாடியின் பல முகங்கள்தாம் அப்பா.''

''எனக்கு என்ன சொல்லுவது என்று புரியவில்லை.''

''ஆகவே உங்களுக்குப் புரியாத விஷயமும் இருக்கு. என் வயசில் எத்தனை லட்சம் பொண்கள் குழந்தைகளைப் பெத்து, தாய்மையிலிருந்துகூட ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்? ஏம்ப்பா, என்னிக்காவது ஒரு நாள், ஒருவேளை, ஒரு நிமிஷம் என் மண வாழ்க்கையைப் பத்தி நெனைச்சு பார்த்திருக்கிறீர்களா?''

டாக்டர் ஜகா தயங்கியபடி கூறினார்:

''உன்னை விட்டு என்னால் எப்படித் தனியாக இருக்க முடியும்னு நெனைச்சுப் பார்க்க முடியலே, தேவி.''

''இது ஒரு நல்ல காரணமா?''

''ஏன் சார்ங்கன் இந்தியாவுக்குத் திரும்பக் கூடாது? இங்கே மெட்ராஸ்லே இருக்கக் கூடாது?''

தேவி சிரித்தாள்.

''அவர் செய்யறது பெரிய ஆராய்ச்சி. யார் கண்டார்கள்? இன்னிக்கு இல்லேன்னாலும் பல வருஷங்களுக்கு அப்புறமாவது ஒரு நாள் உலகம் அவரை மகாமேதைன்னு சொல்லலாம். ஏன், நோபல் பரிசுகூட அவருக்குக் கிடைக்கலாம். இந்த வாய்ப்புக்களையெல்லாம் விட்டு விட்டு மெட்ராஸ் வர முடியுமா அப்பா?''

''அப்ப உனக்கு ஏத்த பிள்ளையா நான் பார்த்து...''

''நிறுத்துங்க அப்பா! எனக்கு வெறும் கலயாணம் என்கிற ஒரு காரணத்துக்காகவோ, ஆண் பெண் உறவு இயற்கையான



தேவை என்ற வெறிக்காகவோ நான் சார்ங்கனைக் கல்யாணம் செய்துகொள்ளவில்லை. மணவாழ்க்கையில் உடலுறவு ரொம்பச் சின்னப் பகுதி. அது பரஸ்பர அன்பின் அடையாளச் சின்னம். இதுக்காகத்தான் ஒருத்தி கல்யாணம் செஞ்சுக்கவேணும்னுல் ஒருத்திக்கு ஒரு மனித உடல் போதும். ஒரு மனித ஜீவன் வேண்டாம். எனக்கு வேண்டியது ஒரு ஜீவன். அந்த ஜீவனின் பெயர் சார்ங்கன்.''

தேவகி அதற்குமேல் அங்கே நிற்கவில்லை. ஜகா நீண்ட நேரம் ஊமையாக நின்றார்.

வியாழக்கிழமை பதிவுத் திருமணம் நடந்தது. சார்ங்கன் சார்பில் அவனுடைய கல்லூரித் தோழனும், தேவகியின் சார்பில் டாக்டர் ஜகாவின் காரியதரிசி—தேவகியின் முன்னுள் பள்ளித் தோழியும்—சாட்சி கொடுத்தார்கள்.

இன்று தன்னந்தனியாக அலைபாயும் உள்ளத்துடன் தவிக்கையில் ஜகா கண் முன் காட்சி வந்து வந்து மறைந்தது.

திடீரென்று ஒரு குரல் தாக்கியது.

''வணக்கம் ஸார்!''

ஜகா திடுக்கிட்டுப் பார்த்தார். அவருடைய காரியதரிசி மங்களா.

''வா.''

''ஸார். எனக்குத் தேவி கடிதம் எழுதியிருக்கா. கலர் போட்டோவும் அனுப்பி இருக்கா. இன்னிக்கு வெள்ளிக்கிழமை, நாளைக்குப் புறப்படறு.''

''அப்படியா?''

அவருடைய பொண் அவருக்கு ஒரு கடிதம் எழுதவில்லை.

''சௌக்கியமா, சந்தோஷமா இருக்கிருளோ இல்லையோ?''

''ஆனு அவ கடிதத்தைப் படிச்சப்போ நடு நடுவே ஒரு வேதனை இழையோடறது, ஸார்.''

மங்களாவைப் பார்த்தார் ஜகா. தேவகியின் மாநிறத்துக்கு இவள் நல்ல சிவப்பு. வருடக் கணக்காகச் சுருக்கெழுத்து எழுதி, தட்டெழுத்திலும் மூழ்கியிருந்ததால்தானே என்னவோ, இருபத்து நாலு வயதில் கண்ணடி போடும்படி ஆகிவிட்டது. சாதாரண நூல் புடைவை. கேசம் சுருங்கி ஒரு ஜாண் நீளத்துக்கு, கழுத்துக்குச் சற்றுக் கீழே நின்று முடிந்தது.

''என்ன வேதனை?''

''உங்களைப்பத்தித்தான் ஸார்.''

''என்னைப்பத்தியா?''

''ஆமாம் ஸார். இனிமே நான்தான் உங்களைக் கவனித்துக் கொள்ள வேணுமாம். பைத்தியக்காரி மாதிரி எழுதி இருக்கிருள்.''

''என்ன?''

''எஸ். எஸ். எல்.ஸி. வரையில் ஒன்னுப் படிச்சு, நெருங்கிப் பழகியதன் பலனு அவள் எனக்கு இங்கே வேலை வாங்கிக் கொடுத்தா. பதினெழு வயசிலே நான் இங்கே தினமும் ஒன்பது மணிக்கு வந்து சாயங்காலம் அஞ்சு மணிக்குப் போனேன். சில சமயங்களிலே ராத்திரி ஏழு மணிக்கு வந்து உங்க கார்லே ராத்திரி ஒரு மணிக்கும் ரெண்டு மணிக்கும் வீடு திரும்பியிருக்கிறேன்.''

''நான் இதையெல்லாம் கேட்கவில்லை.''

''அவன் இதையெல்லாம் எழுதி இருக்கிருளே ஸார?''

''அதற்கு என்ன?''

''தன்னை விட, நான் உங்களுடன் அதிக நேரம் சேர்ந்து இருந்திருப்பதாக அவள் கணக்குக் காட்டுகிருள். ஆனு அவள் உங்களுடைய பொண், நான் சாதாரணச் சிப்பந்தி என்பதை மறந்து விட்டாள்.''

''சரி, அவ என்ன சொல்லுகிருள்?''

''அவள் சொன்னு, நான் இந்த வீட்டிலேயே இருந்து விட வேணும் என்று.''

''அப்படீன்னு?''

''என்னைப் போல உனக்கும் வயது இருபத்தாறு ஆச்சுன்னு சுட்டிக் காட்று.''

''அவள் தான் காதலித்தவனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டாள். நீயும் யாரையாவது காதலித்துக் கல்யாணம் செஞ்சுண்டு போய் விடு.''

மங்களா சிரித்தாள். வெறுப்புப் பூத்த சிரிப்பு.

''நான் பதினெட்டு வயசிலிருந்து இருபத்து மூனு வயசு வரை ஒருத்தரைக் காதலிச்சேன் ஸார். ஆனு அது ஒரு வழிச் சாலையா முடிஞ்சுட்டது.''

''பாவம்!''

''ஆனு நான் வருத்தப்படலே ஸார்.''

''அப்படியா?''

''நான் காதலிச்சது ஒரு மனசை, ஓர் உள்ளத்தை. ஆனு அந்த மனசு, அந்த உள்ளம் எல்லாத்துக்கும் அப்பாற்பட்ட உள்ளமாகப் பட்டது. பிரக்ஞை இல்லாத உள்ளம் எப்படிக் காதலைப் புரிந்து கொள்ள முடியும்?''

''இதை யாரிடமாவது சொல்லியிருக்கிருயா?''

''தேவியிடம்,''

''அவ என்ன அறிவுரை சொன்னு?''

''காதலிப்பதற்குப் பதிலாப் பாருங்கல்லில் முட்டிக்கச் சொன்னு. ஆனு நான் முட்டிக்கலே. மானசிகமாக ரசிச்சேன். அப்பறம் மறக்க ஆரம்பித்தேன்.''

''தினசரி வந்த நீ, உன்னை மதிப்பும் கௌரவமுமா நடத்தற என்கிட்டே மனசு திறந்து பேசியிருக்கணும்.''

''பேசி இருந்தால்?''

''நான் வழி சொல்லியிருப்பேன். என் பொண்ணின் காதல் என்னைப் பாதிச்சுது. அதனுல் அவளைத் தடுக்கப் பார்த்தேன். ஆனு நீ வேறு வீட்டுப் பொண், நீ சந்தோஷமா இருக்க நான் உதவி பண்ணியிருப்பேன். நீ என்கிட்டே சொல்லாமல் இருந்ததே, உன் இழப்புக்குக் காரணம்...''

''தேவியின் காதல் உங்களை அவளிடமிருந்து பிரிப்பதால் ஏற்படுகிற பாதிப்பு.. ஆனுல் என் காதல் அப்படி அல்ல!''

''ரொம்பச் சரி, அதனுல்தான் நீ என் கிட்டே சொல்லியிருக்கணும்னு சொன்னேன்!''

''என் காதல் உங்க வாழ்க்கையையே—லட்சிய வாழ்வையே பாதித்திருக்கும்,

ஸார். என்னால் எப்படிச் சொல்லியிருக்க முடியும்?''

''நீ என்ன சொல்றே மங்களா?''

''இன்னும் புரியலையா?''

''என் வயசு என்ன தெரியுமா? நீயும் தேவியும் ஒரே வயசு.''

''மனசுக்கு வயசு இல்லே ஸார். நான் என் உடலைப்பத்தி நெனைக்கல்லே.''

திடீரென்று டாக்டர் ஜகா நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''நான் ஒண்ணு சொல்றேன். மனசோடு மனசு கல்யாணம் பண்ணிக் கொண்டாலும், அதைத் தூக்கிச் செல்ற உடம்பும் அதில் ஈடுபடறது.''

''ஆமாம்.''

''உடம்புன்னு வர்றப்போ, அடுத்தது என்ன வர்றது, தெரியுமா?''

''ஆமாம், உடலுறவு.''

''உடலுறவுன்னு வர்றப்போ வயசு வித்தியாசம்...''

''மனைவி செத்துப் போய் ஒருத்தன் இருபது வருஷமாப் பீஷ்மரா இருந்தார்னு, அவர் இருபது வருஷ மூப்பும் அடையவில்லை என்றுதான் அர்த்தம்.''

ஒரு நிமிடம் டாக்டர் ஜகா கண்களை மூடிக்கொண்டார்.

அவருடைய உடல் வஜ்ரம். இன்னும் வெள்ளி மயிர் உதிக்கவில்லை. நெற்றியில் சுருக்கங்கள் விழவில்லை. தினசரி உடற்பயிற்சிக்காக நடக்கிறார்; டென்னிஸ் ஆடுகிறார். ஆனால் அவருடைய சங்கரர் தத்துவம்? பஜகோவிந்தத்தில், பெண்ணின் சதை மீது கொள்கிற மோகத்தைப் பற்றிச் சங்கரர் என்ன சொன்னார்?

ஆனால் மற்ற வழிகளில் எந்த அளவுக்கு எவ்வளவு தூரத்துக்குச் சங்கரரை அவர் பின்பற்றுகிறார்? ஆசைகளைத் துறந்து தேசம் தேசமாய்த் திரிந்து, ஒரே ஒரு லட்சியத்தை ஜீவ ஒளியாக வைத்துக் கொண்டு சங்கரர் எந்தப் பிரதிபலனையும் எதிர்பாராமல் உலகை வாழ்விவிக்க வேண்டும் என்று அலைந்தாரே? அவருடைய வழியிலா அவர் செல்லுகிறார்? போக வர ரெயில், அல்லது விமான டிக்கெட், வழி முற்றும் தங்கும் செலவுகள், இலவசமாகச் சங்கரர் அளித்ததை வைத்துக் கொண்டு அவர் பேசியதற்கு வாங்கிய சம்மானம் என்ற கூலி, எழுதிய புத்தகங்களுக்கு ராயல்டித் தொகை, பத்மஸ்ரீ வரவேண்டும் என்ற நைப்பாசை, எந்த மேனாட்டுச் சர்வகலாசாலையாவது அழைக்காதா என்ற தாபம்—இவையெல்லாம் யார் வந்த வழியில் ஏற்படும் பயன்கள், அநுபவங்கள்?

அறிவு என்னும் தொழிற்சாலையில் சங்கரர் என்னும் மூலப் பொருளை அவர் அடித்து, நொறுக்கிப் பொடியாக்கி வியாபாரம் செய்து பிழைக்கிறார். இந்தப் பிழைப்பு என்ன பிழைப்பு? ஓர் ஆன்மிக மேடையை நிர்மாணித்து, அதில் அவர் லௌகிக நாடகம் நடத்துவானேன்?.

'பகவானை நினை; கோவிந்தனைப் பஜி.' இந்த இரண்டையும் செய்யாமல் ஜீவாத்மா— பரமாத்மா ஆராய்ச்சியில் மற்றவர்களைக் குழப்பி வசதிகளைப் பெருக்கிக்கொள்வது என்ன நியாயம்?

''ஸார்!'' என்றாள் மங்களா.

திடுக்கிட்டு ஜகா விழித்தார்.

''மன்னிக்கணும் ஸார். நான் பேசியது உங்களை ரொம்பவும் பாதித்திருக்கிறது போலிருக்கு, மன்னிக்கணும்.''

''இல்லே, மங்களா. நீ என்னை முதல் முதலா, உண்மையாச் சிந்திக்க வச்சே. என்னை நானே அலசிப் பார்த்தேன். ஆனா உன் பார்வையில், உன் அலசலில் உனக்குத் தெரிந்த ஜகா நான் அல்ல என்பதைப் புரிஞ்சு கொண்டேன். சங்கர தத்துவத்தை விளக்க வேண்டியது தான். ஆனா அதுக்குப் பொய்மையான வாழ்க்கை வாழக்கூடாது. இப்பவும் நீ என்னை விரும்புகிறாயா?''

மங்களா சிலையாகிப் போனாள்.

''சொல்லு.''

அவள் பதில் சொல்லவில்லை.

''இப்ப உனக்கு அப்பா இல்லே, அம்மா இல்லே. எங்கோ தொலை தூரத்தில் ஓர் அண்ணா இருக்கிறான். இனி நான் உனக்கு அம்மா, அப்பா மட்டும் இல்லே, உனக்கு வாழ்வை அளிக்கப் போகிற கணவன் கூட...''

''அப்ப, அப்ப.. உங்க தத்துவம், லட்சியம்..?''

''இருக்கு, எல்லாம் இருக்கு! ஆனா, எதுவும் நடைமுறையில் இருக்கவேண்டும். இதற்குச் சங்கர பாஷ்யத்தில் எந்த எதிர்ப்பும் இருப்பதாக எனக்குப் படவில்லை.''

''அப்ப?''

''உன் காதல் நிறைவேறி விட்டது, மங்களா!''

மங்களா எழுந்தாள்.

''நான் வரேன் ஸார்.''

''எங்கே போறாய்? கோவிலுக்கா?''

''இல்லே, ஸார், நான் எதைக் கோவில்னு நெனச்சுண்டிருந்தேனோ அது இப்ப வெறும் மண்டபமாய், காலியான கர்ப்பக்கிருகமா இருக்கு. உங்க மனசு மாறி விட்டது ஸார். உங்களுடைய அந்த மனசுக்கும் இந்த மனசுக்கும் ரொம்ப வித்தியாசமாத் தெரியறது. நீங்க முனிவர் இல்லே, மனிதர். நான் விரும்பியது முனிவரின் இதயபீடத்தை; மனிதனின் இதயக் குழப்பத்தை அல்ல. நான் வரேன் ஸார்.''

மங்களா வெளியேறி விட்டாள்.

ஜகா அயர்ந்துபோய் உட்கார்ந்தார். எவ்வளவு நேரம் அப்படி உட்கார்ந்தாரோ அவரே உணரவில்லை.

டெலிபோன் அரை மணிக்கு ஒரு தடவை அடித்தது. தபால்காரன் தபால் போட்டு விட்டுப் போனான். மத்தியான்னம் பால் பாக்கெட் விழுந்தது. ஜகா தம் மோன நிலையிலிருந்து மீள நீண்ட நேரம் ஆயிற்று. ※

—R. நாகசுந்தரம்

''ஸ்ரீ முத்துலிங்க ஸ்வாமி சித்தர் துணை''
அகிலமெல்லாம் காத்து நிற்கும்
அன்னை பராசக்தி அகிலாண்டேஸ்வரி தாயே! அங்காளப்பரமேஸ்வரி தாயே!!
நோயாளிகளின் பிணிகளை நீக்கி, ''ஆரோக்கிய வாழ்வும் நல்வாழ்வும்'' தாருமம்மா!!!

**தமிழகத்தில் 5 தலைமுறையாகவும், 150 ஆண்டுகளாகவும் பரம்பரையாகச் சித்த வைத்தியம் செய்து வரும் வைத்திய குடும்பம்**

**30 ஆண்டுகளாகத் தமிழக மக்களுக்கு நம்பிக்கையாகவும், முறையாகவும், உண்மையாகவும், சித்த வைத்திய முறையில் சிகிச்சை அளித்து, ஆரோக்கிய வாழ்வு பெறச் செய்து வருபவரும்**

**உங்கள் வைத்திய நண்பர்**
**சேலம் பிரபல டாக்டர்**

# S. R. சிவராஜ், *R.I.M.P. & R.A.M.P.* அவர்கள்



டாக்டர் S. R. சிவராஜ் அவர்கள் விளம்பரத்தைப் போல் காப்பி அடித்தும், அவர்கள் விளம்பரத்தில் போடும் வார்த்தைகளைப் பயன் படுத்தியும் நிறைய விளம்பரங்கள் வருகின்றன.

யோசியுங்கள்! சிந்தியுங்கள்!! பிறகு செயல்படுங்கள்!!!

**உங்கள் வாழ்க்கை ரகசியங்கள் பாதுகாக்கப்படுகிறது.**
**பூர்ணமாக நம்பலாம்.**

## வைத்திய ஆலோசனையும் சிகிச்சையும் பெறலாம்.

★ *பல வைத்தியம் செய்தும் குணப்படாமல், மனச் சோர்வு ஏற்பட்டவர்களுக்குக் கவலை நீங்கி ஆரோக்கியம் பெற வழியுண்டு.*

★ *நாள்பட்ட வியாதியால் அவதியுறும் நண்பர்களுக்கு நல்வாழ்வு பெற, நலம் பெற நம்பிக்கையான வழியுண்டு.*

## டாக்டர் S. R. சிவராஜ் அவர்களிடம் சிகிச்சை பெற்று நல்வாழ்வு பெற்றவர்கள்:

* குழந்தைப் பாக்கியமே (கர்ப்பணுக்களே இல்லாமலிருந்தவர்கள்)
* வாலிபத்தை வீணாக்கி உடலில் சக்தியே இல்லாமலிருந்தவர்கள்
* இல்லற வாழ்க்கையில் சுகம் பெற முடியாமல் ஏமாற்றம் கண்டு வந்தவர்கள்
* நாடி நரம்புகள் தளர்ச்சியடைந்து வளர்ச்சியும் பாதிக்கப்பட்டு வந்தவர்கள்
* சர்க்கரை வியாதி-பிளட் பிரஷர்-நாள்பட்ட சர்ம நோய்-ஆஸ்துமா
* இருமல்-காச நோய்-நீடித்த தலைவலி-முகவாதம்-வாத நோயாளிகள்
* குடல் புண்-வாய்வு ரோகஸ்தர்கள்-இளம்பிள்ளை வாதம்-பீனிசம்
* பெண்களுக்கு ஏற்படும் சகல பிணிகளால் பாதிக்கப்பட்டவர்கள்.

தமிழகத்திலும், ஆந்திரா, கர்னாடகம், கேரளம். பம்பாய், கல்கத்தா, ராஜஸ்தான், டெல்லி, அந்தமான் போன்ற இந்தியாவைச் சேர்ந்த பகுதியில் உள்ளவர்களும் வெளிநாடுகளான அரேபியா, பிரான்ஸ், நியூயார்க், லண்டன், சிலோன், முதலானவைகளிலிருந்தும் சிகிச்சை பெற்று ஆரோக்கிய வாழ்வு பெற்று இருக்கிறார்கள்.

வியாதியஸ்தர்கள் எங்கள் டாக்டர்கள் தங்கும் கேம்புகளிலும், சேலம் ஹெட்டாபீஸுக்கு நேரில் வந்தும் வைத்திய ஆலோசனை பெற்றுச் சிகிச்சை பெறலாம். நேரில் வர முடியாதவர்கள் சிகிச்சைக் கட்டணத்தை முன்கூட்டியே அனுப்பி ரிஜிஸ்டர் பார்சல் மூலம் சிகிச்சைக்கான மருந்துகளைப் பெறலாம்.

**எமது சிகிச்சைப் பிரிவுகள் விபரம் 1 மாத சிகிச்சைக் கட்டணம்**

| மிகவும் உயர்ந்த சிகிச்சை | | உயர்ந்த சிகிச்சை | | | நடுத்தரச் சிகிச்சை | |
|---|---|---|---|---|---|---|
| A-வகுப்பு ரூ. 1500-00 | B-வகுப்பு ரூ. 10 1-00 | A-வகுப்பு ரூ. 350-00 | B.வகுப்பு 250-00 | C-வகுப்பு 175-00 | A-வகுப்பு ரூ. 150-00 | B-வகுப்பு 115-00 |

குறிப்பு: உங்கள் சகல விபரங்களுக்கும் தலைமை வைத்தியசாலைக்கு எழுதி விபரமும், மருந்தும் பெறலாம்.

# சிவராஜ் சித்த வைத்தியசாலை

சேலம் – 636 007. [சேலம் சென்ட்ரல் சினிமா தியேட்டர் வடபுறமுள்ள ஏரியில்]



—மினர்வா

# புற்றும் பாம்பும்

~ மாயாவி ~



என்ன இருந்தாலும் பெண்கள் பெண்கள்தாம். பல காரியங்களில் அவர்களுக்கு இருக்கும் சாமர்த்தியம் ஆண்களுக்கு வராது. உதாரணமாகச் செய்திகளைச் சேகரிப்பதிலும் அவற்றைப் பரப்புவதிலும் அவர்கள் காட்டும் ஆர்வத்துக்கு ஈடு சொல்ல முடியுமா?

இதை என் சொந்த அநுபவத்திலிருந்து சொல்கிறேன். இந்தச் சம்பவத்தைக் கேளுங்கள். குழந்தைகளுக்குக் கோடை லீவு முறை விட்டுவிட்டார்கள். அவர்கள் நச்சரிப்பைப் பொறுக்க முடியாமல் நானும் என் மனைவி வேதமும் சொந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்தோம். வந்து பத்து நிமிஷங்கூட ஆகவில்லை. மூட்டை முடிச்சுக்களை அவிழ்த்துக் கொண்டிருந்த என்னிடம் வேதம் ஓடிவந்தாள்.

“ஏன்னா! ஒங்களுக்குச் சேதி தெரியுமா?”

“என்ன வேதம்?”

“நம்ப தெக்குத் தெரு அம்பிக்குக் கல்யாணம் ஆயிடுத்தாம்!”

“அப்படியா?” நான் உண்மையிலேயே மகிழ்வுற்றேன். ஏனென்றால் அம்பி எங்கள் ஊருக்கெல்லாம் நல்ல பிள்ளை. ஆனால் முப்பத்தைந்து வயதாகியும் அவன் தனக்குக் கல்யாணம் வேண்டாம் என்று பிடிவாதமாக மறுத்து வந்தான். “எப்போ வேதம்?” என்று கேட்டேன்.

“இப்பத்தான், நாலு மாசம் ஆறதாம். பொண் யார் தெரியுமா?”

“யாரு?”

“வடக்குத் தெரு குருட்டுக் காமாட்சி.”

“யாரு?” அதிர்ந்து கேட்டேன்.

“அந்தக் குருட்டுப் பொண் காமாட்சியைத் தெரியாது? அம்மாக்குட்டியின் பொண்!” என்று விளக்கினாள்.

“அடா! தெரியும், வேதம். ஆனா....”

வேதம் என்னை இடைமறித்தாள்: “நீங்க என்ன சொல்லப் போறேள்னு எனக்குத் தெரியும். இத்தனை வயசு வரையிலே கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்னு சொல்லிண்டிருந்த அம்பி, போயும் போயும் இந்தக் குருட்டுப் பொண்ணையா கட்டிண்டான்னு அங்கலாய்க்கப் போறேள்; அப்படித்தானே? நம்ப அம்பியின் சுபாவம் உங்களுக்குத் தெரியாதா? அவனோட பரோபகார மனசு யாருக்கு வரும்? ஊருக்கு உழைக்கவே ஆக்கி வச்சது இந்த உடம்புன்னு இருந்தவன் இல்லையோ அவன்? நாலஞ்சு மாசத்துக்கு முன்னாலே திடீர்னு அம்மாகுட்டி பொட்டுனு போயிட்டாளாம். இந்தக் குருட்டுப் பொண் அநாதையா நின்னுதாம். எத்தனை நாளைக்கு அக்கம்பக்கத்திலே இருக்கறவா இதுக்குச் சாதமும் போட்டு உதவியும் பண்ணுவா? ஊர்க்காரா எல்லாருமாக் கூடி யாராவது ஏழைபாழைக்கு இவளைக் கட்டி வச்சுடறதுன்னு முடிவு பண்ணினாளாம். பல பேர் கிட்டே கேட்டிருக்கா. வருவாரே ஒரு கிழவர், ஊரிலே யார் செத்தாலும் சவுண்டி ராப்பிட. அவரைக் கூடக் கேட்டிருக்கா. ஊரிலே பணம் பிரிச்சு ஐந்நூறு, ஆயிரம் கையிலெ தரோம்னும் அவர்கிட்டே சொல்லிப் பார்த்தாளாம். ‘குருட்டுப் பொண் வேண்டாம்’னுட்டாளாம் எல்லாரும். கடைசியிலே இந்த விஷயம் எப்படியோ அம்பிக்குத் தெரிஞ்சிருக்கு. உடனே அவன் காமாட்சியை அடுத்த முகூர்த்தத்திலேயே ஜாம்ஜாம்னு கல்யாணம் பண்ணிண்டானாம். அவனைக் கோயில்லெ வச்சுக் கும்பிட வேண்டாமோ? இப்படி ஒரு தியாக மனசு வேறெ யாருக்கு வரும்?” வேதம் தொடர்ந்து அம்பிக்குப் புகழாரம் சூட்டினாள்.

அத்தனை புகழ்ச்சிக்கும் உரியவன்தான் அம்பி, அதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை. ஆனால் என் உள்ளத்தில் வேறொரு சந்தேகம் எழுந்தது. “அது சரி, வேதம்; ஆனா, காமாட்சிக்கு இந்தக் கல்யாணத்திலே உடன்பாடுதானா?”

“நீங்க என்ன கேள்வி கேக்கறேள்?” என்று வெகுண்டாள் வேதம். “அம்பிக்கு என்ன கொறைச்சல்? அவனுக்கும் இந்தப் பொண்ணுக்கும் வயசு வித்தியாசந்தான் கொஞ்சம் அதிகமே தவிர, வேறெ என்ன கொறை? ஆனா, நீங்க கேட்டதும் ஒரு வகையிலே சரிதான். அந்தக் குருட்டுப் பொண் என்னவோ, ‘எனக்குக் கல்யாணமும் வேண்டாம்; கல்லெடுப்பும் வேண்டாம். என்னை விட்டுடுங்கோ; நான் எங்கேயாவது குளம்

குட்டையிலெ விழுந்து செத்துப் போறேன்னு சொல்லித்தாம். ஆனா எல்லாரும் அதைச் சமாதானப் படுத்திக் கல்யாணத்தைப் பண்ணி வச்சுட்டாளாம், இப்போ அம்பி அதைப் பூவைப் போலெ பேணி வச்சுண்டிருக்கானும்.''

ஊருக்கு வந்து பத்து நிமிஷம் ஆவதற்குள் என் மனைவி எவ்வளவு தகவல்களைத் திரட்டி வந்துவிட்டாள், பார்த்தீர்களா? அதனுல்தான் சொன்னேன், செய்திகளைச் சேகரிப்பதிலாகட்டும், அவற்றைப் பரப்புவதிலாகட்டும், பெண்களை மிஞ்ச யாராலும் முடியாது என்று.

இது ஒரு புறம் இருக்க, என் மனைவி சேகரித்து வந்த அம்பி-காமாட்சி திருமண விஷயத்துக்குக் காமாட்சி எப்படி இணங்கினுள் என்று என் மனசில் எழுந்த சந்தேகத்துக்கு வருவோம். அந்தச் சந்தேகத்துக்கு அடிப்படையான சம்பவம் சென்ற ஆண்டு, குடும்ப அலுவல் ஒன்றை முன்னிட்டு நான் மட்டும் ஊருக்கு வந்திருந்தபோது நடந்தது.

காமாட்சியின் தாய் அம்மாக்குட்டியும், என் தாயும் பால்யத் தோழியர். என் தாய் வசதியான குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டாள். அம்மாக்குட்டியோ தன் தோழி வாழ்க்கைப்பட்ட அதே ஊரில் வாழ்க்கைப் பட்டும், மிக ஏழைமை நிலையுள்ள வைதிகர் ஒருவரின் மனைவியானுள். அந்த ஏழைமை வாழ்விலாவது அவள் பூவும் பொட்டுமாக நெடுங்காலம் வாழ்ந்தாளா? அதுவும் இல்லை. அவள் கணவர் தமது முப்பதாவது வயதிலேயே அம்மாக்குட்டிக்கு இந்தக் குருட்டுப் பொண்ணைக் கொடுத்து விட்டுக் கண் மூடிவிட்டார். அதன் பிறகு அம்மாக்குட்டி கிராமத்தில் பல வீடுகளுக்கு அரைத்துக் கரைத்துக் கொடுத்தும், விசேஷங்களுக்குச் சமையல் வேலை செய்தும் தானும் பெண்ணும் அரை வயிற்றுக்குச் சாப்பிட்டு மானமாக வாழ்க்கை நடத்தி வந்நார்கள். எங்கள் வீட்டுக்கு அவள்தான் தினசரி தோசைக்கு அரைத்துக் கொடுப்பாள். தன் சிறுவயசுத் தோழி என்பதால் சமய சந்தர்ப்பங்களில் அம்மா அவளுக்குக் கண்டும் காணுமலும் நிறைய உதவி செய்தாள்.

ஏழையாக இருந்தாலும் அம்மாக்குட்டி மகா மானி; ஒரு வீட்டில் போய், கண்ட மேனிக்கு, ''அதைக் கொடு, இதைக் கொடு'' என்று கேட்கமாட்டாள். ஏன், தன் இல்லாமையைக் கூட மற்றவர்களிடம் கூறி வருத்தப்படமாட்டாள். என் தாய் அவளுடைய சிறு பிராயத் தோழியாக இருந்த காரணத்தால் ஏதாவது சொல்வாள்.

காமாட்சி பிறவியிலேயே குருடு. ஆயினும் அவள் வளர வளரத்தான் அம்மாக்குட்டியிடம் கவலை பெருகலாயிற்று. ''பொண்ணுப் பொறந்திட்டுக் கண்ணும் இல்லாம இருக்கே, இதை நாளைக்கு நான் எப்படி, யார் கையிலே புடிச்சுக் குடுக்கப் போறேன்!'' என்று அவள் என் தாயிடம் அடிக்கடி புலம்புவதை நான் கேட்டிருக்கிறேன்.

காமாட்சி பெரியவளான பின் நான் ஒரு தடவை கிராமத்துக்கு வந்திருந்தேன். அப்போது என் தாய் என்னிடம், ''ஏன் ராமு! நீ வேலை பார்க்கிற ஊருலெ யார் தலையிலாவது நம்ப அம்மாக்குட்டியின் பொண்ணைக் கட்ட முடியுமான்னு பாரேன். அம்மாக்குட்டி ஒழைச்சு ஒழைச்சு ஓடாப் போய், இப்பெல்லாம் அடிக்கடி சீக்காளியாயிடறு. அவ நாளைக்குப் பொட்டுனு போயிட்டா இந்தக் குருட்டுப் பொண்ணின் கதி அதோகதியாயிடுமே!'' என்ருள்.

ஆனுல் இப்படிப் பேசிய என் அம்மா தான், திடகாத்திரமாக இருந்தவள், அடுத்த ஆறு மாசத்தில் மாரடைப்பு வந்து பொட்டுனு போய்விட்டாள். அம்மாவின் இறுதிக் கடன்களை நிறைவேற்ற நான் ஊருக்கு வந்தபோது காமாட்சிக்கு ஒரு நல்ல வரனுடன் வந்திருந்தேன்.

ஓ! சொல்ல மறந்து விட்டேன், பார்த்தீர்களா? காமாட்சிக்கு இந்த வரனைத் தேடிப் பிடிக்கு முன், உள்ளூரில் மற்ருெரு வரன் விஷயமாகவும் முயற்சி செய்து பார்த்தேன். அந்த வரன்தான் இப்பொழுது காமாட்சியை மணந்திருக்கும் அம்பி!

இந்த அம்பியைப் பற்றியும் நாம் இப்போது சிறிது தெரிந்துகொள்ள வேண்டும்.

'ஊரும் பேரும் தெரியாதவன் உலகத்தில் உண்டோ?' என்று சொல்லுவார்கள். ஆனுல் அம்பி கிட்டத்தட்ட அப்படிப் பட்டவன் தான்.

எங்கள் ஊரில் பண்ணையார் ஒருவர் இருந்தார். தம் பெண்ணை நாற்பது ஐம்பது மைல்களுக்கு அப்பாலுள்ள வேலூர் என்ற ஊரில் திருமணம் செய்து கொடுத்திருந்தார். அந்தப் பண்ணையாருக்கு அந்த மகள் பிறந்து இருபது ஆண்டுகள் சென்ற பின் ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அந்தக் குழந்தையைப் பார்த்துக் கொள்ளப் பையன் ஒருவன் அவருக்குத் தேவைப் பட்டான். ஒரு சமயம் மகளைப் பார்க்க அவளுடைய ஊருக்குச் சென்றிருந்த போது அங்கே அம்பியைப் பார்த்தார். அவன் யாருமற்ற அநாதை என்று அறிந்ததும் எங்கள் ஊருக்கு அழைத்து வந்து விட்டார். அவன் முன்பு இருந்த ஊரில் அம்பி என்று அழைக்கப்பட்டு வந்ததனுல், அந்தப் பெயரே எங்கள் ஊரிலும் நிலைத்துவிட்டது.

பண்ணையாரின் மகன் பள்ளி செல்லும் பிராயத்தை அடையுமட்டும் அவர் அம்பியை வீட்டோடு வைத்துக் கொண்டு சோறு போட்டுக் காப்பாற்றி வந்தார். அதன் பிறகு கையைக் கழுவி விட்டார். ஆனுல் அம்பி எங்கும் போகவில்லை. அவன எங்கள் ஊர்ச் சத்திரத்திலேயே தங்கினுன். தேவையானவர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்தான். அவர்கள் மனமுவந்து கொடுத்ததை வாங்கிக் கொண்டான். அதைச் சத்திரத்துக்காரரிடம் கொடுத்து அவர் போட்டதைச் சாப்பிட்டான். இப்படிச் சில காலம் ஓட்டினுன். பிறகு அவன் வாழ்வில் ஒரு சிறு திருப்பம் ஏற்பட்டது.

எங்கள் ஊரில் கிட்டு சிவன் என்று ஒரு முதியவர் இருந்தார். பிள்ளைகுட்டி இல்லாதவர். சிதிலமடைந்த வீடும், கையில் சிறிதளவு ரொக்கமுமே அவருடைய ஆஸ்தி. தாமே பொங்கித் தின்று கொண்டு காலந் தள்ளி வந்த அவரால் முதுமையினுல் அதையும் செய்ய முடியவில்லை. அச்சமயம் அம்பிதான் அவர் வீட்டிலேயே தங்கி அவருக்குச் சமைத்துப்போட்டுச் சகல உதவியும் செய்தான். இது காரணமாகக் கிட்டு சிவன் தாம் நினைவோடு இருந்த காலத்திலேயே தம் சொத்துக்களில் ஒரு பகுதி அம்பிக்குச் சேர வேண்டுமென்று உயில் எழுதி வைத்தார்.

அவ்வாறே அவர் காலத்துக்குப் பின் அவருடைய அந்த ஓட்டை வீடும், கிட்டத்தட்ட ஐந்நூறு ரூபாய் ரொக்கமும் அம்பிக்கு வந்து சேர்ந்தன. ரொக்கத்தில் பெரும்பகுதியை அவன் கிட்டு சிவனின் ஈமக் கடன்களில் செலவு செய்து விட்டான். மீதமிருந்த பணத்தைக் கொண்டு அன்றடம் பட்சணங்கள் தயாரித்து அக்கம் பக்கத்து ஊர்களுக்குக் கொண்டு போய் விற்று வரும் தொழிலை மேற்கொண்டான். இந்தத் தொழில் வயிறு வாடாமல் அவனுக்குச் சோறு போட்டது.

விவரந் தெரிந்த பிராயந்தொட்டே பிறர் கட்டளைக்குப் பணிந்து வளர்ந்த காரணத்தால்தான் போலும் அம்பியை யார், எந்த வேலைக்கு ஏவினுலும், அவனுல் மறுத்துரைக்க முடியவில்லை. யாராவது, ஏதாவது வேலை கொடுத்து விட்டால் அவன் தன் தொழிலாகிய பட்சண வியாபாரத்தைக் கூடப் புறக்கணித்து விட்டு, அந்த வேலையைச் செய்து முடித்தே தீருவான். அதற்குக் கைம்மாருக, பணம் காசோ, வேறு பொருள்களோ கொடுத்தால் கூட வாங்கிக் கொள்ள மாட்டான்.

பிரதி பலன் கருதாமல் உழைக்கும் பண்பு அமையப் பெற்றிருந்தமையால், ஊரிலுள்ள பரம அயோக்கியனுக்குக்கூட அம்பியிடம் ஒரு தனிப்பட்ட வாஞ்சை உண்டு. அவனுக்கு ஊரிலுள்ள ஒவ்வொரு வீட்டிலும் வரவேற்பு உண்டு; உரிமை உண்டு. அடுக்களை வரையில் கூட எந்த வீட்டிலும் போவான், வருவான். வயசுப் பெண்கள் உள்பட எல்லாரும் அவனுடன் விகற்பமின்றிப் பேசிப் பழகுவார்கள்.

என் தாய் என்னிடம் காமாட்சிக்கு நான் வேலை பார்க்கும் ஊரில் வரன் தேடும்படி கூறிய அன்றைக்கு மாலையில் எங்கள் நிலபுலன்களைப் பார்த்து விட்டு வரலாம் என்று வெளியில் போனேன். வழியில் ஏதோ ஒரு மூட்டையைச் சுமக்க முடியாமல் சுமந்தபடி அம்பி வந்தான்.

என்னைக் கண்டதும், ''ராமு மாமா! தயவு பண்ணி இந்த மூட்டையை ஒரு கை புடிச்சுக் கீழே எறக்கி வையுங்களேன். சனியன்! சவமாக் கனக்கறது. கழுத்து விட்டுப் போச்சு'' என்றுன் அம்பி.

மூட்டையை இறக்கிக் கொண்டே, ''என்னடா அம்பி, மூட்டையிலே?'' என்று கேட்டேன்.

''மளிகைச் சாமான்'' என்றுன் அவன். சும்மாடாகச் சுருட்டி வைத்துக் கொண்டிருந்த மேல் துண்டால் முகத்து வேர்வையைத் துடைத்துக்கொண்டான்.

''எங்கேயிருந்து வாங்கிண்டு வரே?''

''தென்காசியிலிருந்து, மாமா.''

''ஏண்டா! உன் வியாபாரத்துக்குத் தேவையான மளிகைச் சாமான்களைத் தென்காசியிலேருந்துதான் வாங்கிண்டிருக்கியா?''

''சரியாப் போச்சு, போங்கோ. இப்படி முந்நூறு, நானூறுக்கு மளிகைச் சாமான் மொத்தமா வாங்க நான் எங்கே போறது பணத்துக்கு? இது எனக்கில்லே, மாமா. வடக்குத் தெரு வைகுண்டம் ஐயராத்துக்கு. அவருக்கு நாளன்னைக்கு ஷஷ்டியப்தபூர்த்தி. 'அம்பி, நம்ப ஊர்ப் பல சரக்குக் கடைகள்ளெ சாமான்களுக்கெல்லாம் ஒண்ணுக்கு ரெண்டு வெலே சொல்றுன். கொஞ்சம் தென்காசி வரையிலெ போய் விசேஷத்துக்கு வேண்டிய சாமான்



—ராமு

களை வாங்கிண்டு வந்துடேன்'னு நேத்திக்கு அந்த மாமா சொன்னார்.''

நான் அவன் பேச்சில் குறுக்கிட்டுச் சொன்னேன்: ''அதுக்காக, ஒம்பதும் ஒம்பதும் பதினெட்டு மைல் தூரம் கால் நடையாப் போய், ஒரு வில் வண்டியில் கொண்டுவர வேண்டிய சாமான்களை நீ தலைச் சுமையாத் தூக்கிட்டு வரியா?''

''அதனாலே என்ன? மாமா, நான் தேஞ்சா போயிடுவேன்? பகவான் எனக்கு இந்த உடம்பைக் குடுத்து, அதைத் திடகாத்திரமாகவும் வச்சிருக்கறதே, இந்த மாதிரி நம்பளாலெ ஆன உதவியை மத்தவாளுக்குச் செய்யணுங்கறத்துக்காகத் தானே?''

அவனுடன் மேலும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்த போதுதான் எனக்கு அது தோன்றியது. 'அடடா! நாம் என்ன, கையில் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்காக அலைகிறோமே! இவனைக் கேட்டால் மறு பேச்சு இல்லாமல் காமாட்சியைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு விடுவானே!''

அம்பியிடம் பக்குவமாக விஷயத்தைத் தெரிவித்தபோது, ''ஐயையோ! இந்தக் கால்கட்டு விவகாரமெல்லாம் நமக்கு வேண்டாம், மாமா!'' என்றான் அவன்.

''ஏண்டா வேண்டாங்கறே?''

''பொண்டாட்டி, புள்ளை குட்டின்னு ஆசைப்படறவன், அவாளை வச்சுக் காப்பாத்தக் கூடியவனா இருக்கணும், மாமா. நான் ஏதோ நெனைச்ச அன்னன்னைக்குப் பட்சணம் போட்டு வித்துண்டு, அதிலே கெடைக்கற நாலு காசை வச்சுண்டு காலத்தை ஓட்டிண்டிருக்கேன். பொண்டாட்டி, புள்ளைன்னு குடும்பத்தைப் பெருக்கிண்டா அவாளுக்கு எப்படிச் சோறு போடறது?''

''நீ குடிக்கற கூழை அவாளும் குடிச்சுண்டு இருந்துட்டுப் போறா.''

''அதெல்லாம் லாயக்குப் படாது மாமா. கல்யாணம் பண்ணிண்டா, கட்டிண்டவாளுக்கும், கொழந்தைகளுக்கும் உழைச்சுப் போடத்தான் எனக்கு நேரம் சரியாயிருக்குமே தவிர, இப்படி நாலு பேருக்கு நல்லது செய்ய முடியாமப் போயிடும். விடுங்கோ, அந்தப் பேச்சை. தவிரவும், காமாட்சிக்குக் கண் தான் இல்லையே தவிர, அழகு இருக்கு; இளமை இருக்கு; பருவம் இருக்கு. ஒங்களைப் போலே உள்ளவா முயற்சி பண்ணினா, என்னைவிட நல்ல கணவன் அவளுக்குக் கெடைப்பான்.''

பரோபகார சிந்தை அவனிடம் எத்தனை ஆழமாக வேரூன்றியிருக்கிறது என்பதைப் புரிந்துகொண்ட நான், வேறொரு திசையிலும் என் தாக்குதலைப் பிரயோகித்துப் பார்த்தேன். ''நீ சொல்றதெல்லாம் சரிதாண்டா, அம்பி, இருந்தாலும் நீ ஆம்புள்ளை; கல்யாண வயசு. இந்த வயசுலே சாதாரணமா எல்லாருக்கும் ஏற்படற ஆசைகளைப் பூர்த்தி செய்யப் பொண்டாட்டின்னு ஒருத்தி தேவைப்படத்தானே செய்வா?'' என்று சொன்னேன்.

பார்ட்னர்கள்: 1. C. விராசாமி 2. V. ஜனுர்த்தனன்




தந்தி: SIEVES
த.பெ.எண் 7

போன்:
ஆபீஸ்: 3192
பேக்டரி: 3193



ரைஸ்மில் பேன் பாக்ஸ்




ரைஸ் ஹல்லர் சல்லடைகள்

நிலக்கடலை உடைக்கும் டிகார்டிகேட்டர்கள்



(1) "அசோக்" ரைஸ் ஹல்லர் சல்லடைகள். (4) நெல் அவியல் தொட்டிகள்-சல்லடைகள் (7) ரைஸ் மில் பேன் பாக்ஸ்
(2) "அசோக்" காபி ஹல்லர் சல்லடைகள், (5) கடலைப்பெட்டி சல்லடைகள் (8) கடலை உடைக்கும் மிஷின்கள்,
(3) பருப்பு அலசு கை சல்லடைகள், (6) தேவையான சல்லடை ரகங்கள், (9) பருப்பு அலசும் மிஷின்கள்

நவீன அரிசி ஆலை ஹல்லர் சல்லடைகளும் கிடைக்கும்.

"சிறந்த முறையில் 38 வருட காலமாகத் தயாரிப்பவர்கள்;"

# ஸ்ரீராமகிருஷ்ணு & கோ.,

சல்லடை தயாரிப்பாளர்கள், விருதுநகர்.

ஆபீஸ்: 167, ராமமூர்த்தி ரோடு, விருதுநகர் - 626001 போன்: இல்லம் 3126

"நீங்க சொல்றது புரிஞ்சுது மாமா. நான் எல்லாம் துறந்த சந்நியாசியில்லே. ஆனா, எப்பவோ மாசத்திலே ஒரு நா, ரெண்டு நா ஏற்படற ஆசையைப் பூர்த்தி செய்துக் கறதுக்காக என் கொள்கைகளையெல்லாம் குழி தோண்டிப் புதைச்சுட்டு, ஆயுசு முழுக்க ஒருத்தியைக் கட்டிண்டு அழ னும்னு இல்லையே! அந்த ஆசைகளை நெறை வேத்திக்க வேறெ வழிகளும் இருக்கே!"

நான் மேலும் சிறிது நேரம் அவனை வற் புறுத்திப் பார்த்தேன்; பயன் இல்லை.

கல்யாணத்தில் அவனுக்குச் சிறிதும் பிடிப்பே இல்லை என்பதை உணர்ந்தேன்.

அன்று அவ்வளவு தூரம் கல்யாணத்தை வெறுத்துப் பேசிய அதே அம்பி, இன்று அதே காமாட்சியை வலியச் சென்று மணந்து கொண்டிருக்கிறான் என்றால், இந்த மனமாற்றம் அவனுடைய பரோபகார நோக்கத்தாலன்றி வேறு எதனாலும் ஏற் பட்டிருக்க முடியாது என்று என்னால் உறுதியுடன் கூற முடியும்.

அம்பி இப்படி மறுத்துவிட்ட பிறகுதான், நான் வேலை பார்த்து வந்த ஊரில் அந்தக் குருட்டுப் பெண்ணுக்காக வரன் தேடும் முயற்சியில் இறங்கி, அதில் வெற்றியும் பெற்றேன்.

இப்போது காமாட்சிக்காகப் பார்த் திருந்த வரன் இளைஞன்தான். ஓரளவுக்குச் சொத்துடையவனுங்கூட. ஆனால் கொஞ் சம் குரூபி. அதோடு உடலில் திட்டுத் திட்டாக வெண் குஷ்டம் பரவியிருந்தது. அது தீங்கற்றது, மனைவி மக்களுக்குப் பர வாத வகையைச் சேர்ந்தது என்று சரும நோய் நிபுணர்கள் கூறினார்கள். ஆயினும் இந்த இரண்டு குறைபாடுகள் காரணமாக, மிக மிக ஏழைக் குடும்பத் துப் பெண்கள் கூட அவனை மணந்து கொள்ள மறுத்து விட்டனர். தன் உரு வத்தைக் காண முடியாத ஒருத்திதான். தன்னை மணந்து கொள்ள இசைவாள் என்ற முடிவுக்கு அவன் வந்த சமயத்தில் எனக்கும் அவனுக்கும் பழக்கம் ஏற்பட் டது. அவன் காமாட்சியை மணந்து கொள்ள முழுமனசோடு இணங்கினான். இது விஷயமாக என் தாயாருக்குக் கடி தம் எழுதி, அம்மாக்குட்டி, காமாட்சி ஆகியோரின் அபிப்பிராயத்தை அறிய வேண்டும் என்று எண்ணுகையிலேயே, என தாய் காலமாகி, நான் சொந்த ஊருக்கே வர வேண்டிய நிலை ஏற்பட்டது.

தாயாரின ஈமச் சடங்குகள் முடியும் வரை, அம்மாக்குட்டி எங்கள் வீட்டிலேயே தங்கிச் சமையல் வேலையைக் கவனித்துக் கொண்டாள். விசேஷங்கள் எல்லாம் முடிந்த மறுநாள் அம்மாக்குட்டி தன் வீட்டுக்குப் போய்விட்டாள். அன்று மாலையில் அவ ளைச் சந்தித்துப் பேசி முடிவு செய்யலா மென்று வடக்குத் தெருவுக்குப் போனேன்.

ஆனால் நான் போன சமயம் அம்மாக் குட்டி வீட்டில் இல்லை. யார் வீட்டுக்கோ மாவு அரைத்துக் கொடுக்கப் போயிருந்தாள். காமாட்சி மட்டுமே வீட்டில் இருந்தாள்.

முதலில் இவள் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளலாமென்று அவளிடம் சொன்னேன்.

''என்ன சொன்னேள் மாமா கல்யாணமா? இந்தக் குருடிக்கா?'' என்றாள் விரக்தியாக.

அவளுக்கு ஊக்கமூட்டும்படி பேச்சைத் தொடர்ந்தேன். ''ஆமாம் காமாட்சி. ஆனா உனக்குக் கண் இல்லாமப் போனதை ஒரு விசேஷத் தகுதியாகக் கருதி இந்தப் பையன் ஒன்னைக் கல்யாணம் பண்ணிக்க மனப்பூர்வமாச் சம்மதம் தந்திருக்கான்!'' என்று கூறி, என் நண்பனின் உடற் குறையையும் தெரிவித்தேன்.

''கண் இல்லாத என் மாதிரிப் பெண்களுக்குப் புருஷன் குருபியாயிருந்தா என்ன? ரூபவானா இருந்தா என்ன, மாமா? எல்லாம் சரிதான். ஆனா, எது எப்படியிருந்தாலும் எனக்குக் கல்யாணங்கறது இந்த ஜன்மத்திலே இல்லே.''

''உங்கம்மா சொன்னபடி அவனுக்கு ஒன்னைக் கல்யாணம் செஞ்சு வைக்கறதா வாக்குறுதியும் குடுத்திட்டு வந்திருக்கேனே.''

''என்னை மன்னிச்சுக்குங்கோ. ஒங்க வாக்குறுதியை நெறைவேத்த நான் ஒத்துழைக்க முடியாத நிலேயிலே இருக்கேன்.''

''ஒனக்கு இந்த வரன் பிடிக்கலேன்னா, வெளிப்படையாச் சொல்லிடு காமாட்சி. வேறே வரன் பார்க்கறேன்.''

''என்னைப் போன்ற அபாக்கியவதிக்கு இந்த வரனே மன்மதன், மாமா. இருந்தாலும் நான் அவரை மணந்துக்கத் தகுதியில்லாதவள்.'''

''ஏன்? குருடுங்கறதைத் தவிர வேறே என்ன குறைபாடு ஒங்கிட்டே?''

''இருக்கு, மாமா.''

''என்ன அது?''

''நான் கற்பிழந்தவள், மாமா!'' என்று கூறி அவள் தேம்பித் தேம்பி அழலானாள்.

''என்ன? எப்போ? எப்படி?'' நான் அதிர்ந்து போய்க் கேட்டேன்.

''அஞ்சு ஆறு மாசத்துக்கு முன்னாடி. ஒரு நாள் சாயங்காலம், அம்மா தன் வாடிக்கை வீடுகளுக்குத் தோசைக்கு அரைச்சுக் குடுக்கப் போயிருந்தா. அப்பொ யாரோ ஒருவன் வீட்டுக்குள்ளே வந்து, நான் எவ்வளவோ கதறியும் செஞ்சியும் கேக்காம....''அவள் 'ஓ'வென்று அழுதாள்.

''யார் அந்தப் பாவி?''

''எனக்கு எப்படித் தெரியும்? 'ஏய்! யார் நீ?'ன்னு நான் பல தடவை கேட்டேன். ஆனா அந்த மகாபாதகன் வாய் திறந்தே பேசலே. நான் அம்மாகிட்டக்கூட இந்த அவமானத்தைச் சொல்லலே. இப்போ ஒங்ககிட்ட வேறே வழியில்லாததினுலதான் சொன்னேன். நான் ஒங்க சிநேகிதரைக் கட்டிக்கத் தகுதியுள்ளவளா?''

அவளுக்கு நான் என்ன பதில் சொல்ல முடியும்? வாயை மூடிக் கொண்டு திரும்பினேன். வேலைக்குத் திரும்பியதும் என் நண்பனிடமும் ஏதோ சாக்குப் போக்குகள் சொல்லிச் சமாளித்தேன்.

இப்போது விளங்கிற்று, 'காமாட்சி எப்படி இந்தத் திருமணத்துக்கு இணங்கினாள்?' என்று என் உள்ளத்தில் எழுந்த சந்தேகத்தின் காரணம்.

வேதம் விஷயத்தைத் தெரிவித்துவிட்டுப் போன பின் நான் நெடுநேரம் தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்தேன். ஊராரின் வற்புறுத்தலுக்காக இந்தத் திருமணத்துக்கு ஒத்துக் கொண்டிருந்தாலும், தான் கறைபட்டவள் என்ற இரகசியத்தைக் காமாட்சி, அம்பியிடம் கூறியிருப்பாள் என்ற



முடிவுக்கே என்னால் வர முடிந்தது. அப்படியென்றால் அவளுடைய மாற்றமுடியாது. இரண்டாவது குறைபாட்டையும் ஒதுக்கிவிட்டு அம்பி அவளை மணந்து கொண்டிருக்கிறான் என்றாகிறது. அப்படி மட்டும் இருக்குமானால் அம்பி எவ்வளவு உயர்ந்தவன்! எவ்வளவு பெரிய தியாகி!

அவனைச் சந்தித்து, எனக்கு எல்லா விஷயமும் தெரியும் என்பதை அறிவித்து

அவனுடைய மகோன்னதமான தியாகத்தைப் பாராட்ட வேண்டும் என்று என் மனம் அவாவியது. அதற்குள் அவனே என்னைத் தேடி வந்து விட்டான்.

''மாமா! ஊர்லேயிருந்து எப்போ வந்தேள்? எல்லாரும் சௌக்கியமா? நீங்க குடும்பத்தோட வந்திருக்கேள்னு கேள்விப் பட்டதும், 'பூட்டிக் கெடந்த வீட்டுக்கு வந்திருக்கேளே; சாப்பாட்டுக்கு என்ன செய்யப் போறேள்?' பால், மளிகைச் சாமான் இதெல்லாம் வாங்கிண்டு வரவேண்டாமான்னு கேட்டிட்டுப் போவோம்னு வந்தேன்'' என்று தன் வருகைக்குத் தானே கட்டியம் கூறிக் கொண்டான்.

அவனை மாடிக்குச் கூட்டிச் சென்று, ''பாராட்டுடா அம்பி'' என்றேன்.

அவன் புரிந்து கொண்டான். ''எதுக்கு? அன்னிக்கு நீங்க கெஞ்சோ கெஞ்சுன்னு கெஞ்சினபோது, 'கல்யாணமா? எனக்கா? இந்த ஜென்மத்திலயா?'ன்னு வாய்ச் சவுடால் அடிச்சிட்டு, இப்போ அதே காமாட்சியைக் கல்யாணம் பண்ணிண்டிருக்கேனே, அதுக்கா?'' என்றான் அவன்.

''சவுடாலெ விட்டுத் தள்ளுடா, அம்பி! இது ஒன் தியாக மனப்பான்மையின் சிகரம்! அம்பி, ஒன்னை எப்படிப் பாராட்டறதுன்னே எனக்குத் தெரியலேடா!'' நான் பரவசத்தில் அவனைக் கட்டிக்கொண்டேன்.

அம்பி குழப்பத்துடன், ''நீங்க என்ன சொல்றேள், மாமா? எனக்கு ஒண்ணும் புரியலியே!'' என்று தடுமாறினான்.

''அம்பி! காமாட்சி கறை பட்டவள்ங்கறதைத் தெரிஞ்சுண்டவன் நீ மட்டும் இல்லே; நானுந்தான். ஒனக்கு முன்னயே தெரிஞ்சிண்டவன் நான்!''

''மாமா! அது ஒங்களுக்கு...... எப்படி.....?''

''காமாட்சியே எங்கிட்டே சொன்னாள்'' என்று தொடங்கி முன்பு நடந்த சம்பவங்களை அவனுக்கு விளக்கினேன். ''அம்பி! இன்னிக்கு ஒங்க கல்யாண சமாசாரத்தைச் சொன்னபோது எங்காத்து மாமி ஒன்னைக் கோவில்லே வச்சுக் கும்பிடணும்னு சொன்னாள்டா!''

''இந்தப் பாவியையா தெய்வமாக்கினா ஒங்காத்து மாமி? இந்த மகா பாவியை!'' என்று படீர் படீரென்று தலையில் போட்டுக் கொண்டான்.

நான் கலங்கினேன். ''டேய் அம்பி!'' என்று ஆரம்பித்த அந்தக் கணத்திலேயே என் கலக்கம், குழப்பம் யாவும் தீர்ந்தன. ''அப்புடீன்னா நீ தானடா அது?''

''ஆமாம்.'' அவன் சிரம் தாழ்ந்தது. விசித்து விசித்து நெடுநேரம் அழுதான். பிறகு சொன்னான்; ''நீங்க அன்னிக்குப் பருவ வயசின் தேவையைப் பத்திச் சொன்னபோது, 'அது எனக்கு ஏற்படறதுண்டு. ஆனா அதைத் தீர்த்துக்க வேறெ வழி இருக்கு'ன்னு திமிராப் பதில் சொன்னேனே, அந்தப் பருவ வேட்கை என் பகுத்தறிவை மறைச்சு என்னை ஒரு பதிதனா மாத்திடும்னு நான் அப்போ நெனைக்கவே இல்லே, மாமா.

''ஆனா, ஒங்களைச் சந்திச்ச மறுநாளே நான் அந்த அதமச் செயலைச் செஞ்சிட்டேன். கீழத் தெருவிலே ஒரு ஆத்திலெ தோசைக்கு அரைக்க வரணும்னு அம்மாக்குட்டி மாமிகிட்டெ சொல்லிடும்படி எங்கிட்டெ சொல்லி அனுப்பிச்சா. சொல்றதுக்காக அம்மாக்குட்டி மாமியாத்துக்குப் போனேன. மாமி ஆத்திலெ இல்லே. வெளியிலே எங்கேயோ போயிருக்கு. இந்தப் பொண் ரேழி நிலைப்படியிலே தலைவச்சுப் படுத்து அசந்து தூங்கிண்டிருந்தது. தன்னை மறந்து தூக்கம். ஒடம்பிலெ இருந்த துணிகள் மறைக்க வேண்டிய பாகங்களை மறைக்காம வெலகிக் கெடக்குங்கறதுகூடத் தெரியாத அசந்த தூக்கம். அவளை ஒரு தடவை பார்த்தேனோ இல்லையோ என் ஆண்மை விழிப்படைஞ்சிடுத்து. என்னாலெ என்னைக் கட்டுப்படுத்திக்கவே முடியலே. அம்பிங்கற இந்த நல்லவன் கிட்டெ மறைஞ்சிருந்த ராட்சசன் விதிர்த்து எழுந்திருந்துட்டான். அப்புறம் நான் மிருகமா மாறிப் போயிட்டேன்.''

''போரும்; எனக்கு எல்லாம் தெரியும்'' என்று நான் அவன் மேலே கூறுவதைத் தடை செய்தேன்.

ஆயினும் அவன் தொடர்ந்தான்; ''மனச்சாட்சி என்னைக் கொல்லு கொல்லுன்னு கொன்னுடுத்து. நாலு மாசம் நரக வேதனைப் பட்டப்பறம், நாம்ப செஞ்ச பாவத்துக்குப் பிராயச்சித்தம் காமாட்சியை நாமே கல்யாணம் பண்ணிக்கறதுதான்னு முடிவு பண்ணினேன். அதுக்கேத்தாற் போலெ அவ அம்மா காலமாகி ஊர்க்காரா அவளை யார் கையிலேயாவது புடிச்சுக் குடுத்துட முயற்சி பண்ணிண்டிருந்தா. போட்ட வேஷத்தை இன்னும் பலமாப் போட்டு அவளை நானே கட்டிக்கிறேன்னு சொன்னேன். ஆனா அந்த உத்தமப் பொண் மத்தவாளை நிராகரிச்சது போல என்னையும் நிராகரிச்சுட்டா. காரணம் எனக்குத் தெரியும். கறை பட்ட தன் ஒடம்பை இன்னொருத்தனுக்குக் காணிக்கையாக்க அவ விருப்பப்படலே. ஆனா மத்தவாளுக்கு, அவ அர்ப்பணிச்சுண்டாத்தான் துரோகம், அவளைக் கறைப்படுத்திய எனக்கே அவள் மனைவியானா? ஒரு நாளைக்கு அவளை அவ வீட்டில போய்ப்பார்த்து விஷயத்தைச் சொல்லி என்னை மன்னிச்சு, என் பாவத்துக்குப் பிராயச்சித்தம் செய்ய வாய்ப்புத் தரும்படி கேட்டுண்டேன். காமாட்சி சம்மதிச்சுட்டா.

''மாமா! ஆண்களோடு வெளி வேஷத்தைப் பார்த்து மயங்காதேன்னு சொல்லுவா, அது என் விஷயத்திலே உண்மையாயிடுத்து!'' என்றான் அவன் இறுதியாக.

உண்மைதான்! எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ, யார் கண்டார்கள்?

*

# INDIAN COFFEE INDUSTRY

Indian Coffee, distinctive and delicious, gets its special aroma from the rich soil, climate and culture of India.

Nurtured on the shaded slopes of the Western Ghats, with its spure extending Eastwards, Indian Coffee is grown under ecological conditions ideal for the growth of the finest coffee.

Coffee in India covers 1,96,228 hectares and accounts for 95,297 estates. Of this 93,215 are small holdings below 10 hectares and 2019 above 10 hectares. These estates employ 2, 54, 795 daily workers.

The Coffee Board works for the growth and development of the Indian Coffee Industry. The Central Coffee Research Institute is located in Balehonnur of Chikmagalur District of Karnataka State. The Research Department has helped considerably in the scientific growth of Coffee Plantation.

## AREA UNDER COFFEE

| STATE | Arabica (Hectares) | Robusta (Hectares) | Total (Hectares) |
|---|---|---|---|
| Karnataka | 69,238 | 36,206 | 1,05,444 |
| Tamilnadu | 26,357 | 4,747 | 31,104 |
| Kerala | 3,233 | 52,921 | 56,154 |
| Andhra Pradesh, Assam, Orissa, West Bengal, Andamans, Madhya Pradesh and Maharashtra (Experimental Plantations) | 3,339 | 187 | 3,526 |
| | 1,02,167 | 94,061 | 1,96,228 |

India's estimated production of excellent coffee is about 1,60,000 tonnes.

Coffee that is grown has to be processed or cured. There are 31 Coffee Curing Establishments in the country. A whole range of operations in the country contribute to the quality of INDIAN COFFEE. Careful picking of the coffee fruits, scientific processing, curing done to set standards, and quality assessment leads to export of only the best coffee beans.

Coffee exports during 80-81 realised foreign exchange worth 202 crores of rupees.

Current efforts are aimed at increased production in traditional areas and bringing non-traditional areas under coffee, thus ensuring adequate supplies to meet increasing trends in exports and international consumption of the future.

Kp/

COFFEE BOARD, INDIA.

# நீல்கிரீஸ் 1905

## டிபார்ட்மெண்ட் ஸ்டோர்ஸ்

58 டாக்டர் ராதாகிருஷ்ணன் ரோடு
மயிலாப்பூர் சென்னை 600 004

**14-4-82 முதல் முழு அளவில் திறக்கப்பட்டுள்ளது**

சுமார் 40 வருடங்களாக பெங்களூர் மக்களை சிறப்பாக மகிழ்வித்த எங்கள் சேவை, இப்பொழுது சென்னை மக்களுக்கு அளிக்கப்படுகிறது.

பேக்கரி, கன்பெக்ஷனரி தயாரிப்புகள்: புத்தம் புதிய பால், தயிர், வெண்ணை, நெய், க்ரீம், மற்ற உணவு வகைகள், டின்களில் தின்பண்டங்கள், பழரசங்கள் மற்றும் பல்வேறு வீட்டிற்கான பொருள்கள் — எங்கள் ஸ்டோரில் கிடைக்கும்.



**நீல்கிரீஸ் 1905**

Phone : 85111

---



## உலகப் புகழ் பெற்ற 'காந்தலாக்ஸ்' பேதி மாத்திரைகள்

புளித்த ஏப்பம், கிராணி, வயிற்று இரைச்சல், மலச்சிக்கல், மலச்சிக்கலால் ஏற்படும் வயிற்று வலி, வயிற்றில் வாழும் கிருமி உபாதைகள், மலச்சிக்கலால் ஏற்படும் உஷ்ணம், முதலியவற்றைத் தீர்க்கவல்ல சிறந்த மாத்திரைகள்.

தாய்மார்களுக்குத் தன்னிகரற்ற மருந்து **'ஜின்ஞ்ராக்ஸ்'** பிரசவ நடகாய லேகியம்

சுவையும், மணமும் ஒருங்கே அமையப்பெற்றதுதான் ஜின்ஞ்ராக்ஸ் பிரசவ நடகாய லேகியம்.

குழந்தை பெற்ற தாய்மார்கள், பிரசவித்த மூன்றும் நாள் முதல் கழற்சிக்காய் (5 gms) அளவு காலை, மாலை ஆகாரத்திற்குப் பின் உட்கொண்டு வர பிரசவத்தினுல் ஏற்படும் களைப்பு, சோர்வு, பலஹீனம் முதலியவற்றைப் போக்கி, உடலுக்குச் சக்தியையும் ஆரோக்கியத்தையும், வனப்பையும் அளிக்கிறது. மேலும் ஜீரண உறுப்புகளின் பணிகளைச் செம்மைப்படுத்தி முறைப்படுத்துகிறது.

ஒரிஜினல்

## 'K. S. தென்னமரக்குடி எண்ணெய்'

**மனிதர்களுக்கு:—** இரத்தக்கட்டு, அடிபட்ட வீக்கம், சொறி, நமச்சல், நாட்பட்ட புண், படர் தாமரை, சேற்றுப்புண், கைகால்களுக்கு மூட்டு நழுவுதல், மார்பு வலி, மூச்சுப் பிடிப்பு, எலும்பு முறிவு முதலியவைகளுக்குச் சிறந்த நிவாரணி.

**மிருகங்களுக்கு:—** கழுத்துப்புண், கட்டி கால் தாங்குதல், மாடுகளுக்குச் சப்பை நழுவுதல், எலும்பு முறிவு, மூட்டுப் பிசகு, அடிபட்ட அதிர்ச்சி, கழுத்து வீக்கம் முதலியவைகளுக்குப் பயன்படுத்தலாம்.

தயாரிப்பாளர்கள்:

**Dr. K. S. & Sons,** (போன்: 1196)

66, மணிக்காரத் தெரு, கும்பகோணம்-612001.
(எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கும்)

# அம்மா உனக்கு வழி தெரியலியா?

**-கமலா சடகோபன்-**

சியாமளாவுக்கு அன்று ஆபீஸ் விடுமுறை. தன் அறையில் உட்கார்ந்து நாவல் படித்துக் கொண்டிருந்த சுவாரசியத்தில் அவளுடைய குழந்தை முரளி அறைக்கு வெளியே நழுவியதை அவள் கவனிக்கவில்லை.

ஹாலில் அவள் அண்ணன் பாலுவும் அவன் மனைவி கௌரியும் தங்கள் குழந்தை பாபுவுடன் உற்சாகமாகக் கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தனர். உரத்த குரலில் அவர்கள் சிரித்தது அடிக்கடி ஒலித்தது.

''நானும் யானை ஏறணும் மாமா; என்னையும் ஏத்திக்கோ'' என்று முரளியின் குரல் கேட்டதும், சியாமளா அதிர்ச்சியுடன் எழுந்தாள்.

அறையின் இரண்டு கதவுகளுமே சற்று ஒருக்களித்து மூடப்பட்டிருந்ததால் ஏற்பட்ட இடைவெளியின் வழியாகச் சியாமளா கவனித்தாள். பாலு தன் வாட்டசாட்டமான உடம்பைச் சிரமத்துடன் வளைத்து, பாபுவை முதுகில் ஏற்றிக் கொண்டு யானை மாதிரி அசைந்து முழங்கால்களால் தவழ்ந்தான். கௌரி அதை ரசித்து மகிழ்ந்து கொண்டிருந்தாள்.

பாலு, மனைவியின் முகத்தைச் சங்கடத்துடன் பார்த்தான். ''பாபு, இறங்குப்பா கண்ணு, அப்பாவுக்கு முதுகு வலிக்கிறது'' என்று கூறி, அவனை மெள்ள இறக்கிவிட்டாள். எழுந்து நின்றான். அவனால் முடிந்தது அந்த ஆட்டத்துக்கே முற்றுப்புள்ளி வைத்து, பிரச்னையை வளர்த்தாமல் தீர்ப்பதுதான். கௌரியின் முகம் ஜிவ்வென்று சிவந்தது.

''சேசே,.. வரவர நம்ம வீட்டிலேயே நமக்குச் சுதந்தரம் இல்லாமப் போச்சு. புருஷன், மனைவிதான் இலை மறைவு, காய் மறைவாப் பயந்துண்டு பழக வேண்டி இருக்குன்னா, நம்ம குழந்தைகூடச் சொந்தமா அப்பான்னு உறவு கொண்டாட முடியல்லியே! என்னிக்கோ ஒரு நாள வீட்டிலே இருக்கார். குழந்தையை அபூர்வமாக் கொஞ்சறார்; அதுக்குக்கூட ஒரு போட்டியா?''

சியாமளா ஹாலுக்கு வேகமாக வந்து முரளியை அறைக்கு எடுத்து வந்து விட்டாள். அவள் கணவனுடன் மனத்தாங்கல் கொண்டு பிறந்த வீட்டுக்கு வந்திருப்பவள்தான். ஆனாலும் சொந்த அண்ணன் தன் மனைவியுடன் பழகுவதைக் கண்டு பொருமைப்படும் அளவுக்கு நாகரிகம் தெரியாதவளா? படித்துப் பட்டம் பெற்றுப் பிரபலத் தனியார் நிறுவனத்தில் கைநிறையச் சம்பளம் வாங்கும் அவள், இவ்வளவு தரைக் குறைவான சொற்களைக் கேட்கும் நிலையில் கொண்டு வந்த விதியையும் அவள் பொறுமையுடன் தாங்கிக் கொள்வாள். ஆனால் முரளிக்கு ஏன் இந்தத் தலைவிதி?

''அம்மா, அப்பாகிட்டே எப்போம்மா அழைச்சிண்டு போறே?'' முரளியின் கேள்வியினால் அதிர்ச்சி அடைந்த சியாமளா, அங்கே மாட்டியிருந்த காலண்டரைப் பார்த்தாள்.

அவள் சங்கரைப் பிரிந்து வந்து சரியாக மூன்று மாதமும் ஒரு வாரமும் ஆகின்றன. இது வரையில் அவனிடமிருந்து கடிதமோ, டெலிபோனோ எதுவுமே வரவில்லை. குழந்தைக்கு அப்பா நினைவு வந்துவிட்டது நியாயந்தானே?

அவள் மன்னி கௌரி ஆரம்பத்தில் அன்புடன்தான் அவளிடம் பழகினாள். 'கொஞ்ச நாளில் கோபம் குறைந்து, சியாமளா புகுந்த வீட்டுக்குப் போய் விடுவாள், சங்கராவது மனைவியைச் சமாதானப்படுத்தி அழைத்துப் போவான்' என்று கருதினாள். அவள் நம்பிக்கை பொய்த்துவிட்டது. அதனால் வார்த்தைகளால் சியாமளாவை வாட்டி வதைக்கிறாள்.

போன வாரமும் இப்படித்தான ஓர் அதிர்ச்சி அவளுக்குக் கிடைத்தது. அன்று இரவு பாலு தன் அறையில் தூங்கிய பிறகும், சியாமளா ஹாலில் உட்கார்ந்து டி.வி. பார்த்துக் கொண்டிருந்தாள். முரளியை ஏற்கனவே அறையில் தூங்க வைத்து விட்டாள். தற்செயலாக வராந்தாவின்

அருகில் இருந்த சாளரத்தின் பக்கத்தில் வந்த அவள் வராந்தாவின் இருளைக் கிழித்துக் கொண்டு கௌரியின் முணுமுணுக்கும் குரல் கேட்டதும் திகைப்புடன் நின்றாள்.

சமையலில் உதவி செய்வதற்காக, சீதா என்ற பதினைந்து வயதுப் பெண் வீட்டோடு தங்கி இருந்தாள். அவளிடம் கௌரி சொன்னாள்.

''சீதா, சியாமளா அவள் அறைக்குப் படுக்கப் போய்ட்டாளா பாரு. நான் படுத்துக்கப் போகணும். அவ எதிரிலே போகக் கூட எனக்குப் பிடிக்கல்லே.''

சியாமளா டி.வி.யை நிறுத்தி விட்டு, தன் அறைக்குப் போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டாள். அதிலிருந்து அவள் கூடிய வரையில் தன் அறையை விட்டு வெளியே வருவதில்லை.

அன்றைச் சம்பவத்தை விட இன்று முரளிக்கு ஏற்பட்ட அவலந்தான் அவளது நெஞ்சத்தைத் தீயாகத் தகித்தது. முரளியுடன் அந்த வீட்டை விட்டு வெளியேறி வேறு இடம் பார்த்துக் கொண்டு விடுவது என்று முடிவு செய்தாள்.



மறுநாள் ஆபீஸில் இடைவேளை உணவு நேரத்தில் அவளுடைய நெருங்கிய தோழி நித்தியாவுடன் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது தான் முடிவைக் கூறினாள்.



நித்தியா லேசாகச் சிரித்தாள். ''சியாமளா நீ இந்த முடிவுதான் எடுக்க முடியும். நீ சட்டைப் பித்தானைத் தச்சு வைக்காதது உன் குத்தமாக இருந்தபோதும், உன் கணவர் அதைச் சுட்டிக் காட்டி ரெண்டு வார்த்தை அதிகமாப் பேசினதற்காக, ரோஷத்தோடு அண்ணன் வீட்டுக்கு வந்த நீ கேவலம் மன்னி செய்யற அவமதிப்புகளைப் பொறுக்க உனக்கு முடியாதுதான்.''

''நித்தியா, அவர் திட்டினதோட இல்லை. என் முகத்திலே அந்தச் சட்டையை விட்டெறிஞ்சார். வேலைக்காரி கூட இந்தக் காலத்திலே பொறுக்கமாட்டாள். அவருக்குச் சமமாக் கை நிறையச் சலவை நோட்டுக்களாய்ப் பணத்தை ஒவ்வொரு மாசமும் நான் கொண்டு வரலையா? அந்தத் தைரியத்திலேதானே அவர் ஸ்கூட்டரே வாங்கினர்? இத்தனைக்கும், வீட்டு நிர்வாகம், முரளி படிப்புவிஷயம் இத்தனையும் அவர் காதிலே போடாமல் நானே கவனிச்சுக்கிறேன். என் மாமியாருக்கும் ஆபீஸ் நேரம் போக மீதி நேரங்களில் உதவி செய்யறேன். நீ என்ன வெட்டி முறிக்கறேன்னு அவர் எப்படி என்னைக் கேட்கலாம்?''

''சியாம், ஒன்றை மறுந்துட்டுப் பேசறியே! உலகத்திலே நீ ஒருத்தி மட்டுமா வேலைக்குப் போறே? பெண்களுடைய வெற்றியின் ரகசியம் என்னன்னு தெரியுமா? புருஷனுடைய ஒவ்வொரு தேவையிலும் அவளுடைய முத்திரை அன்பாகப் பதியணும். அவள் இல்லாவிட்டால், தான் இல்லை என்ற உணர்வைக் கணவனுடைய மனசிலே பதியவைக்கணும். பணம் சம்பாதிப்பதெல்லாம், தற்காலத்திலே பொருளாதாரச்

சிக்கலைச் சுலபமாகச் சமாளிக்கத்தான். என் விஷயத்தையே சொல்றேன். என் கணவருடைய தேவைகளைப் பூர்த்தி செய்யறதைத்தான் என் முதல் கடமையாக நெனைக்கிறேன். அவர் பெருந்தன்மையுடன் என்னை வேலைக்கு அனுப்புவதாக நெனைக்கிறேனே தவிர, என்னுடைய பெருமையாக அதை நான் நெனைக்கல்லே. அதனாலே ஒரு சின்னப் பிரச்னை கூட எங்களுக்குள் இதுவரையில் ஏற்பட்டதில்லே.''

''அவர் வேலையை ராஜீநாமாச் செய்யச் சொல்லி வற்புறுத்தினார். அதனாலே நான் பிரிஞ்சு வந்தேன்.''

''ஆனா முரளியை அவனுடைய அப்பாவிடமிருந்து பிரிக்க உனக்கு உரிமையில்லை. ஐம்பதாயிரம், அறுபதாயிரம் குடுத்து வாங்கற கார் வீட்டுக்கு வெளிப்புறந்தான் நிற்க முடியும். நாற்பது, ஐம்பது ரூபாய் கொடுத்து வாங்கற செருப்பு வீட்டு நடையைத் தாண்டி வர முடியாது. வெறும் பத்துப் பைசாவுக்கு வாங்கற கர்ப்பூரம், பூஜை அறையிலே சுவாமிக்கு அருகில் இடத்தைப் பிடிக்கிறதுமில்லாமே, இறைவனுக்கே அர்ப்பணம் ஆகிறது. அதன் தூய்மை மணமாக மாறி வீடெல்லாம் நிறைகிறது. ஒரு பெண், மனைவியாக மாறும்போது, அந்தக் கர்ப்பூரத்தின் உயர்வை அடைகிறாள்.''

''நான் கர்ப்பூரம் இல்லேன்னு சொல்றியா?''

''கர்ப்பூரம் நடையிலே விழுந்திருக்கு. அது வீதியிலே தள்ளப் படறதுக்குள்ளே மறுபடியும் அதைப் பூஜை அறையிலே வைக்க முயற்சி செய்ய வேண்டும்.''

''நீ முயற்சி செய்தால் மட்டும் முடியுமா? பூஜை அறையே பூட்டிக் கிடக்கிறதே!''

''பைத்தியம்! சின்ன விஷயத்துக்கு அர்த்தமில்லாமே நீ கோபிச்சிண்டு வந்துட்டு, சங்கர் வந்து உன்னைச் சமாதானப் படுத்தணும்னு எதிர்பார்க்கிறியே! அவர் எந்தப் தப்பும் செய்யலையே!''

சியாமளா மௌனமாக எழுந்தாள்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒரு மாலையில் சியாமளா ஆபீஸிலிருந்து திரும்பி வரும்போது, கௌரியும், பாலுவும் வீட்டு வாசலில் கவலையும், பரபரப்புமாக நிற்பதைக் கவனித்தாள். அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் அவர்கள் இருவரையும் சுற்றி நின்றிருந்தனர். சியாமளா கவலையுடன் விரைந்தாள்.

''சியாமளா, முரளியைக் காணோம். பள்ளிக் கூடத்திலிருந்து அப்பவே புறப்பட்டுட்டானாம்.''

கௌரி உடனே பொரிந்து கொட்ட ஆரம்பித்தாள். ''அவா அவா ஒழுங்கா இருந்திருந்தா இந்த அநாவசியத் தலைவலி எங்களுக்கு ஏற்பட்டிருக்குமா?''

அத்தனை பார்வைகளும் அவளை முள்ளாய்க் குத்தி எடுக்க, சியாமளா தள்ளாடியவாறு உள்ளே சென்றாள். அங்கே இருந்த சோபாவில் குப்புற விழுந்தாள். அரை நினைவுடன் 'முரளி; முரளி' என்று அரற்றிக் கொண்டிருந்தாள்.

டெலிபோன் மணி ஒலித்தது பாலு விரைந்து வந்து எடுத்தான். எதிர்முனையில் பேசப்படுவதை அவன் மௌனமாகக் கேட்டுக் கொண்டு நின்றான்.

''சியாமளா! எழுந்திரு உன் புருஷன்'' என்று கூறிவிட்டுத் தனக்குச் சம்பந்தமில்லாதது போல் கௌரி பின் தொடரத் தன் அறைக்குச் சென்றான்.

சியாமளா நடுங்கும் குரலில், ''ஹல்லோ'' என்றாள்.

''சியாமி, நான்தான் சங்கர் பேசறேன். பக்கத்துக் கடையிலேருந்து பேசறேன். லைனிலே கொஞ்சம் இரு.''

அடுத்த நிமிஷம், ''அம்மா!'' என்ற முரளியின் குரல் கேட்டதும் சியாமளா அழுது விட்டாள். ''முரளி அம்மாகிட்டே சொல்லாம இப்படிப் போகலாமா?''

''அப்பாவும் நானும் யானை விளையாட்டு விளையாடினோம்மா. அம்மா நீயும் இங்கேயே வந்துடும்மா?''

சியாமளா துக்கம் நெஞ்சை அடைக்கக் கூறினாள், ''எனக்குத்தான் வழியே தெரியல்லே!''

''உனக்கு வழி தெரியலியா? ரொம்ப ஈஸிம்மா. பஸ்லே எறி டெர்மினஸ்லே எறங்கு, நேரே கொஞ்ச தூரம் நடந்தாப் பக்கத்திலே காபி, பொடிக்கடை. அதுக்குப் பக்கத்து ரோடிலே திரும்பினா நாலாவது வீடு நம்ம வீடு. நான் வாசல்லே நிக்கறேன். என்னைப் பார்த்தா உனக்கு வீடு அடையாளம் தெரியும்.''

சங்கர் ஊரத்தக் குரலில் சிரித்தது போனில் நன்கு கேட்டது. சியாமளா புன்னகை புரிந்தாள்.

சங்கர் மீண்டும் பேசினான். ''சியாமி, 'அம்மா கவலைப்படுவாளே! நீ இப்படிச் சொல்லாமே வந்துட்டயேன்'னு முரளியைத் திட்டினேன். அது போகட்டும். நீ கவலைப் படாதே. முரளியை நானே ஜாக்கிரதையாக அங்கே கொண்டுவந்து விடறேன்.''

''வேண்டாம். நானே அங்கே வரேன்.''

''முரளியை அழைத்துப் போகவா?''

''இல்லே.'' அதற்குமேல் பேச முடியாமல் திணறினாள்.

''அசடே! நீ வராதே. நானே வந்து உன்னை அழைச்சிண்டு போறேன். உன் மன்னி எதிரிலே அதான் உனக்கு மதிப்பு.''

முரளி ஏதாவது சொல்லி இருப்பானோ என்று சியாமளா நினைத்தாள். ''வந்து.. ஒரு விஷயமும் இனிமேல், நமக்குள்ளே.. இப்படியெல்லாம்...''

சங்கர் சிரித்தான். ''போனிலே எதுக்கு? இங்கே நீ வந்தப்புறம் ஓர் ஒப்பந்தமே ரெண்டு பேரும் எழுதிண்டுட்டாப் போச்சு.''

''நீங்க எப்போ வரீங்க?''

''போனை வச்சிட்டுத்தானே வர முடியும்?''

போனின் தொடர்புடன் கூடவே தன் நெஞ்சில் இருந்த சுமைகளையும் துண்டித்து இறக்கினாள் அவள்.

*




பல்லைத் தேய்த்துக்கொண்டு காபிக்காக, காக்கும் நேரம் தினத்தாள் படிக்கலாமென்று முன்பக்கம் சென்றேன். வாசற்படியில் மாவிலைத் தோரணமும், முன் முகட்டில் மாக்கோலமும், செம்மண் கட்டும் என் கண்ணில் பட்டன.

''ஏ, பட்டு, இன்னிக்கு என்ன விசேஷம்? ஏதாவது பண்டிகையா? வரலக்ஷ்மி நோன்பா?'' என்று உரக்கக் கேட்டேன்.

கலகலவென்று சிரித்துக் கொண்டு, கை வளையல் ஒலிக்க, மெட்டி தாளம் போட, இடுப்பில் புதுப் புடைவையும், தலையில் கட்டுக் கதம்பமுமாக வந்து என் முன் நின்றாள் என் மனைவி பட்டு. ''ஆமாம். பங்குனி மாசந்தான் வரலக்ஷ்மி விரதம் வரும்!'' நையாண்டியாக நொடித்துவிட்டு மணக்கும் காபியை என் பக்கம் நீட்டினாள்.

''பின்னே என்னவாம்?''

''நீங்கள் யோசித்துப் பாருங்கள். பத்து வருஷம் முன்பு இதே தேதியில் என்ன முக்கியமான நிகழ்ச்சி நடந்தது உங்களுக்கு? ஆங்கில மாதம், தேதி, தமிழ் மாசம், தேதி, கிழமை எல்லாம் ஒத்து வருமோ? அப்படி வந்திருக்கிறது இன்றைக்கு.'' அவள் உற்சாகமே உருவாக நின்றாள்.

என் பெண்ணுக்கு வயது ஒன்பதுதான், பையனுக்கு ஏழு. அதனால் இவர்கள் யாருடைய பிறந்த நாளாகவும் இருக்க முடியாது. என் மனத்தில் திடீரென்று பளிச்சிட்டது. இன்று எங்கள் கல்யாணமான தினம்.

''பத்து வருஷம் ஒருத்தரை ஒருத்தர் பொறுத்துக்கொண்டு தள்ளியதற்கு ஒரு விழாவா? காலம் ஓடிக்கொண்டுதான் இருக்கும். அதற்காக?'' என் குரல் ஏளனமாகத் தொனித்ததோ?

பட்டுவின் முகம் ஏமாற்றத்துடன் வாடியது. என் உள்ளத்தில் எரிச்சல் மூண்டது. என்ன மனிதர்கள், என்ன மோகம்! எதற்கெடுத்தாலும் ஒரு விழாவா?

''இப்போது நான் என்ன சொல்லிவிட்டேன்? நம் கல்யாணம் ஆகி, பத்து ஆண்டுகள் ஆயின, இதெல்லாம் சகஜமாக நடப்பதுதானே? அதற்கு என்ன மாவிலைத் தோரணம்? நம் தாம்பத்தியத்தினால் என்ன பெரிய சாதனை நடந்தது?'' என்று பொரிந்து கொட்டினேன்.

''பத்தாண்டுக் காலம் நாம் இரண்டு பேரும் சுகமாக இருக்கிறோம்; அன்புமயமான ஒரு குடும்பத்தை உருவாக்கியிருக்கிறோம். அதற்குக் கடவுளுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். சாதனையைப் பறை சாற்றிக் கொள்ளத்தான் விழாவா? அஞ்சலிக்காக இருக்கக்கூடாதா?'' என்றாள் அவள்; விருட்டென்று உள்ளே போய்விட்டாள்.

நான் காபியை 'மடக், மடக்' என்று விழுங்கிவிட்டுச் செய்தித்தாளை விரித்து வைத்துக்கொண்டு அமர்ந்தேன். இன்னும் ஒரு மணி நேரம் போனால் வீட்டுக்காரர் வந்துவிடுவார். இரண்டு மாத வாடகை பாக்கி. இந்த மாதம் இன்சூரன்ஸ் வேறு கட்டவேண்டும். நான் இங்கு கவலைப்பட்டுத் தவிக்கிறேன். இவள் என்னடா என்றால் விழாக் கொண்டாடுகிறாளாம்.

உரக்கச் சங்கீதம் வேறே. அதற்கேற்பக் குழந்தைகள் தாளம் போட்டார்கள்.

''கொஞ்சம் சத்தம் போடாமல் இருக்க முடியுமா?'' என்று கர்ஜித்தேன்.

''பேசாமல் இருங்க. அப்பாவுக்கு உடம்பு சரியில்லையோ என்னவோ?'' என்றாள் என் மனைவி.

சற்றுப் பொறுத்து என் பெண் வந்தாள். ''அப்பா, குளிக்க வெந்நீர் எடுத்து வெச்சாச்சு, சீக்கிரம் குளிச்சுட்டு வாங்கோ, கோவிலுக்குப் போயிட்டு வந்து நான் பள்ளிக்கூடம் போகணும்'' என்று அதட்டினாள்.

நான் முணுமுணுத்துக்கொண்டே... எழுந்தேன். குளியலை முடித்துக்கொண்டு நான் பூஜையறையில் நுழைந்தபோது என் மனைவி அங்கே கண் மூடித் தியானத்தில் ஆழ்ந்திருந்தாள். எதிரே நைவேத்தியப் பொருள்களைப் பார்த்தேன். முந்திரிப் பருப்பும், நெய் வாசனையும் சேர்ந்து என் மூக்கைத் துளைத்தன.

அவள் கண் விழித்து எழுந்து வணங்கினுள். ''நீங்களும் நமஸ்காரம் புண்ணுங்க. இதோ இதையெல்லாம் சமையலறையில் வச்சுட்டு வரேன். கோவிலுக்குக் கௌம்பலாம்'' என்ருள்.

நான் ஓரக்கண்ணுல் அவளைக் கவனித்தேன். சற்று முன் கண் கலங்கியவளாகவே தெரியவில்லை. சாவதானமாகவே அவள் தன் வேலைகளைச் செய்தாள். குழந்தைகளுக்கு உடுப்புக்களைச் சரி செய்தாள்.

நாங்கள் எங்கள் தெரு முனையிலிருக்கும் பிள்ளையார் கோயிலுக்குச் சென்ருேம். அர்ச்சனை செய்வித்து வணங்கிவிட்டுத் திரும்பினுேம்.

''மனசு நெறைஞ்சு இருக்கு, பாத்தீங்களா? புள்ளையாருக்கு எப்படித்தான் அலங்கார்ரம் செய்திருந்தான் அந்தப் பையன்?'' என்ருள்.

''அவன் தொழில் அது: இதில் என்ன புதுமை?'' என்றேன், அசுவாரஸ்யமாக.

''அம்மா, அந்தக் கோவில் சாலு மாமா கூடப் புது வேஷ்டி கட்டியிருந்தார், பார்த்தியா? கறையிலே நந்தி மாதிரி போட்டிருந்தது. எனக்கும் அது போல ஒண்ணு வாங்கித் தர்றியா?'' என்ருன் என் பிள்ளை.

''மாலையிலே மஞ்சள் ஜவந்தியோட பச்சை இலையை மட்டும் வைக்காமல், சிவப்பு அரளி, வெள்ளை அரளி வச்சிருக்கிறதைப் பாத்தியா, அம்மா?'' இது என் பெண்.

எனக்கு எதுவும் ரசிக்கவில்லை. வீட்டுக்காரனுக்கு எப்படிப் பதில் சொல்லலாம்?



இன்சூரன்ஸுக்குப் பணம் கட்டுவதைத் தள்ளிப் போட முடியுமா? நான் வேகமாக நடந்து வீட்டை அடைந்தேன். கதவைத் திறந்துகொண்டு உள்ளே போய் இலை முன் அமர்வதற்குள் என் குடும்பமும் வந்துவிட்டது.

''சீக்கிரம் உட்காருங்க. பாயசத்தைக் குடிச்சுட்டு, மைசூர்ப்பாகைச் சாப்பிட்டு விட்டு, மோருஞ்சாதம் சாப்பிடுங்க, போதும். தயாராகக் கலந்து வெச்சிருக்கேன். பள்ளிக்கூடம் கௌம்புங்கடுகோ, நாழியாச்சு. டிஃபன் பாக்ஸ்லே கத்தரிக்காய்ச் சாதமும், வடையும் இருக்கு'' என்று குழந்தைகளுடன் பேசிய வண்ணம் இருந்தாள் என் மனைவி.

அவர்களும் உற்சாகமாக அமர்ந்து சுவைத்துச் சாப்பிட்டார்கள். லயிப்பு இல்லாமல், நான் இரண்டு கவளமாகச் சோற்றை வாயில் அடைத்தேன்.

''குழந்தைகளுக்குத்தான் பள்ளிக்கூடம் அவசரம். உங்களுக்கு என்ன? நிதானமாகச் சாப்பிடுகிறது. வாங்கிபாத் பிடிக்குமே உங்களுக்கு, இனியும் ஒரு கரண்டி போடட்டுமா?''

அவள் கரிசனம் எனக்கு ஏனோ கரித்தது.

''வேண்டாம்'' என்றேன், விறைப்பாக.

பட்டு கலகலவென்று சிரித்தாள். ''ஆமாம், இப்படி வாய் ருசி, வயிற்றுப் பசிகூடப் பார்க்காமல் நீங்க என்ன கவலைப்படறீங்க? முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு வேதனைப்பட்டால் பிரச்னை தீர்ந்து விடுமா? திருமானால் சொல்லுங்க; நானும் உட்கார்ந்திருக்கேன். வீட்டுக்காரர்



வரும்போது அந்தக் கவலையைப் படுவோமே! இப்பப் பாயசம் சாப்பிடுங்க. புள்ளையார் காப்பாத்துவார்'' என்றாள்.

அவளுக்கு மட்டும் என் நிலைமை தெரியாதா? அவளுக்கு மட்டும் கவலை இல்லையா? பெரிய வேதாந்தி மாதிரி எனக்கு உபதேசம் செய்கிறாள். பிரச்னைகளுக்கு அவளா தீர்வு காணப் போகிறாள்? நான்தானே தவிக்கவேணும்?

''கொஞ்ச நேரம் இலையைப் பார்த்துச் சாப்பிடுங்க. நல்ல நாளும் அதுவுமா இப்படி இருக்கக் கூடாது.''

''உனக்குத் தினமும் நல்ல நாள்தான், இன்னிக்குக் கல்யாண தினம். நாளைக்கு உன் புள்ளை, பொண் பொறந்த நாள். அதன் பிறகு உனக்கும் எனக்கும் பொறந்த நாள், குடி வந்த தினம், ரேடியோ வாங்கிய தேதி, அப்புறம் பண்டிகை பூஜை-எப்பவும் விழா'' என்று எரிந்து விழுந்தேன்.

''ஆமாம், எனக்கு அப்படித்தான்'' என்றாள் அவள், அமைதியாக. சமையல் நன்றாகத்தான் அமைந்திருந்தது; மைசூர்ப்பாகு வாயில் கரைந்தது. பால் பாயசம் மணத்தது. ஆனால் நான் எதையும் பாராட்டவில்லை. மௌனமாகச் சாப்பிட்டுவிட்டு எழுந்தேன். உடையை மாற்றிக் கொண்டு அலுவலகம் கிளம்பிவிட்டேன்.

வாடகைப் பணம் கேட்க யாரும் வராதது சற்றுத் திருப்தி. அன்று அலுவலக நண்பர் சென்ற மாதம் கடன் வாங்கிய பணத்தைத் திருப்பித் தந்தார். நிம்மதியுடன் இன்சூரன்ஸ் பணம் செலுத்தி விட்டேன்.

மாலை வீடு திரும்பிய பின்பும் என் மனைவியுடன் ஏதும் பேசவில்லை. அவளும் என் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவில்லை. மும்முரமாக என்னவோ பைகளில் சீராக அடுக்கிக்கொண்டிருந்தாள்.

''கால் அலம்பிண்டு வந்தால், காபி சாப்பிட்டுட்டுப் பீச்சுக்குப் போய் வரலாம்'' என்றாள் அவள்.

ஒரு வாரமாக அவளுக்கு முழங்காலில் வலி. எப்படி நடக்கப் போகிறாளாம்?

நான் கை, கால், முகம் கழுவிக்கொண்டு, மௌனமாக அவள் கொடுத்த காபியை அருந்தினேன். குழந்தைகள் இருவரும் வந்து என் கைகளைப் பிடித்துக் கொண்டனர். ''வாங்க, அப்பா. அம்மாவுக்கு முன்னாடி ஓடிப் போயிடுவோம்'' என்று கூறினர்.

அவர்களது ஆனந்தமயமான முகத்தைப் பார்த்து என்னால் புன்னகை செய்யாமல் இருக்க முடியவில்லை. நாங்கள் மூவரும் தெருவில் போய் நின்றோம். பட்டு, தன் தோளில் ஒரு பையை மாட்டிக்கொண்டு வீட்டைப் பூட்டி இழுத்துப் பார்த்து விட்டு எங்களுடன் வந்தாள். கடற்கரைக்கு அருகிலேயே எங்கள் வீடு இருந்தபடியால், சீக்கிரமே பீச்சை அடைந்தோம். சற்றுத் தூரம் சென்று மணலில் அமர்ந்தோம்.

சுண்டல், முறுக்கு, வேர்க்கடலை, ஐஸ்கிரீம் விற்பவர்கள் ஒவ்வொருவராக வந்து நச்சரித்தனர். ''மனுஷனைச் சற்று நேரம் அமைதியாக ஆரோக்கியமான காற்றைச் சுவாசிக்க விடமாட்டேன்'' என்கிறார்கள்.

''எதற்காக அவர்களைக் கடியறீங்க?''

பாவம், அது அவர்கள் பொழைப்பு. நல்ல நாளன்று மனசைத் தெளிவா வச்சுக்கணும்'' என்றாள் பட்டு.

''எனக்கு வேணுமானால் நானே கூப்பிட்டு வாங்கிக் கொள்கிறேன். உட்கார விடாமல் பிடுங்கறாங்களே!'' என்று வெறுத்துக் கொண்டேன்.

''இங்கே எதுக்கு உட்கார வேணும்? எழுந்திருங்க, தண்ணி ஓரமாப் போகலாம். அலைகளைப் பார்த்துண்டே டிபன் சாப்பிட. வெங்காயப் பக்கோடா கொண்டு வந்திருக்கேன்.''

''இங்கேயே போதும்'' என்றேன், அலுப்புடன்.''

''ஏன்? அப்பா, அப்படிச் சொல்றே? அங்கே அலை மடிஞ்சு மடிஞ்சு விழும். தண்ணி பாய் விரிச்சாப்பல ஓடி வந்து நம்ம காலை நனைக்கும். குளிர்ச்சியா இருக்கும்'' என்றான் மகன்.

''அப்புறம் நண்டு வேறே வளைக்குள்ளேந்து எட்டிப் பார்க்கும்'' என்று என் பெண்ணும் தன் பங்குக்குச் சேர்ந்துகொண்டாள்.

''சரி, நீங்க இங்கேயே இருங்க. இந்தப் பையைப் பத்திரமாய்ப் பாத்துக்குங்க. நாங்க காலை நனைச்சிட்டு வரோம்'' என்று கூறித் தன் இரு குழந்தைகளையும் கையில் பிடித்துக் கொண்டு கிளம்பிவிட்டாள் அவள்.

அவள் சாய்ந்து சாய்ந்து முழங்காலைச் சமாளித்து நடந்து சென்றது, அவளுக்குக் கடலைப் பார்க்க இருந்த ஆவலை விட, என்னை நிந்திப்பதுதான் குறிக்கோள் போலத் தோன்றியது.

வீட்டில் இருந்தால் ரேடியோ கேட்கலாம், புத்தகம் படிக்கலாம், எத்தனையோ செய்யலாம். அதை விட்டுவிட்டு இங்கே வந்து பேசாமல் அமருவதில் என்ன சுகம் இருக்கிறதோ? எனக்குப் புரியவில்லை.

பட்டுவின் சுபாவமே தனி. அவள் பிறந்த வீட்டினரும் அப்படி. அவள் அந்திக் கதிரவனைக் கண்டு மூர்ச்சை போடுவாள். அந்தகாரத்தைக் கண்டு அகமகிழ்ந்து போவாள். ''துப்பட்டி மாதிரி இருட்டுப் போர்த்துகிறது'' என்பாள்.

அந்திவானம் சிவப்பதும், இருள் வந்து கவ்வுவதும் அன்றாடம் நடப்பவைதாமே? என்னை மட்டும் தட்டுகிறாளோ?

நான் பையைக் காத்துக்கொண்டு அமர்ந்திருந்தேன். நிறையப் பேர் என்னைத் தாண்டித் தாண்டிச் சென்றார்கள். பை மேல் மணல் விழாமல் இருப்பதற்காக எனது துண்டை அதன் மேல் போர்த்தி விட்டு உட்கார்ந்திருந்தேன்.

ஒரு பெரியவர் கோலை ஊன்றிக் கொண்டு நேரே என்னை நோக்கி வருவதைப் பார்த்தேன். என் மீதே கால் வைத்து அப்பால் நடந்து போவார் போல நடந்து வந்தார். நான் எரிச்சலுடன் அவரைப் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அவர் ஊன்றி வந்த கைத்தடி நழுவிக் கீழே விழுந்து

—R. நாகசுந்தரம்

விட்டது. அவர் அதைக் குனிந்து தேடலானார். பக்கத்திலிருந்து ஒரு படகிலிருந்து நீட்டிக்கொண் டிருந்த குச்சி ஒன்று அவர் நெற்றியில் குத்திவிட்டது. நான் சட்டென்று எழுந்து அவரைப் பிடித்துக் கொண்டேன்.

"கண்ணு மங்கல். பரவாயில்லை. இப்படிச் சற்று உட்கார்திருக்கேன்" என்று சொல்லிக்கொண்டே அவர் என் அருகில் அமர்ந்து நெற்றியைத் தடவிக் கொண்டார்.

"ரொம்ப வலிக்கிறதா?" என்று கேட்டேன்.

"வலிக்கிறது. என்ன செய்ய முடியும்? இடிச்சால் வலிக்கத்தான் செய்யும்."

"கண்ணிலே பார்வையே இல்லையா?" என்று மெதுவாகக் கேட்டேன்.

"பத்திலே ஒரு பங்கு இருக்கு, ஆடரேஷன். செய்ய முடியாதுன்னு சொல்லிவிட்டார். நிழல் மாதிரி தெரிகிறது. சமாளிச்சுப் பேன். குச்சி ரொம்ப மெல்லிசு; பார்வைக் குத் தப்பிடுத்து."

"தனியாக வரலாமா?"

அவர் பேசாமல் மணலைக் குவித்தார். பிறகு சிரித்துக் கொண்டே, "மனுஷன் தனியாத்தான் இந்த உலகத்துக்கு வரான். ஒண்டியாகத்தான், இதை விட்டுப் போகிறான். நடுவிலே ஏனோ அப்படி மத்தவர்கள் மேலே விழுந்து ஒட்டிக் கொள்கிறான். இல்லை?" என்றார்.

"இதென்ன பெரிய வேதாந்தம்? பிறந்த குழந்தை தனக்குத் தானாகச் சாப்பாடு தேட முடியுமா?" என்று பதில் கேள்வி கேட்டேன், ஏளனமாக.

"உண்மை, உலகம் நடக்கணும்னுதான் பந்த பாசங்களை வச்சிருக்குது. ஆனாலும் அதையே கழுத்துச் சுருக்காக ஆக்கிவிடுகிறோம்."

அவருக்கு நான் ஏதும் பதில் சொல்வதற்குள் பட்டு தன் இரு குழந்தைகளுக்குச் சமானமாக ஓடிக்கொண்டு வந்து என் அருகில் 'பொத்' தென்று விழுந்தாள். மேல் மூச்சு வாங்குவது நிற்பதற்குள், "மாமா யார், தெரியலையே?" என்று கேட்டாள்.

அந்தப் பெரியவர் தாமாகவே தம் கண் விவரம் எல்லாம் சொல்லி முடித்தார்.

"உங்க முகத்தைப் பார்த்தால் எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கு" என்றாள் அவள்.

"பத்திரிகைகளிலே 'ரதி' என்று படம் போட்டு....." என்று ஆரம்பித்த அவர் சொல்லி முடிக்கவேயில்லை.

அதற்குள் பட்டு, "நீங்கதான் ஓவியர் 'ரதி'யா? எந்தத் தொடர்கதை வந்தாலும் உங்க கைச் சித்திரம் இருக்கிறதான்னு பார்த்துவிட்டுத்தான் நான் படிக்கவே ஆரம்பிப்பேன்" என்றாள்.

"அப்படியா? சந்தோஷம்" என்றார் அவர். அவருடைய கண்களில்தான் ஒளியில்லை, ஆனால் முகமெல்லாம் மகிழ்ச்சியில் மலர்ந்தது.

"பார்வை மங்கினதும் நீங்க இடிஞ்சு போகலையா?" என்று அவள் கேட்டாள்.

"எத்தனையோ நாள் பார்வையுடன் இருந்து எவ்வளவோ அழகை ரசித்திருக்கேன். அதை நெனைச்சுத் திருப்தியடைகிறேன்."

அப்போது ஓர் இளம் தம்பதிகள் எங்களைத் தாண்டிச் சென்றனர். எந்த இன்ப லோகத்திலே சஞ்சரிக்கிறவர்கள் போல் சிரித்துக்கொண்டே எங்களை உரசிக்கொண்டே சென்றனர். அந்தப் பெண்ணின் நீண்ட முன்றானை பறந்து 'ரதி'யின் மீது தழுவிக்கொண்டு சென்றது.

அவர்கள் பத்தடி சென்றதும், 'ரதி' பட்டுவைப் பார்த்து, "பொண் குள்ளமோ, ஆண் உயரமாக்கும்!" என்று கேட்டார்.

"அந்த அளவு உங்களுக்குத் தெரிகிறதில்லையா?"

"குள்ளமாக இருந்தால்தானே முந்தானை உட்கார்ந்திருக்கிறவர் மீது விழ முடியும்? உயரமாக இருந்தால் எட்டியிராதல்லவா?" என்று கூறிச் சிரித்தார் பெரியவர்.

"கலைஞர்கள் உணர்ச்சிமயமானவர்கள். நம்மைப் போல நேருக்கு நேர் பார்த்துத் தெரியவேண்டாம், ஒருத்தர் சொல்லித் தெரியவேண்டாம்" என்றாள் பட்டு, என்னைப் பார்த்துக் குத்தலாக.

நான் நேரே பார்த்தாலும் புரிந்து கொள்ள மாட்டேன் என்பது அவள் எண்ணம் போலும்! சுடச்சுட ஏதாவது சொல்லியிருப்பேன்.

ஆனால் அதற்குள், "நல்ல கை மணமுள்ள சமையல்காரர்" என்றார் ஓவியர், தாழ்ந்த குரலில். கவனம் திசைமாறியது.

பட்டு ஒரு முறை சுற்று முற்றும் பார்த்துவிட்டு, அதே தாழ்ந்த குரலில், "உங்களுக்குப் பின்னாடிதான் ஓர் அம்மாள் வத்தல்குழம்புஞ் சாதத்தை உருட்டிக் குழந்தைகள் கையில் வச்சிண்டிருக்கா" என்றாள்.

"வெந்தயம், பெருங்காயம், உப்பு, உறைப்பு, புளி; சுருதி சுத்தம்" என்று கூறிவிட்டுத் தம் மங்கலான பார்வையைப் பின் புறமாகத் திருப்பி நோக்கினார் பெரியவர்.

முப்பந்தைந்து வயதுப் பெண் ஒருத்தி நான்கு குழந்தைகளைத் தன்னைச் சுற்றி அமர்த்தி, கையில் சோறு படைத்துக் கொண்டிருந்தாள். என்னவோ கதை சொன்னாள் போலும்! எல்லாரும் உலசாகச் சிரிப்பது கேட்டது. அவ்வளவுதான். பொறுப்பாளா என் மனைவி? அங்கே போய்விட்டாள்.

"என்ன, பிக்னிக்கா? வாசனை ஜமாய்க்கிறது" என்றாள்.

"ஆமாம்; கட்டாயப் பிக்னிக்" என்றாள் அந்த அம்மாள்.

"என்ன அப்படி?"

"என் தங்கை பக்கத்திலே திருவல்லிக்கேணியிலே ஒரு ரூம்லே குடியிருக்கா. அங்கேதான் நாங்க அத்தனை பேரும் படுத்தாகணும். அதனாலே, இருக்கிற சாதத்தைப்

பிசைஞ்சு எடுத்துக்கொண்டு இங்கே வந்து விட்டேன். வீட்டிலேயே சாப்பிட்டால் சுத்தம் செஞ்ச இடம் உலராது. அதனாலே இப்படி இவர்களைப் போக்குக் காட்டி வச்சுண்டு டடுக்கிற சமயத்துக்கு வீட்டுக்கு அழைச்சுண்டு போவேன். விரிச்சுத் தயாரா இருக்கும். எல்லாம் அலுத்துப் போய் விழுந்து தூங்கும்'' என்று கூறிவிட்டுச் சிரித்தாள், அந்த அம்மாள்.

குழம்புஞ்சாதம் முடிந்து மோருஞ் சாதத்துக்கு வந்து விட்டார்கள் போலும். குப்பென்று புளிப்பு வாசனை நாசியை எட்டியது.

நான் சற்று நகர்ந்து கொண்டேன். மோர் புளித்தாலே எனக்குப் பிடிக்காது. டாதாம் அல்வா போல ருசித்துச் சாப்பிட்டார்கள். பிறகு குழந்தைகள் கை கழுவ அலைப்பக்கம் ஓடி விட்டார்கள்.

''நீங்க சாப்பிடலையா?'' என்பது பட்டுவின் விசாரிப்பு.

''சாப்பிடணும்.''

''கையை நீட்டுங்க, நான் உருட்டிப் போடறேன்'' என்று சொல்லிக்கொண்டே, என் மனைவி அங்குே சப்பணமிட்டு அமர்ந்து விட்டாள்.

''சரி'' என்று அந்தப் பெண்ணும் அருகிலிருந்த ஒரு பிளாஸ்டிக் பாத்திரத்திலிருந்த தண்ணீரில் கைகழுவி விட்டுச் சாப்பிட அமர்ந்தாள். பட்டுவின் பரோபகாரம் முடிந்து வரும் வரை நான் காத்திருந்தேன். பெரியவர் என்னவோ நினைவுடன் சிரித்துக் கொண்டார்.

''என்ன?'' என்று கேட்டேன்.

''ஒண்ணும் இல்லை, உங்க மனைவியை நெனச்சுப் பார்த்தேன் நல்ல ரசிகை. உங்க வாழ்வில் சோகமே வரக் காரணமில்லை. என் ரசனைதான் என்னை இன்னைக்கும் காப்பாத்தி வர்றது'' என்றார் மாஜி ஓவியர்.

''ஆமாம். அவள் ஒண்ணும் இல்லாததுக்கெல்லாம் உள்ளத்தைப் பறி கொடுப்பாள். அவள் ஒரு தினுசு'' என்றேன்.

அவர் தமக்குள் சிரித்துக் கொண்டார். ''எதை நாம் எப்படி மதிப்பிடுகிறோமோ அதைப் பொறுத்திருக்கிறது. இருப்பதை ரசிக்கிறார், இல்லாததுக்கு வருந்தவில்லை, அந்த வத்தல் குழம்புக் குடும்பம் போல'' என்றார்.

என் மனத்திலே ஒரு ஜன்னல் திறந்த மாதிரி இருந்தது. என்னைச் சுற்றிப் பார்த்தேன். பட்டுவும் அந்த அம்மாவும் கைகழுவினர். என் குழந்தைகளும் அவர்கள் குழந்தைகளும் குசாலாகச் சிரித்துக்கொண்டு, ஆகாயத்தையும், தொடுவானத்தையும் மனிதக் கும்டலையும் ஆச்சரியமாகப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

''கொஞ்சம் இருங்க. அவர்கள் எல்லாரையும் கொஞ்ச நேரம் புடிச்சுப் போடுங்க. இதோ வந்து விட்டேன்'' என்று கூறிக்கொண்டே அவசர அவசரமாக எழுந்து ஐஸ்கிரீம்காரனைத் துரத்திக்கொண்டு ஓடினேன்.

நான் அவனுடன் திரும்பியபோது எல்லாரும் காத்திருந்தனர். முதலில் அந்தப் புதுக் குடும்பத்தினர் சங்கோசப்பட்டனர்.

''பரவாயில்லை, சாப்பிடுங்க. இன்னிக்கு எங்கள் கல்யாண தினம்'' என்று பட்டு வற்புறுத்தினாள். பக்கோடாவை ஒரு வட்டம் கொடுத்தாள்.

பிறகு ஐஸ்கிரீம் வாங்கித் தந்தேன். குழந்தைகள் ஆசையாகச் சுவைத்தனர்.

'ரதி' என்னைப் பார்த்து, ''எத்தனை வருஷம்?'' என்று கேட்டார்.

''பத்து வருஷம் முடியறது.''

''ஏன் அம்மா, இது என்ன விழான்னு பேரு?''

''தெரியாது, மாமா. நல்ல நாள். அவ்வளவுதான்'' என்றாள் பட்டு.

''ஒளி விழான்னு வச்சுக்கோங்க'' என்றேன்.

''ஏன்?''

''நான் இங்கே வந்தப்ப என் இதயம் இருள் சூழ்ந்திருந்தது. இப்ப ஒளிமயமாகிவிட்டது. அதனால்தான்.'' என்றேன், பூடகமாக.

''என் வாழ்த்துக்கள்'' என்று கூறி என் கையைப் பற்றினார் பெரியவர். ஐஸ்கிரீம் தீர்ந்ததும் எங்கள் கூட்டம் கலைந்தது.

''வாருங்கள், எங்க வீட்டுக்கு. இடம் கொஞ்சந்தான், மனசு தாராளம்''' என்றாள் அந்தப் புதிய சிநேகிதி.

''கட்டாயம் வருவோம்'' என்று பட்டு உறுதியளித்தாள்.

''நானும் கௌம்பறேன். உங்களைப் பார்த்தது எனக்கு மன நிறைவைத் தருகிறது ''என்று கூறி விடை பெற்றுக் கொண்டார் ஓவியர் 'ரதி'

''மாமா, நீங்க இருட்டிலே தைரியமாக் கௌம்பக் கூடாது'' கடிந்தாள் பட்டு.

''பிறவிக் குருடர்கள் எல்லாம் என்ன என்ன சாதனைகள் செய்யறா? இந்த ஆண்டு எத்தனை பேர் வாசிக்கையை டி.வி.யிலும் ரேடியோவிலும், பத்திரிகையிலும் பார்த்தோம். வருவதை எதிர்நோக்க மனசிலே தைரியம் இருக்கும் வரை ஆபத்து இல்லை. உள்ளத்திலே ரசனை இருக்கும் வரை அலுப்பும் சலிப்பும் இல்லை. என்ன, நான் சொல்றது?'' என்று கேட்டார், அவர்.

ஏதோ கோவில் சந்நிதியில் தீபாராதனையைப் பார்ப்பது போல மெய்ம்மறந்து நின்றேன். வாடகைக்காக வீட்டுக்காரன் நாளைக்குத்தானே வருவான்? நாளை பார்ப்போம்.

என் மனைவியின் கையைப் பிடித்தேன். ''ரெயில் விளையாட்டு ஆட இப்ப நேரமில்லை. வாங்க, போகலாம்'' என்று உரைத்தபடியே அவள் கன்னங்குழியச் சிரித்துக் கொண்டு, தன் பிள்ளையைத் தூக்கிக் கொண்டாள். பெண்ணைக் கைப்பிடித்து அழைத்துக் கொண்டு நான்பின்தொடர்ந்தேன். தொடுவானத்தில் கப்பல்களின் ஒளி தெரிந்து இன்பமூட்டியது.

*

—நாகசுந்தரம்




தூவியதுபோல மென்மையான மணம் அந்த அறையை நிறைத்தது. உள்ளே வந்த கிருஷ்ணதேவ ராயர் ஒரு கணம் மாடத்தின்மீது சாய்ந்து நின்ற ராணி செஞ்சு லட்சுமியின் பின்னழகில் மயங்கி நின்றார். அவர் அழைத்ததுகூட அவள் காதில் விழவில்லை. அவள் அப்படி நின்ற அழகைக் கலைக்க மனமின்றிப் பார்த்தபடி நின்றார் கிருஷ்ணதேவ ராயர்.

அந்தக் கேசத்தின் சுருள், தோளின் சரிவு, முதுகின் வளைவு, இடையின் ஒயில், முழங்காலின் குழைவு, உயர்ந்த பாதங்களின் சரிவு எல்லாமே அவரை ஒரு கணம் மயக்கி மெய்ம் மறக்கச் செய்தன. கழுத்திலிருந்து வழிந்து தோளின் வளைவில் தலைப்பு நழுவிப் பின்னழகைக் காட்டிற்று.

''பிரியே!'' என்று அழைத்து [illegible] அருகில் போய் அந்தத் தலைப்பைச் சரிசெய்தார் அரசர். அந்த அழைப்புக்கும் பதில் இல்லை. அந்த மென்முதுகில் சாய்ந்தபோதும், அள்ளி அணைத்தபோதுங்கூடப் பெருமூச்சுத் தான் பதில். மல்லிகைச் சரத்தைக் கொண்டையின் வளைவில் பதித்த போதிலும், பெருமிதத்தால் பூரித்த அங்கங்களும் துடிக்கும் கண்ணிமைகளுந்தான் பதில் கூறின.

''உன் கோபம் எனக்குப் புரிகிறது லட்சுமி! நாளை நான் வேட்டைக்குப் போகும் போது உன்னையும் அழைத்துச் செல்லுகிறேன். அவ்வளவுதானே? காவலகத்தின் முட்புதர்களும், கற்களும் உன் பாதங்களை உறுத்துமே என்றுதான் சொன்னேன். உன் பிடிவாதமோ என்னை இப்போது அந்த முள்ளைப் போல உறுத்துகிறது. நீயும் வா! வனபோஜனத்துக்கும் ஏற்பாடு செய்யச் சொல்லி இருக்கிறேன்.''

குழந்தையைப் போலக் கைகொட்டிக் 'களுக்' என்று சிரித்த அரசரை அப்படியே தழுவி அணைத்துக்கொண்டாள் செஞ்சு லட்சுமி. அவளுடைய இருகைகளும் அரசரின் முகத்தைப் பற்றி அருகே இழுத்துக்கொண்டன. இதழ்கள் ஆசையாகப் பதிந்து அழுத்தின. அவளுடைய ஆசை நிறைவேறிவிட்டது.

[illegible]

—நாகசுந்தரம்




திரவியதுபோல மென்மையான மணம் அந்த அறையை நிறைத்தது. உள்ளே வந்த கிருஷ்ணதேவ ராயர் ஒரு கணம் மாடத்தின்மீது சாய்ந்து நின்ற ராணி செஞ்சு லட்சுமியின் பின்னழகில் மயங்கி நின்றார். அவர் அழைத்ததுகூட அவள் காதில் விழவில்லை. அவள் அப்படி நின்ற அழகைக் கலைக்க மனமின்றிப் பார்த்தபடி நின்றார் கிருஷ்ணதேவ ராயர்.

அந்தக் கேசத்தின் சுருள், தோளின் சரிவு, முதுகின் வளைவு, இடையின் ஒயில், முழங்காலின் குழைவு, உயர்ந்த பாதங்களின் சரிவு எல்லாமே அவரை ஒரு கணம் மயக்கி மெய்ம் மறக்கச் செய்தன. கழுத்திலிருந்து வழிந்த தோளின் வளைவில் தலைப்பு நழுவிப் பின்னழகைக் காட்டிற்று.

''பிரியே!'' என்று அழைத்த வண்ணம் அருகில் போய் அந்தத் தலைப்பைச் சரிசெய்தார் அரசர். அந்த அழைப்புக்குப் பதில் இல்லை. அந்த மென்முதுகில் சாய்ந்தபோதும், அள்ளி அணைத்தபோதுங்கூடப் பெருமூச்சுத்தான் பதில். மல்லிகைச் சரத்தைக் கொண்டையின் வளைவில் பதித்த நேரத்திலும், பெருமிதத்தால் பூரித்த அங்கங்களும் துடித்த கண்ணிமைகளுந்தான் பதில் கூறின.

''உன் கோபம் எனக்குப் புரிகிறது லட்சுமி! நாளை நான் வேட்டைக்குப் போகும் போது உன்னையும் அழைத்துச் செல்லுகிறேன். அவ்வளவுதானே? கானகத்தின் முட்புதர்களும், கற்களும் உன் பாதங்களை உறுத்துமே என்றுதான் சொன்னேன். உன் பிடிவாதமோ என்னை இப்போது அந்த முள்ளைப் போல உறுத்துகிறது. நீயும் வா! வனபோஜனத்துக்கும் ஏற்பாடு செய்யச் சொல்லி இருக்கிறேன்.''

குழந்தையைப் போலக் கைகொட்டிக் 'கலீர்' என்று சிரித்து அரசரை அப்படியே தழுவி அணைத்துக்கொண்டாள். செஞ்சு லட்சுமி. அவளுடைய இருகைகளும் அரசரின் முகத்தைப்பற்றி அருகே இழுத்துக்கொண்டன. இதழ்கள் ஆசையாகப் பற்றி அழுந்தின. அவளுடைய ஆசை நிறைவேறிவிட்டது.

எப்போதுமே இளைய ராணி ஒரு குழந்தையைப் போலத்தான் நடந்துகொள்வாள். அந்தக் குரல் கொஞ்சும். அந்த நடை பூப் போலப் பதியும். அந்த இளமையின் வனப்பும், பால் சதையின் அழுந்ததலும், கள்ளமில்லாத சிரிப்பும், உலகமறியாத குழந்தையின் மென்மையையும் இனிமையையும் நினைவுபடுத்தும்,

அரசருக்கு அவள் வயதில் இருபது ஆண்டுகள் இளையவள். அந்த இடைவெளியே அந்த ஆசை கட்டுக்கடங்காமல் பெருகத் தூண்டுகோலாக இருந்தது. அந்தப்புரத்தில் இளையராணியாக இடம் பெற அவளை வரித்த போது, இன்னும் யௌவனத்தின் பசுமையை ஒட்டி முழுமை பெறாத அந்த அழகே அவரைக் கவர்ந்தது. சூரியனின் கதிரொளிபட்டு மெல்ல மெல்ல மலரும் தாமரையைப்போல, அந்த அழகு அவர் அணைப்பில் கொஞ்சம் கொஞ்சமாக முழுமை பெற்று மலர்ந்து விட்டது.

செஞ்சுலட்சுமி கேட்பதையெல்லாம் கொண்டு வந்து கொடுப்பார் கிருஷ்ண தேவராயர். அபூர்வமாக எது கிடைத்தாலும் கொண்டு வந்து அவளுக்கு அழகு செய்து, பெருமையில் மலரும் அந்த முகத்தையும் அழகு பார்ப்பார். பிடிவாதமான அந்த ஒரு வேண்டுகோளைத்தான் அவரால் ஏற்க முடியவில்லை. கானகத்துக்கு உடன் வந்து அந்த மெல்லுடலின் மென்மை வதங்கி அவதியுறுவதை அவரால் எண்ணிக்கூடப் பார்க்க முடியவில்லை. இப்போது அந்த மறுப்பும் தளர்ந்துவிட்டது.

காட்டின் நெருங்கிய மரங்களின் கிளை நிழலில், பாறைமீது உட்கார்ந்து கொண்டிருந்தாள் செஞ்சுலட்சுமி. முள்குத்தி இரத்தம் கசிந்த அவள் பாதத்தை மடியில் எடுத்து வைத்துக்கொண்டு, முள்ளை வலியின்றி எடுக்க முயன்றுகொண்டிருந்தார் அரசர். முள் குத்திச் சிவந்த பாதத்துக்கு இணையாக, வேதனையால் அவள் முகமும் சிவந்திருந்தது. அந்த அழகு நெஞ்சுக்குத் தந்த இனிமையும், வலியின் வேதனை கொடுத்த துயரமுமாக, அரசரின் மனம் இரண்டுபட்டது; பாறையால் தடுக்கப்பட்டு ஓடும், பிரிந்த மலையாற்றின் வெள்ளம்போல,

காதலர்கள் ஒன்றித் தம்மை மறந்து அமர்ந்திருக்கும் அந்தக் காட்சியைப் பார்த்து ரசித்தபடியே வந்து நின்றார், ஆஸ்தான கவி நந்தி திம்மண்ணா. அவர் கையில் புதிதாகப் பொய்கையிலிருந்து பறித்துக்கொண்டு வந்திருந்த தாமரை இலை, நீர் சிந்திக்கொண்டிருந்தது.

''அரசே! தங்களுக்கும் அரசிக்கும் குளிர் காற்றுப்பட நான் சற்று இந்தத் தாமரை இலையால் வீசட்டுமா? முள் வெளியே வராதா என்று ஏங்கும் இளைய ராணியும், முள் வெளியே வராமல் இந்த அழகுப் பாதங்களை இன்னும் கொஞ்சம் பிடித்தபடியே இருக்கமாட்டோமா என்று ஏங்கும் நீங்களும், இந்தக் காற்றுப் பட்டாலாவது இந்த இன்மயக்கத்திலிருந்து விடுபடுவீர்களா?'' என்று புன்னகையுடன் கேட்டார் திம்மண்ணா.

சட்டென்று எழுந்து முகத்தில் நாணம் படர விலகி நின்றாள் செஞ்சுலட்சுமி. ''திம்மண்ணா! நீ சொல்வதும் சரியே. இந்த இன்மயக்கத்தில் என்னை ஆழ்த்தவே, காலில் முள் தைத்ததுபோல இளைய ராணி நடித்தாள் என்று தோன்றுகிறது!'' என்று கூறிக் குலுங்கக் குலுங்கச் சிரித்தார் கிருஷ்ண தேவராயர்.

அரண்மனைக்குத் திரும்பிய பிறகும் அரசியின் மனத்திரையில் அந்த அழகுச் சித்திரம் அப்படியே பதிந்து நின்றது. அவ்வளவு பெரிய சாம்ராஜ்யத்தின் பேரரசர் அவளுடைய காலைப் பிடிப்பதா? அவள் பாதத்தை மடியில் வைத்துப் பெருமையுடன் கொஞ்சுவதா? காதல் மயக்கமும், உணர்ச்சிகளின் வேகமும் அந்த அளவுக்கு அவரை அவளுடைய அடிமையாக்கிவிட முடியுமா?

அதை ஒரு சோதனையாகவே செய்து பார்க்க எண்ணினாள் செஞ்சுலட்சுமி. அன்று இரவு அந்தப்புரத்தில் அவளுடைய மாளிகைக்கு வருவதாக அரசர் செய்தி அனுப்பி இருந்தார். அந்த இரவின் மயக்கத்திலேயே, அவரைச் சோதித்துப் பார்த்துவிடவும் முடிவு செய்திருந்தாள் இளைய ராணி.

மாலையில் வாசனைத் திரவியங்கள் கலந்த நீரில் ஆடி, உடலில் மென்மணம் மணக்க, கூந்தலில் மலர்வளையம் மணக்க, அங்கங்களின் அழகு மெருகிட ஆபரணங்களை அணிந்துகொண்டாள். அந்தப் பொன்னுடலின் வனப்பும் புஷ்டியும் தெரியத் துகில் அணிந்து, மஞ்சத்தில் படுத்து, காலைத் தந்தக் கட்டிலுக்குச் சற்று வெளியே நீட்டிக் கொண்டிருந்தாள்.

அதுதான் சோதனை. அந்தக் காலுக்கு நேரே மன்னர் பெருமானின் முழு உயர வண்ண ஓவியம் வைக்கப்பட்டிருந்தது. அரசர் வரட்டும். அவளை அந்த நிலையில் பார்க்கட்டும். அவருடைய உணர்ச்சிகள் எப்படி மாறுகின்றன என்பதையும் பார்க்கலாம். குழந்தை உள்ளத்தின் குறும்புத் தனத்தில் எழுந்த விளையாட்டுச் சோதனை அது. அரசரின் வருகையை ஆவலோடு எதிர்பார்த்து, அரைக்கண் மூடிப் படுத்திருந்தாள்.

முத்துமணிகள் கோத்த அறையின் திரையை மெல்ல விலக்கி, சத்தமிடாமல் உள்ளே வந்த கிருஷ்ணதேவ ராயர் ஒருகணம் அந்த நிலையைக் கவனித்தார். அதுவரை அவர் மனத்தில் பொங்கித் ததும்பிய ஆசையின் வேகம் சட்டென்று அடங்கிற்று. தம்மை அப்படி வெளிப்படையாக அவமதிக்க எண்ணிய செஞ்சுலட்சுமியின்மீது சினம் பொங்கி எழுந்தது. கோப வேகத்தில் உடல் பற்றி எரிந்தது.

வந்துபோனது அரைத் துயிலில் ஆழ்ந்த அரசிக்குத் தெரியும்படி, பாதங்களைக் கனமாகவே ஊன்றிச் சத்தமிட்டபடி திரும்பி விட்டார் அரசர். அவரைக் குரல் குழையக் குழைய அழைத்தபடி, வாசல்வரை ஓடி வந்த இளைய ராணியால் அவரைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

ஏழு நாட்கள் ஆகிவிட்டன. அரசர் அந்தப்புரத்துக்கு வரவே இல்லை. செஞ்சுலட்சுமியின் பார்வையில் படவே இல்லை. அரசவையில் அமர்ந்து அவருக்குச் சமமாக இடம் பெறும் பாக்கியம் மூத்த ராணிக்கு உண்டு. அதனால் அவளுக்கு அந்தத் திருமுகத்தைக் காணும் வாய்ப்பும் கிடைத்து விடும், ஆனால் இளைய ராணிக்கு அவருடைய

மனமென்னும் பீடத்தில் அமரத்தான் உரிமை உண்டு. அவளால் அவரைச் சந்திக்கவே முடியவில்லையே!

நாண் கழன்ற வில்லைப் போல் செஞ்சுலட்சுமி ஓய்ந்து சரிந்து மஞ்சத்தில் விழுந்துவிட்டாள். காற்றில்லாது அடங்கி மடிந்துவிட்ட வெற்றிக்கொடியைப் போல அவளது இளமை



முறுக்குத் தளர்ந்துவிட்டது. அவள் வைத்த சோதனையில் அரசருக்குத்தான் வெற்றி. அவள் எண்ணி இறுமாந்திருந்ததைப் போல அரசர் அந்த அழகுக்கு அடிமையாகி விடவில்லை.

துக்கமின்றித் தனியளாக மஞ்சத்தில் புரளும்போது மனம் வேதனைப்படும். பசியின்றி உணவும் பானமும் வேண்டாமல் வயிறு ஒட்டிச் சுருங்கும்போது, அந்த இடையை ஆசையாக வளைத்த மன்னரின் கைவிரல்கள் ஞாபகத்துக்கு வரும். உடல் வலிமையின்றி நடக்கத் தடுமாறும் பாதங்களை நோக்குங்கால், அவற்றைப்பற்றி முள்ளெடுத்த அரசரின் கைகள் நினைவில் நிழலாடும். அந்தப் பாதங்களின்மீதே கோபமும் எழுந்து குமுறும். அவற்றை அரசரின் ஓவியத்துக்கு முன், மனத் திமிருடன் நீட்டியதால் அல்லவா, அரசரின் அளவிலாத கோபத்துக்கு ஆளாக நேரிட்டது.

சேடிமூலம் திம்மண்ணுவுக்குச் செய்தி சொல்லி அனுப்பினாள், அந்தக் கவியுள்ளந்

தான், மன்னரின் மனவேதனைக்கு மருந்தளிக்க முடியும் என்பது அவளுடைய நம்பிக்கை.

செய்தி தெரிந்தபின் இரண்டு நாளாக மன்னரைச் சந்திக்கத் துடித்துக்கொண்டிருந்தார் திம்மண்ணா, சந்தர்ப்பம் அமையவில்லை. கடைசியாக நர்தவனத்தில் தனியே உலாவிக்கொண்டிருந்த கிருஷ்ணதேவ ராயர், அவர் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்தார்; ஆஸ்தான கவி அழைத்துவிட்டார். ஆனால் வந்த பிறகும் அரசர் வாய் திறக்கவில்லை, அலைபாயும் உள்ளத்தைக் காட்டும் அமைதியற்ற நடை நிற்கவில்லை.

''அரசே! தங்களுக்கு நான் ஒரு கதை சொல்லலாமா?'' என்று கேட்டார் திம்மண்ணா. அதைக் கேட்டு அரசர் வியப்புடன் திரும்பிப் பார்த்தார். சம்மதம் தந்துவிட்டது போலத் தலை சற்றே அசைந்தது. திம்மண்ணா சொல்லத் தொடங்கினார்.

''சிவதனுசை நாணேற்றி முறித்த இராமனுக்கு மாலையிடச் சபா மண்டபத்துக்கு வருகிறாள் சீதாதேவி. ஜனக மகாராஜனின் குரு சதானந்தர், மாலை ஏந்தி நின்ற இளவரசியை மாலை அணிவித்தபின், இளவரசன் இராமனின் பாதங்களைத் தொட்டு வணங்கச் சொல்லுகிறார். சீதாதேவி தயங்குகிறாள். இதைக் கண்டு இராமனின் முகம் சுருங்குகிறது. தம் பாதங்களைத் தொட்டால் இளவரசியின் பெருமை பங்கப்பட்டுவிடும் என்று எண்ணுகிறாளோ என்று நினைக்கிறார். ஒரு கணந்தான். உடனே அவருக்கு ஜானகியின் தயக்கம் புரிந்துவிடுகிறது. சாதாரணக் கல்லின்மீது இராமனின் பாதம் பட்டதும், அகலிகை அழகான பெண்ணாக மலர்ந்து வெளியே வந்துவிட்டாள் அல்லவா? தன் கையில் அணிந்திருந்த வைர மோதிரம், அந்தப் பாதத்தில் பட்டதும் நிகரிலா அழகி ஒருத்தி போட்டிக்கு வந்துவிட்டால் தன் கதி என்ன ஆவது? அதுவே ஜனக குமாரியின் தயக்கத்துக்குக் காரணம். சீதைக்குத் தம்மிடம் தோன்றி இருக்கும் அளவிலாத அன்பைக் கண்டு இராமர் புன்னகை பூக்கிறார்.

துளசி இராமாயணத்தில் பால காண்டத்தில் இந்தச் சுலோகம் வருகிறது.

"சௌ-சகீம் கஹ ஹிம் ப்ரபு பத
கஹூ சீதா
கரதி ந சரன் பரஸ் அதி பீதா
தோ-கௌதம் தீய் கதி ஸுததி கரி
நஹிம் பரஸதி பக்பானி
மன் பி ஹஸே ரகுவம்சமனி ப்ரீதி
அலௌகிக ஜானி."

அதைக் கேட்டதும் கிருஷ்ணதேவ ராயரின் முகவாட்டம் மறைந்துவிட்டது. சூசகமாக எதையோ திம்மண்ணா சொல்ல முயலுவது புரிந்தது. இனிய ராகத்தை அநுபவிப்பது போலக் கண்கள் மூடின. திம்மண்ணாவும் புரிந்துகொண்டுவிட்டார். சொல்ல வந்த விஷயத்தை மெதுவாக மேலே கூறத் தொடங்கினார். அதுவும் ஓர் அழகிய சிறுகதைதான்,

''பாரிஜாதம் கிடைக்கவில்லை என்ற கோபத்தால் சத்தியபாமா மஞ்சத்தில் முகம் கவிழ்ந்து குப்புறப் படுத்திருக்கிறாள். அவளை நாடிவந்த கிருஷ்ணனுக்கு அவளை எப்படிச் சமாதானப்படுத்துவது என்று தெரியவில்லை. அணைத்து இதழ் பதிக்க வேண்டிய முகமோ தலையணையில் பதிந்து கிடக்கிறது. மலர் போன்ற அந்தப் பாதத்தை எடுக்கிறான். அதன் தாமரைச் சிவப்பில் இதழ் பதித்து முத்தமிடுகிறான். அந்தக் குறுகுறுப்பில் சிரித்து முகம் நிமிருகிறாள் பாமா. பகவான் கிருஷ்ணனுக்கு வெற்றி கிடைத்துவிட்டது! இதழ்கள் கலந்து ஒற்றும் வேகத்தில் கோபம் தணிந்துவிட்டது.''

கிருஷ்ணதேவ ராயரின் முகத்தில் குறுநகை தவழ்ந்தது. கவியின் உள்ளம் புரிந்துவிட்டது. காதலுக்கு இலக்கணம் வகுக்க முடியாது என்று சுட்டிக் காட்டுகிறார், திம்மண்ணா. கௌரவம் பார்க்க அங்கே இடம் இல்லை என்று சொல்லாமற் சொல்லுகிறார். காதலி செஞ்சுலட்சுமி காவலன் கிருஷ்ண தேவராயரை அவமதிக்கவில்லை. செல்லமாகச் சீண்டி விளையாடி இருக்கிறாள்; கோபத்துக்கும் கௌரவத்துக்கும் அங்கே இடம் இல்லை; அதை அடையாளம் காட்ட ஓர் இராம கதை; ஒரு கிருஷ்ணன் கதை.

அரசரின் மனம் இளகிவிட்டது. அப்போதே அந்தப்புரத்துக்குச் செல்ல மனத்தில் வேட்கை எழுந்தது. விரகவேதனைக்குக் காரணம் காம தேவன். அதைத் தீர்ப்பவனும் அவனே ஆகிறான்; உலக உயிர்களைக் கோடையில் கொளுத்தும் கதிரவன், பகலின் முடிவில் நீலமேகங்களின தண்மையில் சுகிப்பதைப் போல.

முத்துமாலை ஒன்றைக் கழற்றிக் கொடுத்தார் கிருஷ்ணதேவ ராயர். திம்மண்ணா அதை வாங்கிக் கொள்ளவில்லை.

''கவியரசே, என்ன தயக்கம்? தங்கள் சொல் முத்துக்கு ஈடாகாது இது.''

''அரசே! தாங்கள் அவ்வாறு சொல்ல வேண்டாம்.''

''பின் தாங்கள் தயங்கக் காரணம்?''

''நான் இயற்ற விருக்கும் 'பாரிஜாதாபகரணம்' என்ற கிருஷ்ணனின் காதல் காவியத்துக்கு ஒரு துளியாக, இதைக் கோடி காட்டினேன். தங்கள் ஆசியுடன் இதை நாளை முகூர்த்த வேளையில் தொடங்க விரும்புகிறேன்.''

''என்னுடைய ஆசி பரிபூர்ணமாக உண்டு, திம்மண்ணா!''

''ஒரு சிறு வேண்டுகோள். இந்தக் காவியத்துக்கு வித்தாக அமைந்தது, தங்களுக்கும் இளைய ராணிக்கும் இடையே ஏற்பட்ட ஊடல். இந்தக் காவியத்தை நான் தொடங்கும் போது தாங்களும் தேவியும், மலர்களால் அலங்கரித்த வெள்ளி ஊஞ்சலில் அமர்ந்து, ஒருவரையொருவர் பார்த்து ரசித்தபடி, அநுபவ இன்பம் கற்பனையில் ததும்பக் கேட்க வேண்டும்.''

வாய்விட்டுச் சிரித்து ஆஸ்தான கவியை இறுக அணைத்துக் கொண்டார் கிருஷ்ணதேவ ராயர்.

*

Edited and Published by R. Narayanaswamy, for and on behalf of the Kalaimagal Office and Printed at M.L.J. Press Private Ltd., 87, Mundakakanni Amman Koil Street, Madras 600 004